பரமபதிதுணை.

# சீவகசிந்தாமணி.

சீவகனது (சரித்திரத்தையுணர்த்தும்) காவியம். சிந்தாமணிகருதியது
கொடுக்கும் ஒருவகைநிதி. இப்பொருட்பெயர் இரப்போர்குறையை யொழி
த்துப் பெருஞ்செல்வந்தருதல்போலக், கற்போர் அறியாமைக் குறையையொ
ழித்துச் சொற்சுவை, பொருட்சுவையென்னும் இவற்றையுணரு முணர்ச்சிச்
செல்வத்தைத்தரும் இக்காவியத்தின் மேல்நின்று உவமையாகுபெயராய் இந்
நூற்குக்காரணக்குறியாயிற்று. சீவகனது எனவிரிதலால் சீவகசிந்தாமணியெ
ன்னுந்தொடர் செய்யுட்கிழமையென்னும் பொருட்பிறிதின் கிழமைப்பொரு
ளில்வந்த ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். னகரக்கேடு "உயிரீ
றாகிய வுயர்திணைப்பெயரும்—புள்ளியிறுதியுயர்திணைப்பெயரும் — எல்லாவ
ழியுமியல் பெனமொழிப" எனத்தொல்காப்பியம் எழுத்ததிகாரம் தொகைம
ரபில்வருஞ் சூத்திரத்தில் "உயிரீறுபுள்ளியிறுதி" என்றமிகையால், நன்னூ
லில் "சிலவிகாரமாமுயர்திணை" என்றவிதியால். சொற்சுவை—குணம்,
அலங்காரம் எனவிருவகைப்படும். சீவனது சரித்திரம் என்றது "மீனேறு
யர்த்த கொடிவேந்தனை வென்றபொற்பிற்—றானேறனையானுளன் சீவகசாமி
யென்பான்—வானேறநீண்ட புகழான் சரிதம்மிதனைத்—தேனூறநின்று தெ
ருண்டாரவை செப்பலுற்றேன்" எனவருஞ் செய்யுளால் உணர்க.

## கோவிந்தையார் இலம்பகம்.

கோவிந்தையார் நந்தகோன்புத்திரி. இலம்பகம் நூன்முடிப்பு. இலம்ப
கம் அசைவு. அதுதொழிலாகுபெயராய்ப் பலமலராற்றொடுத்த மாலைமேல்
நிற்றலால் தொழிலாகுபெயர், அது உவமிக்கப்படு பொருளாகிய பலசொல்
லாற்றொடுத்த செய்யுள்மேல் நிற்றலால் உவமையாகுபெயராய்ப் (பிண்டமும்
பிண்டித்தபொருளும் வேறன்மையால்) சிறுபாகமாகிய நூன்முடிபுக்குக்கார
ணக்குறியாய்வந்தது. கோவிந்தையாரை மணம்புரிந்த இலம்பகம் எனவிரித
லால் எய்தப்படுபொருளில்வந்த உருபும்பயனுந்தொக்கஇரண்டாம்வேற்றுமை
த்தொகைநிலைத்தொடராகக்கொள்க. இலம்பகம் வடசொல். நூன்முடிபு
படலம். பிண்டம் நூன்முடிபு. பிண்டித்தபொருள் செய்யுள். கோவிந்
தையார். கோவிந்தையென்னும் இயற்பெயர் முன்வந்த பலர்பால் முடிபா
கிய ஆர் என்னும் இடைச்சொல் உயர்த்தற்பொருள் மேல்நின்றது. இவ்வி
லம்பகம் வீரமகளைப் புணர்ந்தமையையுணர்த்தி நிற்றலால் வாகைத்துறையி
லமையும்.

(1) ஆர்வவேரரிந்தச்சணந்திபோய்
வீரன்றாணிழல்விளங்கநோற்றபின்
மாரிமொக்குளின்மாய்ந்துவிண்டொழச்
சோர்வில்கொள்கையான்றோற்றநீங்கினான்.

இ - ள். அச்சணந்திபோய்—ஆரியநந்தி இவ்விடத்தினின்றும் போய், வீரன்தாள் நிழல்விளங்க—ஸ்ரீவர்த்தமானஸ்வாமிகள் சமவசரணத்தில் விளங்கும்படி, ஆர்வம்வேர் அரிந்த (பிறப்பிற்குக் காரணமாகிய) ஆசையென்கிற வேரினைமுற்றுங் களைந்து, நோற்றபின் — தவஞ்செய்தபின்பு, சோர்வுஇல் கொள்கையான் (நோற்றலில்) தளர்ச்சியில்லாத அக்கொள்கையை யுடையவன், விண்தொழ—தேவர்கள்வணங்க, மாரிமொக்குள் இன்மாய்ந்து—நீரிற்றோன்றியகுமிழிபோலமறைந்து, தோற்றம் நீங்கினான்—பிறவியினின்று நீங்கினான்.

(நச்சினார்க்கினியர் உரை) அச்சணந்தி இவ்விடத்து நின்றும்போய், தாணிழலிலேவிளங்கும்படி வேரையரிந்து நோற்றபின்பு, அக்கொள்கையான், விண்டொழமொக்குளின்மாய்ந்து பிறவிநீங்கினான் என்க.

நீரிற்றோன்றிய நீர்க்குமிழி அந்நீரிலொடுங்கிப் புலப்படாமைபோல, முத்தியடையுங்காலத்தில் அவர் திருமேனியி லொடுங்கிப் புலப்படாது மறைதலின் மாரிமொக்குளின் மாய்ந்தென்றார். நோற்ற இறந்தகாலப்பெயரெச்சம் நோல்பகுதி, தகரமெய் இடைநிலை, லகரமும் தகரமும் றகரமாகத் திரிதல் சந்தி, அ எச்சவிகுதி. இது பிறபெயர்கொண்டது. இன் உருபு ஒப்புப்பொருட்டு. விண் இடவாகுபெயராய்த் தேவர்கள்மேல் நின்றது. கொள்கையான் என்பதின் முதலில் அகரச்சுட்டுத் தொகுத்தல். மாய்ந்து இறந்தகால வினையெச்சம், மாய் (மறைவு) பகுதி, நகரமெய்சந்தி, தகரமெய் இடைநிலை, உ எச்சவிகுதி. தோற்றம்நீங்கினான் நீக்கப்பொருளில்வந்த ஐந்தாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். ஸ்ரீவர்த்தமானஸ்வாமிகள் இருபத்துநான்காந் தீர்த்தங்கரர். சமவசரணம் பூமிக்கு, ஐயாயிரம்வில்லுயரத்தின்மேல் பன்னிரண்டுயோசனை யளவுள்ளதாய்ச்சௌதருமேந்திராதிதேவர்களால் நிருமிக்கப்பட்ட சினாலயம். இதற்குப் பூமியிலிருந்து இருபதினாயிரம்சோபானமுள்ளதென்பார். இதனால் சீவகனாசிரியனாகிய அச்சணந்திமுத்தியடைந்தது கூறப்பட்டது. (க)

(2) நம்பனித்தலைநாகநன்னகர்ப்
பைம்பொனோடைசூழ்பருமயானையுஞ்
செம்பொனீள்கொடித்தேரும்வாசியும்
வெம்பவூர்ந்துலாம்வேனிலானினே.

இ - ள். நம்பன்—சீவகன், இதலை—இவ்வுலகில், நாகம்நல்நகர்—தேவருலகுபோலப்பொலிவுவாய்ந்த இராசமாபுரத்தில், பைம்பொன் ஓடைசூழ்—பசியபொன்னாற்செய்த நெற்றிப்பட்டத்தையணிந்த, பருமம் யானைஉம்—கவசத்தையுடைய யானையையும், செம்பொன் நீள்கொடி தேர்உம் வாசிஉம்—செவந்தபொன்னாலமைந்த நீண்டகொடிகட்டிய தேரையுங் குதிரையையும்

வெம்ப ஊர்ந்து (கண்டோர்) விரும்பஏறி, வேனிலான்இன் உலாவும்—மன் மதனைப்போல (பெண்களுக்கு விருப்பத்தைத்தந்து) நடப்பானாயினான்.

ந - ரை. நம்பன், இவ்வுலகில் நாகம்போலு மிராசமாபுரத்தே, யானை முதலியவற்றைக்கண்டார் விரும்பவேறி, வேனிலான்போல மகளிர்க்குவேட் கைவிளைத்துநடக்கும் என்க.

வெம்ப எதிர்கால வினையெச்சம் வெம்புபகுதி, உகரக்கேடுசந்தி, அ எச் சவிகுதி. உலாம் ஈற்றுயிர் மெய்கெட்டுநின்ற திணைபால்கட்குப் பொதுவா கிய செய்யும் என்னும் வினைமுற்று நம்பன் என்னுஞ் சிறப்புப்பெயரால்பொ துமைநீங்கி உயர்திணை யாண்பால்மேல் நின்றது. ஈற்றுயிர் மெய்கெடுதல் "செய்யுமெனெச்சம்" என்னுஞ் சூ—இல் "முற்றேல்" என்பதனால். பொ துமையைச்சிறப்புப் பெயர்வந்துநீக்கல் "பொதுப்பெயர்வினைகளின்" என்ற சூ—ஆல். (உ)

வேறு.

(3) கலையினதகலமுங்காட்சிக்கின்பமுஞ்
சிலையினதகலமும்வீணைச்செல்வமும்
மலையினிலகலியமார்பனல்லதிவ்
வுலகினிலிலையெனவொருவனாயினான்.

இ - ள். கலையினது அகலம் உம்—கல்விகாரணமாகப் பிறக்கும் ஞான மும், காட்சிக்கு இன்பம்உம்—அப்பருவத்திலே பிறப்பதோரழகும், சிலையி ன்அது அகலம்உம்—வில்முதலிய ஆயுதங்களைப் பழகியவகையால் அப்பருவத் திலேபிறக்கும்வீரமும், வீணைச்செல்வம்உம்—நாளத்திறேடேகண்டத்திலும் வீணையிலும் பிறக்கும்பாட்டும் ஆகிய இந்நான்கும், மலையின்இல் அகலியமார் பன் அல்லது—மலையைப்போல அகன்ற மார்பையுடைய சீவகனையல்லாமல், இஉலகுஇன்இல் இல்லைஎன்ன-இவ்வுலகிலவைஇல்லையென்னும்படி, ஒருவன் ஆயினான்—தானொருவனேயானான்.

ந - ரை. ஞானமும் அழகும் வீரமும் காமமுமாகின்றான்சீவகன், இவ னல்லாது இவ்வுலகில்ஞானமுதலியன இல்லையென்னும்படி தானொருவனே யாயினான் என்க.

சீவகனுக்குப் பதினைந்துவருடஞ்சென்றபின் நல்வினையாற் பிறக்கின்ற குணங்களைச் சொல்லுகின்றமையால் அப்பருவத்திலேஎன உரைகாரர்கூறி னார். இசையும் நாடகமும் காமத்தைத்தருதலால் அவைகளாற்பிறக்குங் கா மத்தை வீணைச்செல்வம்என நூலாசிரியர் கூறினார். அரசனுக்குச் சிறந்தன இந்நான்கும் என்றார். இன்னுருபிற்கு இன்சாரியை வருதலில்லாமையால், மலையினினகலிய என்னும் பாடத்தை மலையினிலகலிய எனப்பாடங்கொண் டாம் "இன்னெனவரூஉம் வேற்றுமையுருபிற் — கின்னென்சாரியையின் மைவேண்டும்" என்பது தொல்காப்பியம். அகலம் பண்பாகுபெயராய் ஞா னத்தின்மேலும் வீரத்தின்மேலும் நின்றது. கலையினதகலம், சிலையினதக லம் ஏதுப்பொருளில்வந்த ஆறும்வேற்றுமைத்தொகாநிலைத்தொடர். அகலிய இறந்தகாலப்பெயரெச்சம் அகல்பகுதி, கடைக்குறையாய்நின்றஇன் இறந்த

காலவிடைநிலை, யகரத்தோற்றம்சந்தி, அவிகுதி. கலையினதகலம் என்பதற்குக் கலைமகள் எனவும், காட்சிக்கின்பம் என்பதற்குவீற்றுத்தெய்வம் எனவும், சிலையினதகலம் என்பதற்கு வீரமகள் எனவும், வீணைச்செல்வம் என்பதற்கு மாதங்கியெனவும் பொருள்கொண்டு, இவர்கள்தாம் இச்சீவகனல்லாது வேறியாங்களென்றில்லையென்னும்படியானுன் எனப்பொருள்கொள்ளுதலும் ஒன்று. வீற்றுத்தெய்வம் அப்பருவத்திற்குரிய தெய்வம். (௩)

வேறு.

(4) நாமவென்றிவேனகைகொண்மார்பனைக்
காமனேயெனக்கன்னிமங்கையர்
தாமரைக்கணுற்பருகத்தாழ்ந்துலாங்
கோமகன்றிறத்துற்றகூறுவாம்.

இ - ள். நாமம்வென்றிவேல்—அச்சத்தைத்தரும் வெற்றிவாய்ந்த வேலினையேந்திய, நகைகொள் மார்பனை—முத்துவடமணிந்த மார்பையுடைய சீவகனை, கன்னிமங்கையர் காமனே என்னதாழ்ந்து — கன்னிப்பெண்கள் இவன் மன்மதனேயென்று தாழ்ந்து, தாமரைகண்ணால் பருக—தாமரைமலர் போன்றகண்களால் பருகும்படி, உலாவும் கோமகன் திறத்து உற்றகூறுவாம்—நடக்கும் அவ்வரசகுமாரனிடத்துப்பொருந்தியகாரியங்களை இனிச்சொல்லுவாம்.

ந - ரை. அங்ஙனமொருவனாகிய மார்பனை மங்கையர் காமனேயென்று கண்ணுற்பருகும்படி நடக்கும் இவனிடத்துப்பிறந்த காரியங்களைக் கூறுவாம் என்றார் என்க.

நாமம் உரிச்சொல்லடியாகப்பிறந்த பண்புபெயர்ச்சொல்நாம்பகுதி, அம் பண்புப்பெயர் விகுதி. நகைபல் இது உவமையாகுபெயராய் முத்துவடத்தின்மேல்நின்றது. உற்றசெயப்படுபொருள்மேல்நிற்றலால் உரிச்சொல்லடியாகப்பிறந்த அஃறிணைப்பலவின்பாற்படர்க்கைவினைமுற்றுப்பெயர். உறுபகுதி, முதனிலையெழுத்தாய்த்தோன்றிய றகரமெய் இடைநிலை, உகரக்கேடுசந்தி, அவிகுதி. (௪)

(5) சில்லம்போதின்மேற்றிரைந்துதேனுலாம்
முல்லைகாரெனப்பூப்பமொய்ந்நிரை
புல்லுகன்றுளிப்பொழிந்துபால்படும்
கல்லென்சும்மையோர்கடலின்மிக்கதே.

இ - ள். சில் அம்போது இன்மேல் (பின்பனிக்காலத்திற்கு அழிகின்றமையால்) சில ஆனஅழகிய போதின்மேல், தேன்திரைந்து உலாவும்முல்லை—வண்டுகள்சாய்ந்துலவு முல்லைச்செடிகள், கார் என்னபூப்ப — இப்பொழுது மேகமென்றுமலர, மொய்நிரை புல்லுகன்று உள்ளிபால்பொழிந்து—நெருங்கியபசுக்கள் தம்மைத் தழுவியகன்றுகளை நினைத்துப் பாலைப்பொழிதலால், படும்கல்லென்சும்மை—(சுறக்குமிடத்து) உண்டாகுங் கல்லென்னும் ஒலியானது, ஓர்கடல் இன்மிக்கது—ஒருகடலைப்பார்க்கிலுமேம்பட்டொலித்தது.

ந - ரை. நிரைதான்புல்லுங் கன்றைநினைத்து, முல்லைகாரெனப் பூப்பத்தானே பாலைப்பொழிதலால் படுமொலி ஒருகடலினுமிக்கதென்க.

பின்பனிக்காலத்துக்கு முல்லையரும்புகளழிதலால் சிலஎன்றார். போது கிண்கிணிவாய்க்கொள்ளுமலர். என் என்னுமிடைச்சொல் இசைப்பொருள் மேல்நின்றது. கல் ஒலிக்குறிப்பு. நினைந்து இறந்தகாலவினையெச்சம் நினை பகுதி. புல்லுமுதனிலைத்தொழிற்பெயர். உள்ளி இறந்தகாலவினையெச்சம். உள்பகுதி, ளகரமெய்சந்தி, இவிகுதி. பொழிந்து காரணப் பொருளில்வந்த இறந்தகால வினையெச்சம். பொழிபகுதி. இன்உருபு உயர்வு குறித்தலின் மேல்நின்ற எல்லைப்பொருளில்வந்த ஐந்தனுருபு. பூப்ப நிகழ்காலத்தில்வந்த வினையெச்சம் பூபகுதி, பகரமெய்விரித்தல்விகாரம், பகரமெய்சந்தி, அவிகுதி. பால்கறக்கும் ஒலியைமேகமெனக்கருதிப்பூத்தன என்றமையால்மயக்கவணி. இதனை வடநூலார் பிராந்திமதலங்காரம் என்பார். பின்பனிக்கால நிகழ்ச்சின்றமையால் எனவும் உரையுண்டு. (ரு)

(6) மிக்கநாளினால்வேழமும்மதம்
உக்கதேனிளோடூறிவார்சுனை
ஒக்கவாய்நிறைந்தொழுகுகுன்றின்மேல்
மக்களீண்டினார்மடங்கன்மொய்ம்பினார்.

இ - ள். மிக்கநாளின்ஆல் (இவ்விதமான) ஒலிமிகுந்தநாளில், உக்கதேனின் ஒடு—மலர்களினின்றுஞ் சிந்தியதேனினோடு, வேழம்மும் மதம்ஊறி—யானையின் மூன்றுமதங்களு மூறுதலால், வார்சுனை — நீண்டசுனைகள், ஒக்க வாய்நிறைந்து—தம்முளொக்கவாயளவுநிறைந்து, ஒழுகுகுன்று இன்மேல்—வழிந்துபாயுமலையின்மேல், மடங்கல் மொய்மபினார்—சிங்கத்தையொத்த வலிமையுடையவராகிய, மக்கள் ஈண்டினார்—வேடர்கள் நெருங்கினார்கள்.

ந - ரை. இங்ஙனம் ஒலிமிக்கநாளிலே குன்றின்மேல் மொய்ம்பினராகிய வேடரெல்லாரும்வந்து தங்களிலேதிரண்டார் என்க.

மும்மதம் இரண்டுகபோலத்திலும்துதிக்கையிலுநின்று ஒழுகும்மதம். ஒக்க உவமவுருபிடைச் சொல்லடியாகப்பிறந்த நிகழ்காலவினையெச்சம் ஒ இடைச்சொற்பகுதி, குசாரியை, ககரத்தோற்றமும் உகரக்கேடுஞ்சந்தி, அ எச்சவிகுதி. மக்கள்பலர்பாற்படர்க்கைப்பெயர்ச்சொல் மகபகுதி, கள்விகுதி, அகரந்தொகுத்தல். மொய்ம்பினார் பண்படியாகப்பிறந்த குறிப்புமுற்றெச்சம். ஊறி காரணப்பொருளில்வந்த இறந்தகாலவினையெச்சம் ஊறுபகுதி. ஈண்டினார் பலர்பாற்படர்க்கை யிறந்தகாலவினைமுற்று ஈண்டுபகுதி. ஆல் ஏழனுருபுநிற்குமிடத்து மூன்றனுருபுநிற்றல் உருபுமயக்கம். இதுமிகுதிநவிற்சியணி. இதனைவடநூலார் அதியுக்தியலங்காரம் என்பார். (சு)

(7) மன்னவன்னிரைவந்துகண்ணுறும்
இன்னநாளினுற்கோடுநாமெனச்
சொன்னவாயுளேயொருவன்புட்குரன்
முன்னங்கூறினன்முழுதுணர்வினன்.

இ - ள். இன்னநாளின்ஆல்—இத்தன்மைத்தாகியநாளில், மன்னவன்

நிரைவந்து கன்னுறும்—(வேடர்கள்) அரசனுடைய பசுக்கள்வந்துசேரும், நாம்கோடும் என்ன (அவற்றை) நாம்கொள்வோமென்று, சொன்னஆயுள்ஏ-சொன்ன அப்பொழுதே, புள்குரல்முன்னம் — பறவைக் குரலின்குறிப்பை, முழுது உணர்வினான் ஒருவன்கூறினான்—நிமித்தங்களெல்லாவற்றிலும் அறிவுடைய வொருவன்சொன்னான்.

ந - ரை. அங்ஙனம் எண்ணினவர்கள், இத்தன்மைத் தாகியநாளிலே நிரைவந்துசேரும், அதனை நாம்கொள்ளுதுமெனக்கூறிய அப்பொழுதே, புட்கூறிய குரலின்குறிப்பை, நிமித்தமெல்லாவற்றினும் அறிவுடையானொருவன் கூறினான் என்க.

இன்னநாள் இளவேனிற்குரியநாள். இன்னபண்பின்மேல்நின்ற சுட்டடியாகப்பிறந்தகுறிப்பு வினைப்பெயரொச்சம் இ சுட்டிடைச்சொற்பகுதி, னகரமெய்விரித்தல் விகாரம், னகரமெய்சந்தி, அ எச்சவிகுதி. கோடும்தன்மைப்பன்மை யெதிர்காலவினைமுற்று கொள்பகுதி. முதல் நீளல்விகாரம், தும் தன்மைப்பன்மைவிகுதி, ளகரக்கேடும் தகரத்திரிபுஞ்சந்தி. (எ)

(8) அடைதுநாநிரையடைந்தகாலையே
குடையும்பிச்சமுமொழியக்கோன்படை
யுடையும்பின்னரோரொருவன்றேரினால்
உடைதுஞ்சுடுவிற்றேனுடைந்ததொப்பவே.

இ - ள். நாம்நிரை அடைதும்—நாம்பசுவையடிப்போம், அடைந்தகாலை—அடித்தகாலத்தில், கோன்படை—அரசன்சேனை (வந்து போர்செய்து) குடைஉம் பிச்சம்உம் ஒழிய—குடையுமயிலிறகாற்கட்டிய குஞ்சமும் அவ்விடத்தேகிடக்க, உடையும்—பின்னிட்டுத்தோற்கும், பின்னர்—தோற்றபின்பு, சுடுஇல்—சுடுதலால், தேன்உடைந்தது ஒப்ப — வண்டுகள் கெட்டாற்போல, ஒருவன்தேர்இன்ஆல் உடைதும்—ஒருவன்தேராற்கெடுவோம்.

ந - ரை. நாம்நிரையையடிப்போம், அடித்தபொழுதே அரசன்படை வந்துபொருதுகுடையும் பிச்சமும் அவ்விடத்தேகிடக்கத்தானேகெடும், அது கெட்டபின்பு சுடுதலால் தேனினம் கெட்டாற்போல ஒருவன்தேராற் கெடுவோம்.

சுடு என்பது "கெடுவாக" என்பதுபோல முதனிலையே தொழிற்பெயராய் ஏதுப்பொருளில்வந்த ஐந்தனுருபு ஏற்றது என்பார்; வினைமேல்நின்ற வினைப்பெயரன்றிவினைமாத்திரை உணர்த்திநின்று உருபேற்றது என்றார், அடைதும், உடைதும் தன்மைப்பன்மை யெதிர்காலவினைமுற்றுகள் அடை, உடைபகுதிகள், தும்விகுதி. பின்னர் காலப்பொருள்மேல்நின்ற இடைச்சொல்பின்பகுதி, னகரமெய்சந்தி, அர்விகுதி.

(9) என்றுகூறலுமேழைவேட்டுவீர்
ஒன்றுதேரினுமொருவன்கூற்றமே
என்றுகூறினுமொருவனென்செயும்
இன்றுகோடுநாமெழுகென்றேகினார்.

இ - ள். என்று கூறலும்—என்று நிமித்திகன்கூற, ஏழைவேட்டுவீர்—

அறியாமையையுடையவேடரே, ஒருவன்கூற்றமல என்றுகூறினும்—ஒருவன் இயமனேயென்று உலகம்சொன்னாலும், ஒருவன் ஒன்றுநேரினால் என்செய்யும்—அவ்வொருவன் ஒருநேரினால் நம்மையென்னசெய்வான், நாம் இன்று கோடும்—நாம்பசுவைஇன்றுகொள்வோம், எழுக என்று ஏகினார்—எழுந்திருக்கக்கடவீரென்று பசுநிற்குமிடத்துக்குச் சென்றார்கள்.

ந - ரை. அவன்கூறின அளவிலே அவனைவேட்டுவீரென இகழ்ந்து, ஒருவன்கூற்றமேயென்று உலகங்கூறினும், அவ்வொருவன் ஒருநேரால் ஒன்றுஞ் செய்யமாட்டானாகலின் இன்றுகொள்ளக்கடவேம், எழுந்திருப்பீராகவென்றுகூறி நிரைநிற்கிற இடநோக்கிப்போனார் என்க.

கூறலும் நிகழ்காலவினையெச்சம் கூறுபகுதி, அல்சாரியை, உகரக்கேடு சந்தி, உம்விகுதி. பின்னின்ற ஒருவன் என்னும் பெயர்ச்சொல்முன் அகரச்சுட்டுத் தொகுத்தல். வேடுவர் வேட்டுவீர் விளியுருபேற்றுநின்றது "ரவ்வீற்றுயர் பெயர்க்கு" என்னுஞ் சூ—இல் "அ இ ஈ யாதல்" என்றவிதியால். எழுக என்னும் வியங்கோள் வினைமுற்றின் ஈறுகெட்டது. ஒன்று நேரினேடொருவன் எனவும் பாடம். (௯)

(10) வண்டுமூசாறுநறவமார்ந்தவர்
தொண்டகப்பறைதுடியொடார்த்தெழ
விண்டுதெய்வதம்வணங்கிவெல்கென
மண்டினார்நிரைமணந்தகாலையே.

இ - ள். வண்டுமூசு அறுநறவம் ஆர்ந்தவர்—வண்டுகள்மொய்த்தல் நீங்காத மதுவினைப்பருகி, தொண்டகப்பறை—ஆகோட்பறை, துடிஒடு ஆர்த்து எழ—குறிஞ்சிநிலப்பறையோடொலித்தெழாநிற்க, தெய்வதம்வணங்கி—முருகக்கடவுளைவணங்கி, விண்டு (கட்டியங்காரனோடு) பகைத்து, நிரைமணந்த காலை—பசுக்கள்வந்து கூடியகாலத்தில், வெல்க எனமண்டினார்—வெல்லக்கடவீரென்று நெருங்கி வேடர்கள் சென்றார்கள்.

ந - ரை. அங்ஙனமேகினவர் நறவம்ஆர்ந்து பறைதுடி யோடார்த்தெழ, முருகனைவணங்கி விண்டுநிரைவந்துகூடினவளவிலேவெல்கவெனக்கூறி, மிக்குச்சென்றார் என்க.

அறுஎன ஈறுகெட்டுநின்றதை விகாரம் என்றார். ஆர்ந்தவர் முற்றெச்சம். மூசுமுதனிலைத்தொழிற்பெயர். தொண்டகம் ஆகோட்பறை. தொண்டகப்பறை தொண்டகமாகிய பறையெனவிரிதலால் தொண்டகமாகிய சிறப்புப்பெயர் பறையென்னும் பொதுப்பெயரை விசேடித்துவந்த இருபெயரொட்டுப் பண்புத்தொகை. விண்டு இறந்தகால வினையெச்சம் விள்பகுதி, ளகரம்ணகரமாகத்திரிதல் சந்தி, டகரமெய் இடைநிலை, உ எச்சவிகுதி. மணந்த இறந்தகாலப்பெயரெச்சம் மணபகுதி. வெல்கவியங்கோள் வினைமுற்றினீறு தொக்கது. தெய்வதம் வடசொல். (௧௦)

(11) பூத்தகோங்குபோற்பொன்சுமந்துளார்
ஆய்ச்சியர்நலக்காசெறூணனன்

கோத்தநித்திலக்கோதைமார்பினான்
வாய்த்தவந்நிலைவள்ளுவன்சொன்னான்.

இ - ள். பூத்தகோங்குபோல் பொன்சுமந்துள்ளார் — மலர்ந்தகோங்கமலரைப்போல தேமல்பூப்பப்பெற்ற, ஆய்ச்சியர் நலத்துக்கு—இடைப்பெண்கள்தருமின்பத்துக்கு. ஆசெல்தூண் அன்னான்—ஆதீண்டு குற்றியையொத்தவனாகிய, கோத்தநித்திலக்கோதைமார்பினான்—கோவைசெய்தமுத்துமாலையையணிந்தமார்பையுடையவனாகிய நந்தகோனுடைய, அந்நிலைவாய்த்த வள்ளுவன்—அப்பசுக்கூட்டத்தில் தப்பாத ஒருநிமித்திகன்.

ந - ரை. ஆய்ச்சியர் நலஞ்சேர்தற்கு ஆதீண்டுகுற்றியையொப்பானாகிய நந்தகோனுடைய அந்நிலையிலே வாய்த்த நிமித்திகன்.

இதுகுளகமாய் அடியில்வரும் பாட்டோடு, சொன்னான் என்பதுமுடியநிற்றலால்பொருள்கூறாதுவிட்டனம். பூத்த இறந்தகாலப்பெயரெச்சம்பூபகுதி. கோங்குமலர்மேல்நிற்றலால் முதலாகுபெயர். பொன்தேமல்மேல்நிற்றலால் உவமையாகுபெயர். சுமந்துளார் முற்றெச்சம். நலக்கு அத்துச்சாரியை தொகுத்தல். சுமந்துளார் தெரிநிலை வினைமுற்றெச்சம். மார்பினான் குறிப்புவினைமுற்றெச்சம். கோத்த இறந்தகாலப் பெயரெச்சம் கோபகுதி, இது நித்திலம் என்னுஞ் செயப்படுபொருள்கொண்டது. ஆதீண்டுகுற்றி பசுக்களின்தினவுபோக்குதற்கு மந்தையில் நாட்டியகட்டை. ஆய்த்தியர் எனவும் பாடம். (கக)

(12) பிள்ளையுள்புகுந்தழித்ததாதலால்
எள்ளன்மின்னிரையின்றுநீரென
வெள்ளிவள்ளியின்விளங்குதோணலார்
முள்குமாயரும்மொய்ம்பொடேகினார்.

இ - ள். உள்பிள்ளைபுகுந்து—பசுக்கூட்டத்தில் கரிக்குருவிபுகுந்து, அழித்தது ஆதலால்—அழித்ததாகையால், நீர்இன்று — நீங்களிப்பொழுது, நிரை எள்ளன்மின் என்னசொன்னான்...பசுவைக்காத்தலைக் கைக்கொள்ளுங்களென்றுகூறினான், வெள்ளிவள்ளியின்—வெள்ளியாற்செய்தவளைகளால், விளங்குதோள் நல்லார்—விளங்காநின்ற கைகளையுடைய இடைப்பெண்களை, முள்கும் ஆயர்உம்—நீங்காத புதுமணவாளப் பிள்ளைகளும், மொய்ம்பொடு ஏகினார் (அதுகேட்டு) வலிமையோடு காத்தற்குச்சென்றார்கள்.

ந - ரை. நிரைக்குள்ளேபுகுந்து காரியழித்ததாகலால் இன்று நீர்நிரையைக்காவலிகழாதொழிமினெனச்சொன்னான், அதுகேட்டுப் புதுமணவாளப் பிள்ளைகளுமொய்ம்புடனே காத்தற்கு ஏகினார் என்க.

சொன்னான் என்பதை என்ன என்பதனோடுகூட்டிப் பொருள்கொள்க. முள்கல் பிரியாதிருத்தல் "முசுப்போல முள்காந்திருப்பர்" என்பதனால் உணர்க. எள்ளன்மின் எதிர்மறை முன்னிலைப்பன்மையேவல்வினைமுற்று எள்பகுதி, ளகரத்தோற்றம்சந்தி, அல் எதிர்மறைவிகுதி, அனைத்தும் ஒருபகுதி, மின்விகுதி. உடன்பாட்டில் எண்மின் எனவரும். முள்கும் பெயரெச்சம் முள்குபகுதி. இது இறந்தகாலத்தின்மேல்நின்றது. (கஉ)

(13) காயமீனெனக்கலந்துகானிரை
மேயவெந்தொழில்வேடரார்த்துடன்
பாயுமாரிபோற்பகழிசிந்தினார்
ஆயர்மத்தெறிதயிரினாயினார்.

இ - ள். காயம் மீன்என்ன — ஆகாயமுமீனு மென்னும்படி, கான்கலந்து நிரைமேய — காட்டிற்கலந்து பசுமேய, வெந்தொழில்வேடர் ஆர்த்து — கொடுந்தொழிலையுடைய வேடர்கள்கோஷித்து, பாயும்மாரிபோல் உடன்பகழிசிந்தினார் — பரந்தமழைபோல அப்பொழுது அம்புகளைச்சிந்த, ஆயர் — இடையர்கள், மத்துஎறிதயிரின் ஆயினார் — மத்தாற்கடைந்த தயிரைப்போல (அப்போருக்கு) ஆற்றாதுசிதறினார்.

ந - ரை. ஆகாயமுமீனுமென்னும்படி காட்டிலேகலந்துநிரைமேய்கிற அளவிலே, வேடரார்த்துப்பரந்தமழையைப்போலப்பகழியையுடனேசிந்தினாராக, ஆயர்மத்தாற்கடைந்த தயிர்போலச் சிதறினாரென்க.

சிந்தினார்முற்றெச்சம். ஆகாயத்திலேமீன்கலந்திருத்தல்போலக்காட்டில் பசுக்கலந்திருத்தலால் இதுதொழில்பற்றி வந்தவுவமையணி.

(14) குழலுநவியமுமொழியக்கோவலர்
கழலக்காடுபோய்க்கன்றுதாம்பழித்
துழலைபாய்ந்துலாமுன்றிற்பள்ளியுண்
மழலைத்தீஞ்சொலார்மறுகவாய்விட்டார்.

இ - ள். குழல்உம்நவியம்உம் ஒழிய — வேய்ங்குழலுங்கோடரியும் அங்கேகிடக்க, கோவலர்காடு கழலபோய் — (சிதறிய) இடையர்காட்டினின்று நீங்கப்போய், கன்றுதாம்பு அழித்து உழலைபாய்ந்து உலாம் — கன்றுகள்கட்டியதாம்பினையழித்து உழலைபோலப் பாய்ந்துலாவும், முன்றில்பள்ளிஉள் — முன்றிலையுடைய இடைச்சேரியில், தீம்மழலை சொல்லார்மறுக — இனியமழலைச்சொல்லையுடைய ஆய்ச்சியர்சுழலும்படி.

ந - ரை. அங்ஙனஞ்சிதறியகோவலர் குழலுங்கோடாலியுமங்கேகிடக்கக் காட்டைக்கழலப்போய், இடைச்சேரியில் மகளிர்நின்று சுழலும்படி.

இதுகுளகம் ஆதலால் அடியில்வரும் பாட்டோடுபொருந்தலால் வாய்விட்டார் என்பதற்குப்பொருள் கூறாதுவிட்டனம். உழலைகுதித்தாடும் ஒருவிளையாட்டு. கோவலர் பசுக்கள்காத்தலில்வல்லோர். இல்முன்முன்றில் இலக்கணப்போலி. கழலநிகழ்காலவினையெச்சம் கழல்பகுதி. உலாம் ஈற்றயலுயிர்மெய்கெட்டு நின்றபெயரெச்சம் முன்றில்என்னும் நிலப்பொருள்கொண்டது. மறுகஎதிர்காலவினையெச்சம் மறுகுபகுதி. கச.

(15) மத்தம்புல்லியகயிற்றின்மற்றவர்
அத்தலைவிடினித்தலைவிடார்
உய்த்தனரொனவுடைதயிர்ப்புளி
மொய்த்ததோணலார்முழுதுமின்னடினார்

இ - ள். அவர்-அவ்வேடர்கள், மத்தம்புல்லியகயிற்றின் — பசுவின்தலையிற் பொருந்தியகயிற்றினைகிழ்ச்சிபோல [illegible] — அவ்விட [illegible]

கிழவிட்டாராயினும், இத்தலைவிடார்—இவ்விடத்துப்பசுக்களை நெகிழவிடாது, உய்த்தனர் எனவாய்விட்டார் — கொண்டுபோனார்களென்று வாய்திறந்து சொன்னார்கள், உடைதயிர்புள்ளி மொய்த்ததோள் நல்லார்முழுதும் ஈண்டினார். கடையும்போதுடைந்து சிதறியதயிரின் புள்ளிகள் நெருங்கிய தோள்களையுடைய ஆய்ச்சியரெல்லாம் நெருங்கினார்கள்.

ந - ரை. அவ்வேடர்க யிறுபோல அத்தலையை நெகிழவிட்டாராயின், இத்தலையைநெகிழவிடார் ஆதலால், இனிஅந்நிரையைக்கொண்டேபோயினாரெனவாய்விட்டார், அதுகேட்டுத் தோள்முழுதுந் தயிர்ப்புள்ளி செறிந்தநல்லார் திரண்டார் என்க.

மத்தகம் இடைக்குறை. இன்உருபு ஒப்புப்பொருட்டு. விடார்எதிர்மறைமுற்றெச்சம். உய்ப்பரென்பது உய்த்தனர் என இறந்தகாலம் படக்கூறியது தெளிவுபற்றி வந்தகாலவழுவமைதி "விரைவினு மிகவினும்" என்றகூ-ஆல். கயிற்றின் விடின்என்றது தொழில்பற்றிவந்த வுவமையணியாதலால் நெகிழ்ச்சியெனக்கொண்டாம். அத்தலையென்றது போர்செய்யுமிடத்துஎனவும், இத்தலைஎன்றது வென்றிகொண்ட விடத்துஎனவுங்கொள்க.

வேறு

(16) வலைப்படுமானெனமஞ்ஞையெனத்தம்
முலைப்படுமுத்தொடுமொய்குழல்வேய்ந்த
தலைப்படுதண்மலர்மாலைபிணங்க
அலைத்தவயிற்றினராயழுதிட்டார்.

இ - ள். தம்முலைபடு முத்தொடு — (ஆய்ச்சியர்) தமதுமுலையிற்பொருந்திய முத்தமாலையோடு, மொய்குழல்வேய்ந்த தலைப்படுதண் மலர்மாலைபிணங்க —நெருங்கிய கூந்தலிற்சூடிய தலைமைவாய்ந்த குளிர்ந்தமலராற்றொடுத்தமாலை பிணங்கும்படி அக்கூந்தல்சோர, அலைத்தவயிற்றினர் ஆய்—வயிற்றினையதுக்கி, வலைப்படுமான் என் மஞ்ஞைஎன்ன—வலையிலகப்பட்ட மானைப்போலவும மயிலைப்போலவும், அழுதிட்டார்—அழுதார்கள்.

ந - ரை. அவர்முத்தோடே, குழலிலேவேய்ந்த தலையானமாலை பிணங்கும்படி மயிர்குலைய, அலைத்தவயிற்றினராய், வலைப்படுமானென மயிலென வருந்தினாரென்க.

வேய்ந்த இறந்தகாலப் பெயரெச்சம் வேய்பகுதி. இதுமாலையென்னுஞ் செயப்படுபொருள்கொண்டது "செய்தவேள்வியர்" என்றாற்போல அலைத்த வயிற்றினர் எனவருந்தொடரிலுள்ள அலைத்தஎன்னும்பதத்தோடு விகுதியைக்கூட்டிப் பொருத்தமில் புணர்ச்சியாகக்கொள்க. வலைப்படுமானென மஞ்ஞையெனநின்றது பலபொருளுவமையணி.

(17) எம்மனைமாரினியெங்ஙனம்வாழ்குவிர்
நும்மனைமார்களைநோவவதுக்கி
வெம்முனைவேட்டுவருய்த்தனரோவெனத்
தம்மனைக்கன்றொடுதாம்புலம்புற்றார்.

இ - ள். தாம்—ஆய்ச்சியர்கள், வெம்முனைவேட்டுவர்—கொடியபோ

ர்த்தொழிலையுடையவேடர்கள், நும்அன்னைமார்களை—உங்களுடைய தாய்மார்களை, நோவஅதுக்கி—வருந்தும்படியடித்து, உய்த்தனர்—கொண்டுபோனார்கள், எம்அன்னைமார்இனி எங்ஙனம்வாழ்குவிர் என்ன-எமதுதாய்மாரே எவ்வாறுயிர் வாழ்வீரோவென்று, தம்மனைகன்று ஓடுபுலம்புற்றார்— தமதுவீட்டிலுள்ள கன்றினோடு புலம்பினார்கள்.

ந - ரை. அவர், பின்பும் வேட்டுவர் நும்முடையதாய்மாரை நோம்படியடித்துக்கொண்டு போயினார், இனிஎம்முடையதாய்மார் எங்ஙனமுயிர்வாழ்வீரோ வெனக்கூப்பிட்டுக் கன்றோடுபுலம்புற்றார் என்க.

அன்னைமார் மார்பன்மைப்பொருளில்வந்த பலர்பால்விகுதி. நோவ எதிர்காலவினையெச்சம்நொபகுதி, முதல்நீளல்விகாரம்,வகரமெய்சந்தி, அவிகுதி. அதுக்கி இறந்தகாலவினையெச்சம் அதுக்குபகுதி. உய்த்தனர் உயர்திணைப்பலர்பாற்படர்க்கை யிறந்தகாலப் பிறவினைவினைமுற்று உய்பகுதி, பிறவினைப்படுத்தலில்வந்த தகரமெய்சந்தி, தகரமெய்இடைநிலை, அன்சாரியை, அர்விகுதி. தன்வினையில் உய்ந்தனர் எனவரும். பகுதிசெயப்படுபொருள் குன்றாமைக்கும் குன்றிவருதலுக்கும்பொது. அன்னைமார் என அஃறிணையை உயர்திணையாகக்கூறுதல் திணைவழுவமைதி "உவப்பினு முயர்வினும்" என்றசூ—ஆல்.

(18) பாறைபடுதயிர்பாலொடுநெய்பொரு
தாறுபடப்பள்ளியாகுலமாக
மாறுபடமலைந்தாய்படைநெக்கது
சேறுபடுமலர்சிந்தவிரைந்தே.

இ - ள். பாறை படுதயிர்பால் — பாறைபோலத் தோய்ந்ததயிரும் பாலும், நெய்ஒடுபொருது ஆறுபட-நெய்யுடனேகலந்து ஆறாகும்படி, பள்ளிஆகுலம்ஆக—படுக்கையிலே (ஆய்ச்சியர்க்கு) வருத்தமுண்டாக, ஆய்படை மாறுபடமலைந்து —ஆயரதுசேனை மாறுபாடுண்டாகப் போர்செய்து, நெக்கது— கெட்டது, சேறுபடுமலர் சிந்தவிரைந்து — (கெட்டபின்பு) தேனொழுகுமுல்லைமலர்மாலை சிந்தும்படிவிரைந்துசென்று.

ந - ரை. கற்போற்றோய்ந்ததயிரும்பாலும் நெய்யுடனேகலந்து ஆறுண்டாம்படிபள்ளியிலேவருத்தநிகழாநிற்க, கெடாதுநின்றஆய்ப்படைமாறுபாடுண்டாகப் பொருதுகெட்டது, கெட்டபின்பு அவர்மலர்சிந்தும்படி விரைந்து.

பொருது, மலைந்து,விரைந்து இறந்தகாலவினையெச்சங்கள்பொரு, மலை விரைபகுதிகள். மயக்கப்பொருளில்வந்த ஒடுஉருபைப்பிரித்து நெய்யொடு கூட்டுக. ஆய், வேடென்றாற்போலச் சாதிமேல்நின்றது. இதுபண்பாகுபெயர். நெக்கது இறந்தகால ஒன்றன்பாற்படர்க்கை வினைமுற்று நெகுபகுதி, முதனிலையெழுத்தாய்த் தோன்றிய ககரமெய் இடைநிலை. உகரக்கேடுசந்தி, அசாரியை, துவிகுதி, ஆய்ப்படை ஒன்றனீட்டத்தற்கிழமைப் பொருளில்வந்த ஆறாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். ஆய்சொல்லால் அஃறிணையாயினும்பொருளால் உயர்திணைப் பெயராதலால் வருமொழி வல்லெழுத்தியல்பாயிற்று.

(19) புறவணிபூவிரிபுன்புலம்போகி
நறவணிதாமரைநாடகநீந்திச்
சுறவணிசூழ்கிடங்காரெயின்மூதூர்
இறையணிகேட்கவுய்த்திட்டனர்பூசல்.

இ - ள். புறவணி பூவிரி புன்புலம்போகி—முல்லைநிலமாகிய மலர்விரிந்தபுன் புலத்தைக்கடந்து, நறவு அணிதாமரைநாடு அகம்நீந்தி—தேன்மிக்கதாமரைமலர்நிறைந்த நாட்டினிடத்தைக்கடந்து, சுறவுஅணிகிடங்கு— சுறாமீன் கணிறைந்த அகழ்சூழ்ந்த, எயில்ஆர் மூதுஊர்— மதிலுடுத்ததொன்று தொட்டுள்ளஊரில், இறைஅணிகேட்க — அரசனுக்குச் சமீபமாகக் கேட்கும்படி, பூசல் (வேடர்கள் பசுக்களையடித்த) ஆரவாரத்தை, உய்த்து இட்டனர்—கொண்டுபோய்ப்போட்டனர்.

ந - ரை. புன்புலத்தைப்போய் நாடகத்தைநீந்தி மூதூரில் இறையணித்தாகக்கேட்கும்படி நிரையையடித்த பூசலைக்கொண்டுபோய்ப் போகட்டார் என்க.

இந்தப்பழியை யரசன் தலையில்போடுதலால் உய்த்தனர் என்றார். உய்த்திட்டனர் என்றதைப்போட்டனர் எனப்பொருள்கொண்டு ஒருசொல்லாகக் கொள்ளினுமமையும். இச்செய்யுளால் வாயில்காப்போனுக்குச்சொன்னமை கூறினார். புறவணிமுல்லைநிலம், போகி, நீந்தி, உய்த்து என்னும்வினையெச்சங்கள் ஒன்றனையொன்றுகொண்டு இட்டனர் என்னும் வினைமுற்றின் முதனிலையைக்கொண்டன. உய்பகுதி. நாடகம் வேற்றுமையில் டகரவொற்றிரட்டாமை "நெடிலோடுயிர்த்தொடர்" என்னுஞ் சூ—இல் "மிக" என்றமையால்.

வேறு.

(20) கொடுமரவெயினரீண்டிக்கோட்டிமிலேறுசூழ்ந்த
படுமணிநிரையைவாரிப்பைந்துகிலருவிநெற்றி
நெடுமலையத்தஞ்சென்றொன்றுநெய்பொதிந்தபித்தை
வடிமலராயர்பூசல்வளநகர்பரப்பினாரே.

இ - ள். நெய்பொதிந்த பித்தைவடிமலர்ஆயர்—நெய்பூசியமயிரில் தேனொழுகுமுல்லை மலரைச்சூடிய இடையர், கொடுமரம் எயினர் ஈண்டி—வில்லையேந்திய வேடர்கள்நெருங்கி, கோள்திமில் ஏறுசூழ்ந்த — கொலையமைந்த திமில்வாய்ந்த எருதுகள்சூழ்ந்த, மணிபடு நிரையைவாரி—மணிகட்டிய பசுக்களைக்கொள்ளைகொண்டு, பைந்துகில் அருவி நெற்றிநெடுமலை அத்தம் — பசிய ஆடைபோல அருவிவீழும் நெற்றியையுடைய நீண்ட மலையின்கொடுவழியே, சென்றார் என்று—போயினரென்று, பூசல் வளம் நகர்பரப்பினார்—ஆரவாரத்தைவளமிகுந்த நகரிற்பரப்பினார்கள்.

க - ரை. மறவர்திரண்டு நிரையைச்சேரக் கைக்கொண்டுமலையில் அருஞ்சுரத்தைப்போயினரென்று பூசலைப்பரப்பினார் என்க.

"பல்லாக்கொண்டா ரொல்லார் என்னும் — பூசல்கேட்டுக் கையதுமாற்றி "நிரைகோட்கேட்டுச்செய்தொழிலொழிய" இவை இரண்டும் பசுமீட்டற்

குரியதுறை ஆதலால், இந்த இடையர்களும் கேட்டோரெல்லாஞ்சென்று மீட்பாரென நினைத்து நகரிலுள்ளோர்க்கு உணர்த்தினர் என்பார் வளநகர் பரப்பினர் என்றார். பல்லாக்கொண்டார், மாற்றி. ஒல்லார்பல் ஆகொண்டார்—பகைவர்கள் பலபசுக்களையுங் கைகொண்டார்கள், என்னும் பூசல்கேட்டதை அதுமாற்றி—என்று கூறும் ஆரவாரத்தைக்கேட்டு அவர்சிறுமையைப்போக்கி. நிரைகோள், ஒழிய. நிரைகோள்கேட்டு — பகைவர்கள் பசுக்களைக் கவர்ந்ததைக் கேள்வியுற்று, செய்தொழில் ஒழிய—அவர்கள்செய்த செய்கையொழிய. என்பதுபொருள். இத்துறைகள் பன்னிருபடலத்திலிருக்கலாம்—பொதிந்த இறந்தகாலப்பெயரெச்சம் பொதி பகுதி. (உ0)

வேறு.

(21) காசின்மாமணிச்சாமரைகன்னியர்
வீசமாமகரக்குழைவில்லிட
வாசவான்கழுநீர்பிடித்தாங்கரி
ஆசனத்திருந்தானடன்மொய்ம்பினன்.

இ - ள். அடல்மொய்ம்பினன் — வலியதோளையுடைய கட்டியங்காரன், காசுஇல்மாமணிசாமரை—குற்றமில்லாத முழுமணியிழைத்த சாமரையை, கன்னியர்வீச—கன்னிப்பெண்கள் வீசுந்தோறும், மாமகரம்குழைவில்இட—பெருமையமைந்தமகரகுண்டலம் ஒளிவீச, வாசம்வான்கழுநீர்பிடித்து—வாசமமைந்த பெரியகழுநீர்மலரையேந்தி, ஆங்கு—சச்சந்தனிருந்தமண்டபத்தே. அரி ஆசனத்து இருந்தான் (அவனிருந்த) சிங்காதனத்திலிருந்தான்.

ந - ரை. மொய்ம்பினன், கன்னியர் வீசுந்தோறுங் குழைவில்லிடக்கழுநீரைப்பிடித்து, சச்சந்தனிருந்த மண்டபத்தே, அவனிருந்தசிங்காதனத்தேயிருந்தான் என்க.

இகழ்ச்சிக்குறிப்புத்தோன்ற அடல்மொய்ம்பினனென அரசனுக்குக்கூறுஞ்சிறப்பைக் கட்டியங்காரன்மேலேற்றிக்கூறினர். (உக)

(22) கொண்டவாளொடுங்கோலொடுங்கூப்புபு
சண்டமன்னனைத்தாடொழுதாயிடை
உண்டொர்பூசலென்றாற்குரையாயெனக்
கொண்டனர்நிரைபோற்றெனக்கூறினன்.

இ - ள். கொண்டவாள்ஒடும் கோல்ஒடும் — எடுத்தவாளோடும் பிரம்போடும், கூப்புபு (கையை) குவித்து, சண்டமன்னனை தாள்தொழுது—கொடிய அரசனைப்பாதம்வணங்கி, ஆயிடைஓர் பூசல்உண்டு என்றாற்கு—அக்காட்டில்ஒரு ஆரவாரம் உண்டென்றுசொன்ன ஆசாரவாசிக்கு, உரையாய்என்ன (அது என்ன) சொல்லாயென்று அரசன்வினவ, போற்று (நான் சொல்வதை) திருஉளம்பற்று, நிரைகொண்டனர் என்னகூறினன் — பசுக்களை இவரடித்துக்கொண்டாரென்று வாயில்காப்போன் சொன்னன்.

ந - ரை. எடுத்தவாளோடும் பிரம்போடுங்கையைக்குவித்துக் கொடிய அரசனைத்தாளைத்தொழுது, அக்காட்டிலே யொருபூசலுண்டென்றுகூறிய ஆ

சாரவாசிக்கு அதுயாதுகூறுயென்றரசன்கூற, அவனும்யான்கூறுகின்றதனை த்திருவுளம்பற்று நிரையையடித்துக்கொண்டாரென்று கூறினன் என்க.

கூப்புபு செய்பு என்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம் கூப்புப குதி, புவிகுதி. ஆயிடைசுட்டு நீண்டு இடையில்யகரமெய்தோன்றல் "எகர வினாமுச்சுட்டின் முன்னர்" என்ற சூ—இல் "நாக்கிற்சுட்டு நீளின்யகரமுந் தோன்றுதல்" என்றவிதியால். (உஉ)

(23) செங்கட்புன்மயிர்த்தோ றிரைசெம்முக
வெங்கணோக்கிற்குப்பாயமிலேச்சனைச்
செங்கட்டீவிழித்தான்றெழித்தான்கையுள்
அங்கட்போதுபிசைந்தடுகூற்றனான்.

இ - ள். அடுகூற்று அன்னான்—கொல்லும் இயமனையொத்தகட்டியங் காரன், கைஉள் அம்கள்போது பிசைந்து—கையிலேந்திய அழகிய கள்நிறை ந்தமலரைப் பிசைந்து, செம்கண்—சிவந்தகண்ணையும், புல்மயிர்தோல்திரை செம்முகம்—புல்லியமயிர்நிறைந்த தோல்திரைந்தசெவந்தமுகத்தையும், வெ ம்கண்நோக்கின் குப்பாயம் மிலேச்சனை—கொடியகட் பார்வையினையுஞ் சட் டையுமுடைய மிலேச்சனை, செம்கண் தீவிழியா தெழித்தான்—செவந்தகண் ணால் தீப்புறப்படவிழித்துக் கோபித்தான்,

ந-ரை. அடுகூற்றனன்னான், அதைக்கேட்டுப்பூவைப்பிசைந்துகண்முதலியவற் றையுடையமிலேச்சனைக்கண்ணால்தீப்புறப்படவிழித்துக்கோபித்தான் என்க.

விழியாசெய்யா என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். தெழித் தான் இறந்தகால வினைமுற்று தெழிபகுதி. இவன் அரசனல்லாமையால் எளியவர்மேல் கோபம்கொண்டனன் என்பார் அங்கட்போது பிசைந்து தெ ழித்தான் என்றார். (உ௩)

வேறு.

(24) கூற்றின்னிடிக்குங்கொலைவேலவன்கோவலர்வாய்
மாற்றம்முணர்ந்துமறங்கூர்கடற்றானைநோக்கிக்
காற்றின்விரைந்துதொறுமீட்கெனக்காவன்மன்னன்
ஏற்றையரிமானிடிபோலவியம்பினனே.

இ - ள். கூற்றின் இடிக்கும் கொலைவேலவன் காவல் மன்னன்—இய மனைப்போல வொலிக்குங் கொலைத்தொழிலையுடைய வேலையேந்தினவனாகிய காவற்றொழில்பூண்ட கட்டியங்காரன், கோவலர் வாய்மாற்றம் உணர்ந்து— இடையர்வாய்மொழியையறிந்து, மறம் கூர்கடல்தானைநோக்கி — கொலைத் தொழிலமைந்த கடல்போன்ற சேனையைநோக்கி, காற்றின் விரைந்துதொறு மீட்க என்ன—காற்றைப்போலவிரைந்து சென்றுபசுக்களை மீட்கக்கடவாயெ ன்று, அரிமான் ஏற்றை இடிபோல இயம்பினன்—சிம்மேற்றையு மிடியை யும்போலக் கூறினன்.

ந - ரை. கூற்றுப்போற் கோபியாநின்ற வேலவனாகிய காவல்மன்னன், அக்கோபஞ்சிறிது தணிந்து கோவலரையழைத்து அவர்கூறிய கூற்றின்பொ ருளுணர்ந்து, தனதுதானையைப்பார்த்துக் காற்றினும்விரைந்து சென்றுநிரை யை மீட்பீராகவென்று அரிமானேறு மிடியும்போல இயம்பினனென்க.

இன் ஒப்புப்பொருளில்வந்தஐந்தனுருபு. வேலவன் குறிப்புவினைமுற்று ப்பெயரொச்சமாய்க் காவல்மன்னன் என்னும்பெயர்கொண்டது. "எறும்பேற் றையும்" என்பது தொல்காப்பியச் சூத்திரம் ஆதலால் ஏற்றை யரிமான் என் ருர்.

வேறு.

(25) கார்விளைமேகமன்னகவுளழிகடாத்தவேழம்
போர்விளையிவுளித்திண்டேர்புனைமயிர்ப்புரவிகாலாள்
வார்விளைமுரசம்விம்மவானுலாப்போந்ததேபோல்
நீர்விளைசுரிசங்கார்ப்பநிலனெளிபரந்தவன்றே.

இ - ள். கார்விளைமேகம்அன்ன—கார்காலத்துண்டானமேகத்தையொ த்த, கவுள்அழிகடாத்த வேழம்—கவுளில்மறைந்த மதத்தையுடையயானையும், போர்விளை இவுளிதிண்தேர்—போர்விளைதற்குக் காரணமான குதிரைபூட்டிய திண்ணியதேரும், புனைமயிர் புரவிகாலாள்—அலங்கரித்த புறமயிரையுடைய குதிரையும், காலாளும், வார்விளைமுரசம் விம்ம — வாராற்கட்டிய முரசொ லிக்கவும், நீர்விளைசுரிசங்கு ஆர்ப்ப — கடலிற்றோன்றிய முகஞ்சுரிந்த சங்க மொலிக்கவும், வான்உலாபோந்தது ஏபோல் — மேகம் உலாவந்ததுபோல, நிலன்நெளிபரந்த—நிலநெளியப்பரந்தன.

ந - ரை. வேழமுந்தேரும் புரவியுங் காலாளு முரசம் விம்மச்சங்கமார் பப வானுலாப்போந்ததேபோல நிலநெளியப்பரந்தனென்க.

மேகம்பவனி வந்ததுபோலச் சங்கமொலிக்க எனப்பொருள்கொள்ளு தலும் ஒன்று. கடாத்த பொருளடியாகப்பிறந்த உடைமைப் பொருளில்வந்த குறிப்புவினைப்பெயரொச்சம் கடாம்பகுதி, அத்துசாரியை, ஈற்றெழுத்தும்சாரி யையினகரமும் ஈற்றுகரமுங் கெடுதல்சந்தி, அ எச்சவிகுதி. புரவிகாலாள் உம்மைத்தொகையாதலால் வருமொழிமுதல் வல்லெழுத்து இயல்பாயிற்று. யானையுங்கேடகமு முழக்கமுமிருத்தலால் வானுலாப்போந்ததேபோல் என் ருர். இதுபண்புந்தொழிலும் பற்றிவந்தவுவமையணி.

(26) காலகம்புடைப்பமுந்நீர்க்கடல்கிளர்ந்தெழுந்ததொப்ப
வேலகமிடைந்ததானைவெஞ்சினவெயினர்தாக்க
வால்வளையலறவாய்விட்டிரலையுந்துடியுமார்ப்பப்
பால்வளைந்திரவுசெற்றுப்பகலொடுமலைந்ததொத்தார்

இ - ள். கால்அகம்புடைப்ப—காற்று உள்ளேயடித்தலாலே, முந்நீர்க டல் கிளர்ந்து எழுந்தது ஒப்ப— மூன்றுதன்மையையுடையகடல் பொங்கிமே லெழுந்ததுபோல, வேல்அகம்மிடைந்ததானை—வேல்தம்முள்நெருங்கிய அர சர்சேனையும், வெம்சினம் எயினர் — கொடியகோபத்தையுடைய வேடரும், வால்வளை அலற—வெள்ளியசங்குகள்கோஷிக்கவும், இரலைஉம்துடிஉம் வாய் விட்டுஆர்ப்ப — துத்தரிக்கொம்பும் குறிஞ்சிநிலப்பறையும் ஒலிக்கவும், தாக் க—தம்முள்போர்செய்தலால், இரவுபகல்—இரவும்பகலும், செற்றுபால்வளை ந்து—கோபித்து ஒருபக்கத்தில் வந்துவளைந்து, மலைந்துஒத்தார்—போர்செ ய்தலையொத்திருந்தார்கள்.

ந - ரை. காற்றுஉள்ளேயடித்தலாலே கடலெழுந்ததே போலக்கிளர்ந்து வேல்மிடைந்ததானையும் எயினரும் வளையலற இலையுந் துடியும்வாய்விட்டார்ப் பத்தம்மிற்றுக்குதலாலே கோபித்து ஒருபக்கத்திலே வந்துவளைந்து இரவும்பகலு மலைவதொத்தாரென்க.

மூன்றுதன்மையாவன ஆக்கலும் காத்தலும் அழித்தலுமாம். தாக்ககாரணப்பொருள்மேல் நிற்றலால் இறந்தகாலவினையெச்சம் தாக்குபகுதி, உகரக்கேடுசந்தி, அஎச்சவிகுதி. செற்றுஇறந்தகாலவினையெச்சம் செறுபகுதி, முதனிலையெழுத்தாய்த் தோன்றிய றகரமெய் இறந்தகாலவிடைநிலை, உகரக்கேடுசந்தி, உஎச்சவிகுதி, அலற, ஆர்ப்ப நிகழ்காலத்தில்வந்த வினையெச்சங்கள். ஓஎண்ணிடைச்சொல். அரசர்தானைக்குவளையும் வேடர்சேனைக்கு இலையுந்துடியும் எனப்பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நிற்றலால் முறைநிரனிறைப்பொருள்கோள். இரவும்பகலும் மலைவதுபோல அரசன்சேனையும்வேடர்சேனையுமலைந்தனவெனநிற்றலால் ஒப்புமைக்கூட்டவுவமையணி.

(27) விற்பழுத்துமிழ்ந்தவெய்யவெந்நுனைப்பகழிமைந்தர்
மற்பழுத்தகன்றமார்பத்திடங்கொண்டுவைகச்செந்நாச்
சொற்பழுத்தவர்க்குமாண்மைசொல்லலாந்தன்மைத்தன்றிக்
கொற்பழுத்தெரியும்வேலார்கொடுஞ்சிலைகுழைவித்தாரே

இ - ள். வில்பழுத்து உமிழ்ந்த — (வேடர்கள்) வில்வளைந்துகக்கிய, வெய்யவெம்நுனைபகழி—கொலைத்தொழிலைவிரும்பும் கொடியநுனியையுடையபாணங்கள், மைந்தர் மல்பழுத்து அகன்றமார்பத்து இடம்கொண்டுவைக— (அரசன்சேனையிலுள்ள) வீரர்களது மல்யுத்தத்திற்கை தேர்ந்துபரந்த மார்பில்தங்குதலால், செம்நாசொல்பழுத்தவர்க்கும்— செவ்வந்நாவில் சொல்லுகளெல்லாம் கைவந்தகவிஞர்களும், ஆண்மைசொல்லல்ஆம் தன்மைத்துஅன்றி—ஆண்தன்மையை யெடுத்துக் கூறுந்தன்மைத்தல்லாமல், கொல்பழுத்து எரியும்வேலார்—கொல்லன் தொழிலிலே யடிப்பட்டுவந்து எரியாநின்றவேலையேந்திய அவ்வீரர்கள், கொடும்சிலைகுழைவித்தார்—வேடர்களது வளைந்தவில்லினைக்கெடுத்தார்கள்.

ந - ரை. வேடர்கையில்வில் வளைந்துகான்றபகழி. மைந்தர்மார்பத்தே தங்குதலாலே கவிஞர்களுக்கும் ஆண்மை கூறலாந் தன்மைத்தன்றாக, எரியும்வேலார் அவ்வேடர் வில்லைக்கெடுத்தாரென்க.

இவ்வாறன்றி வேலார்தமது வில்லைவளைத்தார், அவ்வளவிலே வேடர் மைந்தராகிய அவ்வேலார் மார்பில் அம்பினை யழுந்தச்செய்தார் என்றுபொருள்கொள்ளுதலும் ஒன்று. சொல்லுகள்பெயர், வினை, இடை, உரிமுதலிய சொற்கள். இவையன்றிச்செஞ்சொல், இலக்கணச்சொல், குறிப்புச்சொல்எனக்கொள்ளினு மமையும். பழுத்துஎன்றதற்கு வளைந்துஎனவும், கைதேர்ந்து எனவும், கைவந்தஎனவும், அடிப்பட்டு எனவும்பொருள்கொள்ளுதல் "உண்டற்குரியவல்லாப்பொருளை— உண்டனபோலக் கூறலுமரபே" என்னுந்தொல்காப்பியச்சூ—இல் "கூறலும்" என்றதில்வந்த உம்மையால். வெய்யபண்படியாகப்பிறந்த குறிப்புவினைபெயரெச்சம்வெம்மை ஈறுகெடுதலும் ஈற்றுமெ

ய்யகரமாகத்திரிதலும் யகரத்தோற்றமும்சந்தி, அஎச்சவிகுதி. குழைவித்தார்பலர்பாற்படர்க்கை யிறந்தகாலப்பிறவினைவினைமுற்று குழைபகுதி, விபிறவினைவிகுதி, அனைத்தும் ஒருபகுதி, தகரமெய் இடைநிலை, தகரமெய்சந்தி, ஆர்விகுதி. அடிப்பட்டுதொன்றுதொட்டு.

(28) வாட்படையனுங்கவேடர்வண்சிலைவணங்கவாங்கிக்
கோட்புலியினத்தின்மொய்த்தார்கொன்னுனைப்பகழிதம்மால்
வீட்டினார்மைந்தர்தம்மைவிளிந்தமாகவிழ்ந்ததிண்டேர்
பாட்டரும்பகடுவீழ்ந்தபனிவரைகுனிவதொத்தே.

இ - ள். வாள்படை அனுங்க (தம்மைக்கெடுத்த) வாளாயுதங்கெடும்படி, வேடர்வண் சிலைவணங்கவாங்கி— வேடர்கள்வென்றி வளமமைந்தவில்லைவளைத்து, கோள்புலிஇனத்து இன்மொய்த்தார்—கொல்லுந்தொழிலையுடையபுலியின்கூட்டம்போலநெருங்கிய அவ்வேடர்கள், கொன்னுனைபகழிதம்ஆல் மைந்தர்தம்ஐ வீட்டினார்—அச்சத்தைத்தரும் முனையையுடைய அம்பினால் வீரர்களைக்கொன்றார்கள், மாவிளிந்த திண்தேர்கவிழ்ந்த—குதிரைகளிறந்தன, திண்ணியதேர்கள் குப்புற்றன, பனிவரைகுனிவது ஒத்து—இமபருவதங்கால் சாய்தலையொத்து, அரும்பகடுபட்டு வீழ்ந்த—வலியயானைகள்பட்டுவீழ்ந்தன.

ந - ரை. தம்மைக்கெடுத்த வாட்படைகெடும்படி வேடர்வில்லைவளைத்துப்புலியினம்போல் எதிர்சென்று மொய்த்தவர்கள், தம்பகழியாலே வீரரானவர்களை வீட்டினார், அவ்வளவிலேயமாவீழ்ந்தன, தேர்கவிழ்ந்தன, வரைகுனிவதனையொத்துப்பகடுவீழ்ந்தனவென்க.

படைகருவிப் பொருளில்வந்த தொழிற்பெயர் படு (கொலை) உகரக்கேடுசந்தி, ஐவிகுதி. அனுங்க வணங்க எதிர்காலத்தில்வந்த அகரவீற்றுவினையெச்சம். அனுங்கு, வணங்குபகுதிகள். இதனடியாக அனுங்கல், அனுங்கிய, அனுங்கி, அனுங்கினனெனவினைவிகற்பங்கள்வரும். வாங்கி என்னும் இறந்தகாலவினையெச்சம் மொய்த்தார் என்னும் வினைமுற்றுப்பெயரின் முதனிலைகொண்டது. வாங்குபகுதி. வீட்டினார் இறந்தகாலப்பலர் பாற்படர்க்கைவினைமுற்று வீட்டுபகுதி. பட்டு இறந்தகால வினையெச்சம் படுபகுதி. இது நீட்டல்விகாரம். விளிந்த, கவிழ்ந்த, வீழ்ந்த அஃறிணைப்பலவின்பாற்படர்க்கையிறந்தகால வினைமுற்றுகள். விளி, கவிழ், வீழ்பகுதிகள். மா, தேர், பகடுபோல்பகா அஃறிணைப்பெயர்கள். மா என்னும் பலபொருளொருசொல் இனத்தால் குதிரைமேல்நின்றது "வினைசார்பினமிடமேவி" என்னும்சூ-ஆல். கொதிநுனைப்பகழி என்றும் பாடம். வாட்படை என்றதற்கு வாளையேந்திய சேனை எனலும் அமையும். (உஅ)

(29) வென்றிகாங்கோடுமின்னேவெள்ளிடைப்படுத்தென்றெண்ணி
ஒன்றியுள்வாங்குகென்னவொலிகடலுடைந்ததேபோல்
பொன்றவழ்களிறுபாய்மாபுனைமயிர்க்குஞ்சிபிச்சம்
மின்றவழ்கொடியோடிட்டுவேற்படையுடைந்தவன்றே.

இ - ள். வெள்ளிடைப்படுத்து—வேடரைவெளியிலே புறப்படவிட்டு,

நாம் இன்னேவென்றிகோடும் என்று எண்ணி—நாம் இப்பொழுதே வெற்றி கொள்வோமென்று இறவாதவீரர்களெல்லாம்கருதி, ஒன்றி (அவ்வேடர்சேனையோடு) பொருந்தி. உள்வாங்குகளனை—தள்ளிச்சிறிது குறைக்கக்கடவீரொன்று தமதுசேனைக்குச்சொல்ல, பொன்தவழ்களிறுபாய்மா—பொலிவுமிக்கயானையுங்குதிரையும், வேல்படை—வேலேயேந்தியகாலாட்படையும், மயிர்புனைகுஞ்சிபிச்சம் — மயிரால்வேய்ந்த குச்சத்தையும், வெண்குடையையும், மின்தவழ்கொடிஒடு இட்டு — ஒளிபரந்த கொடியோடுபோட்டு, ஒலிகடல் உடைந்ததுபோல் உடைந்த—ஒலிக்குங்கடலுடைந்ததுபோல வுடைந்தன.

ந - ரை. படாதமைந்தர், வெளியிலே வேடரைப் புறப்படவிட்டுயாம் இப்பொழுதே வெற்றிகொள்ளுதுமென்று எல்லாருமெண்ணி, அப்படையுடனேபொருந்தித்தள்ளிச் சிறிதுகுறைப்பீராகவென்று தம்படைக்குச் சொல்ல, களிறும்மாவும் வேற்படையும் குச்சத்தையும் பிச்சத்தையும் கொடியுடனே போகட்டுக் கடலுடைந்தது போலுடைந்த என்க.

வெற்றிகொள்ளுதலாவது தாம் உயிரோடுவாழ்தல், இதுமங்கலவழக்கு. வேடர்சேனையோடு பொருந்துதலாவது சிறிதுநின்று போர்செய்தல். குஞ்சீயோட்டி. களிறு, பாய்மா வீரர்களைவிடாது நிற்றலால் விடாத ஆகுபெயர்கள். கடலுடைந்ததுபோல் உடைந்தன எனப்பன்மைப்பாலுக்கு ஒருமைப்பால் உவமையாதல் பால்மயக்குறழ்ச்சி. இனிஎன்னும் இடைச்சொல் இன்னெனவந்தது கடைக்குறை. கோடும் தன்மைப்பன்மை யெதிர்கால வினைமுற்று. கொள்பகுதி, முதனீளுதல் விகாரம், தும்விகுதி, ளகரக்கேடுந்தகரத்திரிபுஞ்சந்தி. (உக)

(30) பல்லினாற்சுகிர்ந்தநாரிற்பனிமலர் பயிலப்பெய்த
முல்லையங்கண்ணிசிந்தக்கால்விசைமுறுக்கியாயர்
ஒல்லெனவொலிப்பவோடிப்படையுடைந்திட்டதென்ன
அல்லலுற்றழுங்கிநெஞ்சிற்கட்டியங்காரனாழ்ந்தான்.

இ - ள். ஆயர்—இடையர்கள், பல்இன்ஆல் சுகிர்ந்தநார்இல்—பல்லாற்கிழித்தநாரினால், பனிமலர்பயில்பெய்த அம்முல்லைகண்ணிசிந்தகால் விசைமுறுக்கிஓடி—குளிர்ந்தமலரை நெருங்கவைத்துக்கட்டிய அழகிய முல்லைமாலைசிந்தும்படி கால்விசையாக முறுக்கியோடி, ஒல்லென ஒலிப்பபடை உடைந்திட்டது என்ன—ஒல்லென்றொலிக்கச்சேனைபுறங்கொடுத்ததென்றுகூற, கட்டியங்காரன்—கட்டியங்காரனென்பவன், நெஞ்சுஇல் அல்லல்உற்று அழுங்கி ஆழ்ந்தான்—மனத்தில்வருத்தமுற்றிரங்கி அதிலழுந்தினன்.

ந - ரை. படைகெட்டவளவிலே ஆயர், கண்ணிசிந்தும்படி, கால்விசையுண்டாகமுறுக்கியோடியொல்லெனவொலிப்பப்படை யுடைந்ததென்றுகூற, அதுகேட்டுக் கட்டியங்காரன் நெஞ்சிலே யொருவருத்தமுற்றிரங்கி அதிலே யழுந்தினன் என்க.

என்றார்க்கு அல்லலுற்றழுங்கி எனப்பாடங்கொண்டால் என்றுவருந்தினார்க்குத்தானும் எதிரேவருந்தி எனப்பொருள்கொள்க. சுகிர்ந்த இறந்தகாலப்பெயரெச்சம் சுகிர்பகுதி. அழுங்கி இறந்தகாலவினையெச்சம் அழுங்குபகு

கி. அழுங்கியென்னும் வினையெச்சத்தினின்றுபிரிந்த அழுங்கல் என்னுந்தொழிற்பெயர் ஏழனுருபேற்று அதில் எனநின்றது. (௩௰)

(31) வம்புகொண்டிருந்தமாதர்வநமுலைமாலைத்தேன்சோர்
கொம்புகொண்டன்னநல்லார்கொழுங்கயற்றடங்கண்போலும்
அம்புகொண்டரசர்மீண்டாராக்கொண்டுமறவர்போனார்
செம்புகொண்டன்னவிஞ்சித்திருநகர்ச்செல்வவென்றார்.

இ - ள். செம்புகொண்டால் அன்னஇஞ்சி—செம்பின்தன்மைகொண்டாலொத்த மதில்சூழ்ந்த, திருநகர்செல்வ—செல்வமிக்க இராசமாபுரத்திற்கு அரசனாகிய சீமானே, மாலைதேன்சோர் கொம்பு—மாலையினது தேனொழுகு மொருபூங்கொம்பு, வம்புகொண்டு இருந்தமாதர்—கச்சைத்தன்னிடத்தேகொண்டு அடிபரந்த விருப்பத்தைத்தரும், வநம் முலைகொண்டால் அன்னநல்லார்—சந்தனக்கோலமமைந்த தனங்களைக்கொண்டாலொத்த பெண்களுடைய, கொழுங்கயல் தடகண்போலும் அம்புகொண்டு அரசர்மீண்டார்—கொழுவிய கயல்போன்ற பரந்தகண்களையொத்த அம்பினையேந்தி யரசர்திரும்பினார்கள், மறவர் ஆகொண்டுபோனார் என்றார்—வேடர்கள் பசுக்களைக்கொண்டு போயினார் என்று இடையர்கள் கூறினார்கள்.

ந - ரை. நிரைபோனபின்வந்த ஆயர், செல்வனே, மாலையினது தேனொழுகுவதோர் கொம்புகச்சைத்தன்னிடத்தேகொண்டு அடிபரந்த காதலையுடைய முலையைத்தனக்கு உறுப்பாகக்கொண்டாற்போலு நல்லாருடையகண் போலத் தப்பாத அம்பையேதாங்கொண்டு அரசர்மீண்டார், மறவர் ஆவைக்கொண்டே போயினார் என்க,

உலகிற்கு அரசனாகிய கட்டியங்காரனைநகரிற்கு அரசனேயென்றது மருட்சி. அரசர் என்றது கட்டியங்காரன் புத்திரர் நூற்றுவரையும், அவன் மைத்துனன் மதனனையும். கொண்டன்னதொகுத்தல் விகாரம். வம்புகொண்டிருந்தமாதர் வநமுலைமாலைத்தேன்சோர் கொம்புகொண்டன்ன நல்லார் என்றது இல்பொருளுவமையணி. தடஎன்னும் உரிச்சொல் முன்வருமொழிமுதல் வல்லெழுத்துமிகாமல் இனவெழுத்துமிகுதல், "இடையுரிவடசொலின்" என்ற சூ—ஆல். (௩௧)

(32) மன்னிரைபெயர்த்துமைந்தர்வந்தனர்கொள்கவாட்கட்
பொன்னிழைசுடருமேனிப்பூங்கொடியனையபொற்பிற்
கன்னியைத்தருதுமென்றுகடிமுரசியம்பக்கொட்டி
நன்னகர்வீதிதோறுநந்தகோனறைவித்தானே.

இ - ள். நந்தகோன்—நந்தகோனனவன் (அரசன்சும்மாவிருத்தலால்) வாள்கண்—வாள்போன்றகண்களையும், பொன் இழைசுடரும்மேனி—பொன்னாற்செய்த ஆபரணம் விளங்குமேனியையும், பூங்கொடி அனையபொற்புஇன் கன்னிஐ—பூங்கொடியையொத்த பொலிவினையுமுடைய கன்னியை, மன்நிரைபெயர்த்துமைந்தர்வந்தனர்கொள்க—பெரியபசுக்கள்கூட்டத்தை மீட்டுவந்தவீரர்கள்கொள்ளக்கடவர்கள், தருதும்என்று—யாமுங்கொடுப்போமென்று, நல்நகர் வீதிதோறும்—நல்ல இராசமாபுரத்தின்வீதிகள்தோறும், கடிமுரசு

இயம்பகொட்டி அறைவித்தான்—விளக்கமமைந்த முரசுமுழங்கக்கொட்டித் தெரிவித்தான்.

ந - ரை. அதுகேட்டு அரசன் வாளாவிருத்தலின் நந்தகோன், கண்முதலியவற்றையுடைய கன்னியை மைந்தர்நிரைமீட்டுவந்தவர் கொள்வாராக, யாமுந்தருவேமென நகர்வீதிதோறுமிக்க முரசைமுழங்கக் கொட்டிச் சாற்றுவித்தான் என்க.

கொள்வோருங் கொடுப்போருந் தாழ்வுயரங்கருதாதிருத்தற்குக் கொள்கவென்றும், தருதும் என்றும், தேர்முதலிய நான்குசேனைகளையு மிகவும்பெற்றுப்பலவுயிர்களுக்குங் கருணைசெய்தவரிருத்தலாலும்' கன்னியைவிரும்புவோரிருத்தலாலும்சாற்றினான் என்றுங்கூறினார். வந்தனர் என்னுமுற்றுப்பெயரெச்சமாய் மைந்தர் என்னும் பெயர்கொண்டது. மைந்து (வலிமை) பகுதி, உகரக்கேடுசந்தி, அர்விகுதி. பெயர்த்து இறந்தகால வினையெச்சம் பெயர்பகுதி, தகரமெய்சந்தி, தகரமெய் இடைநிலை, உ எச்சவிகுதி. தருதும் தன்மைப்பன்மையெதிர்காலவினைமுற்று. தாபகுதி, முதல்குறுகலும் ரகரவுகரம் விரிதலும் விகாரம், தும்விகுதி. (௩௨)

(33) வெதிர்ங்குதைச்சாபங்கான்றவெந்நுனைப்பகழிமூழ்க
உதிர்ந்ததுசேனையீட்டங்கூற்றொடுபொருதுகொள்ளுங்
கருந்தடங்கண்ணியன்றிக்காயமாறாகவேகும்
அரும்பெறலவளுமாகென்றாடவர்தொழுதுவிட்டார்.

இ - ள். ஆடவர்—வீரர்கள், சேனைஈட்டம்— அரசனது சேனாகூட்டம், வெதிர்குதைசாபம்கான்ற— மூங்கிலாலமைந்த குதையையுடையவேடர் வில் உமிழ்ந்த, வெம்நுனைபகழிமூழ்க உதிர்ந்தது— கொடியமுனையையுடையபாண மூழ்குதலாற் கெட்டது, கருந்தடகண்ணிஅன்றி—கரியபெரியகண்களையுடைய இவளேயல்லாமல்,காயம்ஆறுஆகஏகும் அரும்பெறலவள்உம்ஆக—ஆகாயமேவழியாகச்செல்லும் பெறுதற்கரிய தெய்வப்பெண்ணுமாக, கூற்றொடுபொருதுகொள்ளும்என்று — இயமனையொத்த அவ்வேடரோடு போர்செய்துபசுக்களை மீட்குங்கொலை வல்லாரில்லையென்று, தொழுதுவிட்டார்—கைகூப்பிப் போர்த்தொழிலைவிட்டனர்.

ந - ரை. ஆடவர், சேனைத்திரள்வேடரது சாபங்கான்ற பகழிமூழ்குதலாலே கெட்டது ஆதலால், இவளேயன்றி ஆகாயமே வழியாகச் செல்வாள் ஒருபெறுதற்கரிய தெய்வ மகளுமாக, அவ்வேடராகிய கூற்றோடுபொருதுகொள்ளுங்கொலை வல்லாரில்லையென்று தொழுதுவிட்டாரென்க.

பகழிமூழ்கி எனவும்பாடம். கான்ற இறந்தகாலப்பெயரெச்சம் கால்பகுதி, மூழ்க காரணத்தின்மேல் நிற்றலால் இறந்தகாலத்தில்வந்த செயவெனெச்சம் மூழ்குபகுதி. கண்ணி என்பதனிறுதியில் பிரிநிலைஏகாரந்தொகுத்தல். சேனையீட்டம் பலவினீட்டத்தற்கிழமைப்பொருளில்வந்த ஆறாம்வேற்றுமைத்தொகைநிலைத்தொடர். கூற்றுஉவமையாகுபெயர். வெதிர்ங்குதைமூன்றாம் வேற்றுமையுருபும்பயனுந்தொக்க தொடராதலால் வருமொழிமுதல் வல்

லெழுத்திற்கு இனவெழுத்துமிகுதல் "யரழமுன்னர்க்கசதப" என்னுஞ்சூ—இல் "வேற்றுமைமிகலு மினத்தோடுறழ்தலும்" என்றவிதியால். கொலைத்தொழில் வல்லார்என்பது எஞ்சிநிற்றலால் சொல்லெச்சம்.

(34) கார்விரிமின்னனார்மேற்காமுகர்நெஞ்சினோடும்
தேர்பரிகடாவித்தேந்தார்ச்சீவகனருளிற்போகித்
தார்பொலிபுரவிவட்டந்தான்புகக்காட்டுகின்றாற்
கூர்பரிவுற்றதெல்லாமொருமகனுணர்த்தினானே.

இ-ள். கார்விரிமின் அன்னார்மேல்— மேகத்தில்தோன்று மின்னலையொத்த பெண்கள்மேல், காமுகர்நெஞ்சு இன் ஓடும்— காமிகள்மனம் ஓடுதல்போலச்செல்லும், பரிதேர்கடாவி— குதிரைபூண்ட தேரைச்செலுத்தி, தார் பொலிபுரவி—கிண்கிணிமாலையால்விளங்குங் குதிரை, வட்டம்தான்புக காட்டுகின்றாற்கு—வாளியாயோடுதலிற்செல்லக்காட்டுஞ் சீவகனுக்கு, தேம்தார்சீவகன் அருள்இல் ஒருமகன்போகி-தேன்சிந்துமாலையையணிந்த அச்சீவகனருள்வழியே ஒருமகன்போய்வந்து, ஊர்பரிவுற்றது எல்லாம் உணர்த்தினான்—ஊரிலுள்ளார் துன்பமடைந்ததெல்லாம்கூறினான்.

ந-ரை. சீவகன், மின்னையொக்கு மகளிர்மேலே காமுகர்நெஞ்சு ஓடுமாறுபோல ஓடுந்தேரைச் செலவிலே கடாவிப்பின்பு, புரவியைவட்டத்தே செல்லக்காட்டுகின்றவனுக்கு, அவனருளாலேயொருமகன் போய்வந்து ஊர் பரிவுற்றதெல்லா முணர்த்தினான்.

ஒருமகன்சீவகனருளில்தேர்பரிகடாவிப்போகி உணர்த்தினானெனக்கொண்டு கூட்டிப்பொருள் கொள்ளினும் அமையும். உற்றதுஎல்லாம் ஒருமைபன்மைமயக்கம். கடாவி இறந்தகாலவினையெச்சம் கடாவுபகுதி. இன்உருபு ஒப்புப்பொருட்டு.

என்றவனுரைப்பக்கேட்டேயெரிமணிக்கடகக்கையால்
ஒன்றியதோழர்கைம்மேலெறிந்துநக்குணர்வின்மிக்கான்
சென்றவற்கோகையாகச்சிறப்பொடுசெம்பொன்சிந்தி
நன்றிதேபோல்வதில்லைநாந்தொறுமீண்டுமென்றான்.

இ-ள். என்றுஅவன்உரைப்ப உணர்வின்மிக்கான் கேட்டு—என்றுதூதுவன்கூற அறிவின்மேம்பட்டசீவகன்கேட்டு, எரிமணிகடகம் கைஆல்—தீப்போலவிளங்குஞ் செந்நிறமமைந்த இரத்தினமழுத்திய கடகத்தையணிந்த தனதுகையால், ஒன்றிய தோழர்கைமேல்எறிந்து—இடைவிடாததனது தோழரதுகையிலடித்து (சபதங்கூறிஎன்றபடி) நக்கு—சிரித்து, நாம்சென்று—நாம்போய், அவற்குஓகையாகதொறுமீண்டும்—அந்நந்த கோனுக்கு மகிழ்ச்சியுண்டாகப்பசுக்களைமீட்போம், சிறப்புஒடுசெம்பொன் சிந்திநன்று — நன்குமதிப்போடு செம்பான்சிந்துதலால்வரும்பேறு, இதுபோல்வதுஎ இல்லைஎன்றான்-பசுமீட்டலாகிய இத்தொழிலையேயொத்த வேறுசெயல் அந்நந்தகோனுக்கு இல்லையென்றுகூறினான்.

மீட்டும்எனவாராமையால்மீண்டும் எனப்பாடங்கொண்டாம். இதுகால வழுவமைதி.

சேட்டிளம்பரிதிபோலுந்திருமகிழ்மாலைமார்பன்
கேட்டலுங்கனன்றுவல்லேகிளரொளிநந்தத்திண்டேர்
நீட்டமில்செய்கைதம்மாற்பண்ணெனநினைந்துசொன்னான்
றீட்டரும்பரிதியன்னசீவகசாமியன்றே.

இ - ள். திருமகிழ்மாலை மார்பன்—வீரலட்சுமிவிரும்பு மாலையையணி த்த மார்பையுடையசீவகன், கேட்டலும்கனன்று— அதுகேட்ட அப்பொழு தேகோபித்து, வல்லே—விரைந்து, சேடுஇளம்பரிதிபோலும்கிளர்ஒளிநந்த— பெருமைவாய்ந்த இளஞ்சூரியனுதயம்போலும் விளங்கும்கிரணம் அதிகரிக்க, திண்தேர்—திண்ணியதேரை, நீட்டம்இல்செய்கைதம்ஆல் பண்என்ன—தாம தியாமல் அலங்கரியாயென்று, தீட்டுஅரும்பரிதி அன்ன—(ஒளியால்) எழுது தற்கரிய சூரியனையொத்த, சீவகசாமி நினைந்துசொன்னான்— அச்சீவகன்கரு திக்கூறினான்.

இந்தஇரண்டுசெய்யுள்களும்நச்சினார்க்கினியர் காலத்தேயருகிவழங்கின மையால் அவைகளுக்குஉரையெழுதாமல் பயிலவழங்காஎன்றுவிட்டனர்.

வேறு.

(35) தன்பான்மனையாளயலான்றலைக்கண்டுபின்னும்
இன்பாலடிசிற்கிவர்கின்றகைப்பேடிபோலா
நன்பால்பசுவேதுறந்தார்பெண்டிர்பாலர்பார்ப்பார்
என்பாரையோம்பேனெனினியானவனாவனென்றான்.

இ - ள். நன்பால்பசுதுறந்தார்—நல்லொழுக்கமும்பசுவும்துறவினரும். பெண்டிர்பாலர்பார்ப்பார் என்பார்ஐ—பெண்களும்பாலரும் பார்ப்பாரும் என றுசொல்லப்பட்டவர்களை, யான்ஓம்பேன் எனின்—யான்பாதுகாவேனாகி ல், தன்பால்மனையாள்—தன்பகுதியிலுள்ள வீரமகள், அயலான்தலைகண்டு— அயலானிடத்தேபார்த்து (பொறுத்தவன்ஆண்மகனல்லாமையால்) பேடிபோ லா—பேடியையொத்து, பின்உம் இன்பால் அடிசிற்கு—பின்னும் அவனிட த்து இனியபாற் சோற்றையுண்ணுதற்கு, இவர்கின்றகை அவன்ஆவன் என் றான்—மேற்கொள்ளுகின்ற ஒழுகத்தையுடையகட்டியங்காரனாவேனென்று கூறினான்.

ந - ரை. நல்லொழுக்கம், பசு, துறந்தார், பெண்டிர், பாலர், பார்ப்பார் என்பாரை ஓம்பேனெனின்யான், தன்வீரத்தை அயலாரிடத்தேகண்டு பொ றுத்தான், ஆண்மகன் அன்மையிற் பேடியையொத்துப் பின்னும்பாலடி சிறு ண்டற்கு மேற்கொள்கின்ற ஒழுக்கத்தையுடைய கட்டியங்காரனாவேனென் றானென்க.

இது அவனதுஉட்கோள். இதுசொல்லாலறியப்படுதலால் மெய்ப்பாட் டுளடங்கும். இனிப்பேடிபோலாம் எனப்பாடமாயின்பேடிபோலாம் அவனா வன் எனக்கொண்டு கூட்டிப்பொருள்கொள்க. அடிசில்தொழிலாகுபெய ராய் உணவின்மேல்நின்றது. அடு (சமைத்தல்) பகுதி, உகரக்கேடுசந்தி, சக ரமெய்விரித்தல்விகாரம், இல்தொழிற்பெயர் விகுதி, போலாபோன்று என் னும்பொருள்மேல் நிற்றலால் இடைச்சொல்லடியாகப்பிறந்த செய்யாஎன்னு

ம்வாய்பாட்டிறந்தகாலவினையெச்சம். இவர்கின்றநிகழ்கால வினைப்பெயரெச்சம் இவர்பகுதி. திணைவிரவியெண்ணி உயர்திணையால்முடிதல் "பலவயினானும்" எனத்தொல்காப்பியம் கிளவியாக்கத்தில் வருஞ்சூ—இன் உம்மையால் "சிலவயினான்" எனநச்சினார்க்கினியர்கொண்டதனால். ஓம்பேன் எதிர்மறைத்தன்மை யொருமைவினைமுற்று. ஓம்புபகுதி, உகரக்கேடுசந்தி, ஏஎதிர்மறைவிகுதி, அனைத்தும்ஒருபகுதி, மூதற்குறையாய்நின்ற னன்விகுதி. தன்கோற்கீழ்வாழும் வேடரிடத்து வீரமிருக்கக்கண்டும் கட்டியங்காரனுயிர் ஓடிவாழ்தலால் இவ்வாறுகூறினான்.

(36) போர்ப்பண்ணமைத்துநுகம்பூட்டிப்புரவிபண்ணித்
தேர்ப்பண்ணமைத்துச்சிலைகோலிப்பகழியாய்ந்து
கார்க்கொண்மூமின்னினிமிர்ந்தான்கலிமான்குளம்பிற்
பார்க்கண்ணெழுந்ததுகளாற்பகன்மாய்ந்ததன்றே.

இ - ள். புரவி பண்ணிநுகம்பூட்டி — குதிரைகளையலங்கரித்து நுகத்தேபூட்டி, தேர்பண்ணமைத்து— தேரையலங்கரித்து, போர்பண்ணமைத்து—தான்போர்க்கோலஞ்சமைந்து, சிலைகோலிபகழி ஆய்ந்து— வில்லினைவளைத்து அம்பினையாராய்ந்து, கார்கொண்மூமின் இன்நிமிர்ந்தான் — கரியமேகத்தில் தோன்றியமின்னலைப்போலத் தேரைச்செலுத்தினான், கலிமான் குளம்பில்—மனமிக்கசுதிரையின் குளம்பால், பார்கண் எழுந்ததுகள்ஆல்—(அப்பொழுது) பூமியிலெழுந்த புழுதியால், பகல்மாய்ந்தது — பகற்பொழுதுகெட்டது.

க - ரை. புரவியைப்பண்ணி நுகத்தேபூட்டித் தேரைப்பண்ணமைத்துப், பின்தன்னைப் போருக்கீடாகப் பண்ணமைத்துக்கோலி ஆய்ந்து மின்போலத் தேரைச்செலுத்தினான், அப்பொழுது குதிரைக்குரத்தால் பாரிடத்தெழுந்த புழுதியாலே பகற்பொழுதுகெட்டதுஎன்க.

பூட்டி, பண்ணமைத்து, கோலி, ஆய்ந்துஎனவரும் வேறுபலவடுக்கியவினையெச்சங்கள் நிமிர்ந்தான்என்னும் வினைமுற்றின் முதனிலையைத்தனித்தனிகொண்டன "உருபுபலவடுக்கினும் வினைவேறடுக்கினும்" என்றசூ—ஆல். கொண்மூ குறுக்கல்விகாரம்.

(37) இழுதொன்றுவாட்கணிளையாரினையார்கணோக்கிற்
பழுதின்றிமூழ்கும்பகழித்தொழில்வல்லகாளை
முழுதொன்றுதிண்டேர்முகஞ்செய்தவன்றன்னொடேற்கும்
பொழுதன்றுபோதுமெனப்புண்மொழிந்தான்மொழிந்தான்.

இ - ள். புள்மொழிந்தான்—நிமித்தங்கூறினவன், இழுது ஒன்றுவாள்கண் இளையார்—நெய்பூசிய வாளையொத்த கண்களையுடைய பெண்கள், இளையார்கள் நோக்குஇன்— காமுகரிடத்தில் பார்க்கின்ற பார்வையைப்போல, பழுதுஇன்றி மூழ்கும்பகழி தொழில்வல்லகாளை— தப்பாதுதைக்கும் பாணத்தில்வல்ல ஒருகாளைப்பருவமுடையவன், ஒன்றுதிண்தேர் முழுதுமுகம் செய்தவன்தன்ஒடு— ஒருதிண்ணியதேரோ திசைமுழுதுஞ்செல்லுதற்குக்காரணமானவனோடு, ஏற்கும்பொழுது அன்று— போர்செய்தற்கு எதிர்கொள்ளுங்கா

லம் இப்பொழுதல்ல, போதும் என்னமொழிந்தான்—நாம்போகக்கடவேமெ ன்றுகூறினான்.

க - ரை. முன்பு நிமித்தங்கூறினவன் அத்தேரைக்கண்டு, ன்றின அவன் மகளிர்காமுகரிடத்து நோக்குகின்ற நோக்குப்போலத் தப்பின்றுகத் தைக்கும் அம்பாற்செய்யுந்தொழிலை வல்லகாளை, தேரொன்றேறிசைமுழுது முகஞ்செய்தற்குக் காரணமான வன்றன்னுடனே யாம் இப்பொழுது போரையெதிர்கொள்ளும் பருவமன்று, போகக்கடவேமென்றுகூறினான்.

பகழித்தொழில்வல்லகாளை, திண்தேர்முகஞ்செய்தவன் ஒருபொருள் மேல்வந்த பலபெயர். போதும் தன்மைப்பன்மை யெதிர்காலவினைமுற்று. போபகுதி, தும்தன்மைப்பன்மைவிகுதி.

(38) மோட்டும்முதுநீர்முதலைக்குவலியதுண்டேல்
காட்டுண்ணமக்குவலியானையுங்காண்டுமென்றே
ஏட்டைப்பசியினிரைகவ்வியநாகமேபோல்
வேட்டந்நிரையைவிடலின்றிவிரைந்ததன்றே.

இ - ள். மோடுமுது நீர்முதலைக்கு — ஆழ்ந்தபெரிய நீரிற்கிடக்கு முதலைக்கு, வலியது உண்டேல்—வலியபொருளொன்றுண்டானால், காடுஉள்நமக் குவலியானைஉம்காண்டும்என்று—காட்டில்நம்மிலும்வலியவரைநாம்பார்போ மென்று, ஏட்டைப்பசிஇன்—துன்பமிகுந்தபசியினால், இரைகவ்வியநாகமே போல்—இரையைக்கவ்வியபாம்பைப்போல—வேட்ட அநிரைஐ—தாம்விரும் பிக்கைக்கொண்ட அப்பசுக்களை, விடல்இன்றி விரைந்தது — கைவிடாது போர் செய்யவிரைந்தது.

க - ரை. அப்பெழுதுவேட்டுவச்சாதி, முதுநீரிடத்துப்பெரிய முதலைக் குவலியது ஒன்றுண்டாயின், நமக்குக்காட்டிடத்து வலியானையுங் காண்டு மென்றுகூறி, இரைக்குஇடைந்தபசியால் இரையைக்கவ்விய நாகம்போல் அந்நிரையைக்கைவிடுதலின்றாய்ப் போரிற்குவிரைந்ததுஎன்க.

நீரிற்கிடக்கு முதலைக்குத் தம்மிலும் வலியபொருள் வேறில்லாமையால் முதலைக்குவலியதுண்டேல் வலியானையும் காண்டுமென்றார். தாமேவலிமை யுடையன எனப்பொருள்தோன்ற நிற்றலால்குறிப்பணி. ஏட்டைதளர்வு. கவ்வல்விடாதுபற்றல். வேட்ட என்னும் இறந்தகாலப் பெயரெச்சத்தி னீறு தொக்கது. வேள்பகுதி, தகரமெய்இடைநிலை, ளகரமுந்தகரமும் டகரமா கத்திரிதல்சந்தி, அஎச்சவிகுதி. வலியது ஒன்றன்பாற்படர்க்கைக் குறிப்பு வினைமுற்றுப்பெயர். காண்டும் தன்மைப்பன்மை எதிர்கால வினைமுற்று. காண்பகுதி, தும்விகுதி, தகரம்டகரமாகத்திரிதல் சந்தி. இறந்தகாலத்தில்வ ரில்கண்டும் என டும்விகுதி வரும்.

வேறு.

(39) கடற்படையனுங்கவென்றகாளவரொன்னுங்கூற்றத்
திடைப்படாதோடிப்போமினுய்யவென்றிரலைவாய்வைத்
தெடுத்தனர்விளியுஞ்சங்கும்வீளையும்பறையுங்கோடும்
கடத்திடைமுழங்கக்காருங்கடலுமொத்தெழுந்தவன்றே.

இ - ள். கடல்படை அனுங்கவென்ற — (அரசனது) கடல்போன்ற சேனைகெடும்படிவென்ற, கானவர்என்னும் கூற்றத்துஇடை—வேடசாதியென்னும் இயமனிடத்தில், படாதுஉய்ய ஓடிபோமின்என்று— அகப்படாமல் பிழைக்கும்படி யோடிப்போங்களென்றுகூறி, இரலைவாய்வைத்து— துத்தரிக்கொம்பையூதி, விளிஉம் வீளைஉம்எடுத்தனர் — கொக்கரிப்பையும் சீழ்க்கையும் எழுப்பினார்கள், சங்குஉம்பறைஉம் கோடுஉம் கடத்துஇடைமுழங்க— (அதற்கெதிரே சீவகனுடைய) சங்கும்பறையுங் கொம்புங்காட்டிலே கோஷிக்க, கார்உம் கடல்உம் ஒத்துஎழுந்த (இரண்டுசேனையினொலியும்) மேகத்தையுங் கடலையுமொத்தெழுந்தன.

ந - ரை. அங்ஙனம்விரைந்தவர், அரசன்படைகெடும்படிவென்ற வேடரென்னுங் கூற்றத்திடையில் அகப்படாதேபிழைக்க ஓடிப்போங்களென்று வார்த்தைகூறித்துத் தரிக்கொம்பையூதிக் கொக்கரிப்பையுஞ் சீழ்ப்பையுமெழுப்பினர், அதிற்கெதிரேபிள்ளையாருடைய சங்கும்பறையுங் கொம்புங்காட்டிலேமுழங்க,(இரண்டுபடையினொலியும்) காரையுங்கடலையுமொத்தெழுந்தன.

செய்யுளாதலால் விளியுஞ்சங்கும் வீளையும் எனப்பின் வருவதைமுன்னர்க்கூறினார். அனுங்கஎதிர்காலத்தில்வந்த செயஎன்னும் வாய்பாட்டெச்சம் அனுங்கு பகுதி, உகரக்கேடுசந்தி, அவிகுதி.

(40) கைவிசைமுறுக்கிவீசுங்கொள்ளியுங்கறங்குமேய்ப்பச்
செய்கழற்குரிசிற்றிண்டேர்விசையொடுதிசைகளெல்லாம்
ஐயெனவளைப்பவீரரார்த்தனரவருமார்த்தார்
மொய்யமர்நாட்செய்தையன்முதல்விளையாடினானே.

இ - ள். செய்கழல் குரிசில்திண்தேர்—பொன்னாற்செய்த வீரகண்டையையணிந்த சீவகனதுதிண்ணியதேர், விசைகைமுறுக்கி வீசும்கொள்ளிஉம்-விசையுண்டாகக்கையால் முறுக்கிவீசுங்கொள்ளி வட்டத்தையும், கறங்குஉம் எய்ப்ப—காற்றாடியையுமொப்ப, விசையொடு ஐயெனதிசைகள் எல்லாம்வளைப்ப—விசையோடுவிரைந்து எல்லாத்திசைகளையும் வளைக்க, வீரர்ஆர்த்தனர்— அவன்வீரர்கள் கோஷித்தார்கள், அவர்உம் ஆர்த்தார்—அவ்வேடர்களுமொலித்தார்கள், ஐயன்மொய் அமர்முதல் நாள்செய்து விளையாடினான்— அச்சீவகன் போர்த்தொழில் தொடங்குதற்குமுன்பே அந்தப்போரைத் தொடங்கினான்.

ந - ரை. அவர் எதிர்த்தலிற் குரிசில்தேர் கொள்ளிவட்டத்தையுங்காற்றாடியையுமொப்ப விசையோடே வளையாநிற்க, வீரரார்த்தார், அதுகேட்டுவேடரும் ஆர்த்தார். அப்பொழுதுஐயன் நாட்செய்து விளையாடினான்.

தான்பின்னேகட்டியங்காரனோடுபோர்த்தொழில்தொடங்குதற்குப்போர்த்தொழில்தொடங்கினான் என்பார் ஐயன்மொய்யமர்முதல்நாட்செய்து என்வும், தம்முள்தாமேசேனைவகுத்துவிளையாடுந்தன்மைபோல விளையாடினானென்பார் விளையாடினானெனவுங்கூறினார். இதனால் தனதருளும் வீரமுமேம்படுதற்குச்சென்றான் என்பதும் அவரையஞ்சச்செய்து பசுக்களைமீட்டான்

என்பதுந்தேவர்கருத்து எனக்கொள்க. ஐயென குறிப்புப்பொருளில்வந்த இடைச்சொல்லடியாகப்பிறந்தவினையெச்சம். எய்ப்ப உவமஉருபிடைச்சொல்லடியாகப்பிறந்த நிகழ்காலவினையெச்சம் எய்பகுதி, பகரமெய்விரித்தல்விகாரம், பகரமெய்சந்தி, அஎச்சவிகுதி.

(41) ஆழியானூர்திப்புள்ளினஞ்சிறகொலியினாகம்
மாழ்கிப்பையவிந்தவண்ணம்வள்ளற்றேர்முழக்கினானும்
சூழ்துகண்மயக்கத்தானும்புரிநருள்சுருங்கிச்சேக்கைக்
கோழிபோற்குறைந்துநெஞ்சினறமெனமறமும்விட்டார்.

இ - ள். ஆழியான் ஊர்திபுள்ளின் அம்சிறகு ஒலியின்—சக்கரமேந்திய திருமாலேறப்படுவதாகிய கருடனது அழகியசிறகினொலியால், நாகம்மாழ்கி பை அவிந்தவண்ணம்— பாம்புமயங்கிப படமொடுங்கினவகைபோல, வள்ளல்தேர் முழக்கின் ஆன்உம்—சீவகனது தேர்முழக்கத்தாலும், சூழ்துகள்மயக்கத்தான்உம் — தம்மைச்சூழ்ந்ததுகளின் மயக்கத்தாலும், புரிநர்உள்சுருங்கி—வேடர்கள் போரின்மேலெழுந்த மனவெழுச்சிசுருங்கி, சேக்கைகோழிபோல்குறைந்து—வலையிலகப்பட்ட கோழியைப்போல அச்செயல்குறைந்து, நெஞ்சின்அறம்என்ன — தமதுமனத்தில் தருமம்குடிபுகுதாமற்கை விட்டாற்போல, மறம்உம்விட்டார்—தமதுவீரத்தையுங்கைவிட்டார்கள்.

ந - ை. திருமாலேறப்படுவதாகிய கருடனதுசிறகொலியினாலே பாம்புமயங்கிப்படம் ஒதுங்கினாற்போல, வள்ளல்தேரொலியாலுந் தம்மைச்சூழ்ந்ததுகளின் மயக்கத்தாலும்வேடர், மனவெழுச்சிசுருங்கி வலைப்பட்டகோழிபோலச்செயல்குறைந்துதமதுநெஞ்சின் அறம்புகுதாமற்கைவிட்டாற்போல, ஈண்டுமறத்தையுங்கைவிட்டார்.

ஊர்திசெயப்படு பொருளில்வந்த தொழிற்பெயர் ஆதலால்ஊர்திப்புள் ஊர்தியென்னுஞ்சிறப்புப்பெயர்புள் என்னும்பொதுப்பெயரை விசேடித்துவந்த இருபெயரொட்டுப் பண்புத்தொகைநிலைத்தொடர். ஊர்பகுதி, துசாரியை, உகரக்கெடுசந்தி, இவிகுதி. சேக்கை செயப்படுபொருளில்வந்த தொழிற்பெயர்சே (படுத்தல்) பகுதி, குசாரியை, ககரத்தோற்றமும் உகரக்கேடும்சந்தி, ஐவிகுதி. மாழ்கி இறந்தகாலவினையெச்சம் மாழ்குபகுதி.

(42) புள்ளொன்றேசொல்லுமென்றிப்புருத்தலைவேடன்பொய்த்தான்
வெள்ளந்தேர்வளைந்தநம்மைவென்றியீங்கரிதுவெய்தா
உள்ளம்போற்போதுநாமோரொடுப்பெடுத்துய்யவென்றா
வள்ளன்மேலப்புமாரியார்ப்பொடுசிதறினாரே.

இ - ள். புள்ஒன்று எசொல்லும் என்று— (வேடர்கள்) ஆந்தையொருதேர் வருமென்று சொல்லாநின்றதென்று, இபுருத்தலைவேடன் பொய்த்தான்—இந்தப்புருவின்தலைபோலச் சிறியதலையையுடையவேடன் நிமித்தத்தைத்தப்பினான், தேர்வெள்ளம் நம்ஐவளைந்த— தேர்வெள்ளமாக நம்மைவளைந்தன; ஈங்குவென்றி அரிது— இவ்விடத்துப் பசுக்களைக் கொள்ளுதலரிது, நாம் வெய்துஆக ஓர் எடுப்புஎடுத்து—நாம்கடிதாக ஒருகாற்போர்செய்து, உய்ய—பிழைக்கும்படி, உள்ளம்போல் போதும்என்றா—ஒருவர்மனம்போல எல்லா

ருஞ் செல்லக்கடவேமென்றுசொல்லி, வள்ளல்மேல் அப்புமாரி ஆர்ப்பு ஒடுசி தறினார்—சீவகன்மேல் சரவருஷத்தையார வாரத்தோடுசிந்தினார்கள்.

ந - ரை. இங்ஙனம் மறம்விட்டவேடர், ஆந்தையொரு சேர்வருமெ ன்று சொல்லாநின்றதென்று நமக்குச்சொல்லி இந்தப்புன்றலைவேடன் நிமித் தத்தைத்தப்பினான், நம்மைத்தேர் வெள்ளமாக வளைந்தன ஆகலான் இவ்விட த்து நிலைகோடலரிது, இனிநாம்கடிதாக ஒருகாலுற்றுப்பொருது தள்ளியுய் யப்போம்படி, ஒருவருள்ளம்போலே யெல்லாருஞ் செல்லக்கடவேமென்று கூறிச்சென்று, வள்ளல்மேலேயம் புமாரியைச்சிதறினார் என்க.

உள்ளம்போல்போதும்—நீநினைந்ததுபோல எல்லாரும்போவேம் எனக் கொள்ளுதலும் ஒன்று. வள்ளல்காரணப்பெயர் வன்மைபகுதி, ஈறுகெடுத லும் ளகரத்தோற்றமும் சந்தி, அல்பண்புப்பெயர்விகுதி. பொய்த்தான், இறந்தகாலவினைமுற்று பொய்பகுதி.

(43) மால்வரைதொடுத்துவீழ்ந்தமணிநிறமாரிதன்னைக்
காலிரைத்தெழுந்துபாறக்கல்லெனப்புடைத்ததேபோல்
மேனிரைத்தெழுந்தவேடர்வெந்நுனையப்புமாரி
கோனிரைத்துமிழும்வில்லாற்கோமகன்விலக்கினானே.

இ - ள். மால்வரைதொடுத்து வீழ்ந்தமணிநிறம் மாரிதன்னை — பெரியம லையினுச்சியினின்று தொடுத்து விழுந்தமுத்தைப்போலும் வெள்ளியநிறமமை ந்த காலமழையை, கால்கல்லென இரைத்துஎழுந்து — காற்றுக்கல்லென்று கோஷித்தெழுந்து, பாறபுடைத்ததுபோல் — சிதற அடித்ததன்மைபோல, மேல்நிரைத்துஎழுந்த—தன்மேல் பந்தியாய் எழுந்த, வேடர்வெம்நுனை அப் புமாரி—வேடருடைய கொடியமுனைவாய்ந்த அம்பாகியமழையை, கோமக ன்வில்ஆல் உமிழும்கோல் நிரைத்துவிலக்கினான்—சீவகன் தன்வில்லால் சொ ரிகின்ற அம்புகளையெதிரே வரிசையாகநிரைத்து விலக்கினான்.

ந - ரை. மாரிதன்னை; காற்றுக்கல்லென இரைத்தெழுந்துசிதற அடித் ததன்மைபோல, தன்மேல்நிரைத்தெழுந்த வேடருடைய அம்பாகிய மழை யை, கோமகன்தன் கைவில்லால்தான் சொரிகின்ற கோலையெதிரே நிரைத்து விலக்கினான் என்க.

காற்றுவேண்டிய திசையில் மழையைப்போக்கும்விதம்போல இவனம் புதனது விசையினால் வேடர்எய்த அம்புகளைத் திசைகளிற்போக்கியது என் பார் பாறப்புடைத்ததேபோல் என்றார் "நாமுறக்கணைக்காற்றெடுத்த கன்னன கன்பாசறை" என்றார் பிறரும். நாம்உற—அச்சமிக, கணைகாற்று எடுத்தகன்ன அகன்பாசறை—அம்பாகிய காற்றெழுந்த இடம்பரந்த படைவீடு. என்பது பொருள். இரைத்து, நிரைத்து இறந்தகால வினையெச்சங்கள். இரை, நிரை பகுதிகள். பாற நிகழ்காலவினையெச்சம் பாறுபகுதி. (௪௩)

(44) கானவரிரியவில்வாய்க்கடுங்கணைதொடுத்தலோடும்
ஆநிரைபெயர்ந்தவாயரார்த்தனரணிந்திண்டோள்
தானொன்றுமுடங்கிற்றொன்றுநிமிர்ந்ததுசரம்பெய்மாரி
போனின்றதென்பமற்றப்பொருவருசிலையினார்க்கே.

இ - ள். வில்வாய் கடுங்கணைதொடுத்தலோடுஉம்—சீவகன் தனதுவில்லினின்று அச்சத்தைத்தரும் அம்பினைத்தொடுத்த தொடையோடும், ஆநிரை பெயர்ந்த—பசுக்கூட்டங்கள் பெயர்ந்தன, ஆயர் ஆர்த்தனர் — இடையர்கள் மகிழ்ச்சியாற் கோஷித்தார்கள், கானவர் இரிய—(பசுக்களைவிட்டுக் குவிந்த) வேடர்கள் உடைந்தோட, அணிந்ததிண் தோள்தான் ஒன்றுமுடங்கிற்று—வாகுவலயமணிந்த தனதுதிண்ணியதோளொன்று முடங்கியது; ஒன்றுநிமிர்ந்தது—ஒருதோள்நிமிர்ந்தது. அபொருவருசிலையினோர்க்கு — போர்த்தொழில் கைவந்தவில்லையேந்திய அவ்வேடர்க்கு, பெய்சரம் மாரிபோல்நின்ற — பிரயோகித்த அம்புகள் மழைத்தாரைபோல நின்றன.

ந - ரை. தனது வில்வாய்க்கடுங்கணையை அங்ஙனந்தொடுத்த தொடையுடனே நிரைமீண்டன, அதுகண்டு ஆயரார்த்தனர், அதன்பின்பு, நிரையை விட்டுக் குவிந்தகானவரிரியும்படியாகத் தனது திண்டோள்தானொன்று முடங்கிற்று, ஒன்று நிமிர்ந்தது; அப்பொழுது அவ்வேடர்க்கு அம்புகள் மழைத்தாரைபோலநின்றன.

இவ்வகையாய்ச் சீவகன் பாணந்தொடுத்ததொடை விசேடத்தைக்கண்டு இனியிவனோடு போர்செய்தலரிதென்று வேடர்கள் பசுக்களைக் கைவிட்டனர் என்பார் தொடுத்தலோடும் ஆநிரைபெயர்ந்தவெனவும், பசுக்களைமீட்டு அவ் வேடர் உயிர்வாங்காது நிலைகுலைந்தோட எய்தனன் என்பார் கானவரிரியத் திண்டோள்தானொன்று முடங்கிற்றொன்று நிமிர்ந்தது சரம்மாரிபோல்நின்ற எனவுங்கூறினார். கடுகடியென்னும் உரிச்சொற்றிரிபு. கடுங்கணையென இனவெழுத்துமிகுதல் "இடையுரிவடசொலின்" என்ற சூ - ஆல். என்ப அசைநிலை. நின்ற, பெயர்ந்த சாரியைபெறாதுவந்த பலவின்பாற்படர்க்கை வினைமுற்றுகள். (சச)

வேறு.

(45) ஐந்நூறுநூறுதலையிட்டவாறாயிரவர்
மெய்ந்நூறுநூறுநுதிவெங்கணைதூவிவேடர்
கைந்நூறுவில்லுங்கணையும்மறுத்தான்கணத்தின்
மைந்நூறுவேற்கண்மடவார்மனம்போலமாய்ந்தார்.

இ - ள். ஐந்நூறுநூறுதலையிட்ட—ஐம்பதினாயிரத்தைமுதலிலேயிட்ட, ஆறாயிரவர்—ஐம்பத்தாறாயிரவர்களாயுள்ளார், மெய்நூறுநூறுநுதிவெங்கணை தூவி—அவர்கள்தேகநூற்றையும் ஒருகாலத்தே யழிக்கவல்லநுனியையுடைய கொடிய அம்பினை யவ்வாறழிக்காதபடி சொரிந்து, வேடர்கை நூறுவில் உம் கணைஉம் அறுத்தான்—அவ்வேடர்கள், கையிலேந்தியபிறரையழிக்கும் வில்லையுமம்பையு மஞ்சிப்போடச்செய்தான், மைநூறுவேல்கண்மடவாரர் மனம் போல — அஞ்சனமெழுதிய வேல்போன்ற கண்களையுடைய பெண்களது மனம்போல, கணத்துஇல் மாய்ந்தார்—கணப்பொழுதி லவ்வேடர்கள் காட்டில் மறைந்தார்கள்.

ந - ரை. அங்ஙனம் பெய்மாரிபோல் நிற்கும்படிகணையைத்தூவி, வேடர்கையிற் பிறரைநூறுகின்ற வில்லையும் அம்பையும் அஞ்சிப்போகடப் பண்

ணினான், பின்பு மடவார் மனம்போலே யொருகணத்திற்காட்டிலே மறைந்தார்கள்.

மைநூறுவேல் என்றதற்கு மையையழித்தற்குக் காரணமானவேல் என்றுபொருள்கொள்ளுதலுமொன்று. தமதுயிர்க்குத் துன்பஞ்செய்யாமைகண்டு வேடர்வில்லைப்போடுதலால் தூவியறுத்தான் எனவும், பெண்கள் மனம்நிலை நில்லாது கெடுதலால் மடவார் மனம்போலவெனவுங் கூறினார் "களிறுமாய்க்குங் கதிர்க்கழனி" என்றாற்போல மாய்ந்தார் என்றார். களிறுமாய்க்கும்— யானையைமறைக்கும், கதிர்சழனி — நெற்கதிரையுடையவயல். மைந்நூறு மையாகிய நூறெனவிரிதலால் மையாகிய சிறப்புப்பெயர் நூறென்னும் பொதுப்பெயரை விசேடித்துவந்த இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ஐந்நூறுநூறு ஐந்நூறாகிய நூறெனவிரிதலால் பண்புத்தொகை நிலைத்தொடர்.(சரு)

(46) வாள்வாயுமின்றிவடிவெங்கணைவாயுமின்றிக்
கோள்வாய்மதியநெடியான்விடுத்தாங்குமைந்தன்
தோள்வாய்சிலையினொலியாற்றொறுமீட்டுமீள்வான்
நாள்வாய்நிறைந்தநகைவெண்மதிசெல்வதொத்தான்.

இ - ள். கோள்வாய்மதியம் நெடியான்விடுத்தால் ஆங்கு—இராகுவின் வாயிலகப்பட்ட சந்திரனைத் திருமால்விடுத்தாற்போல, மைந்தன் — சீவகன், வாள்வாய்உம் இன்றி—வாளின் தழும்புமில்லாமல், வடிவெங்கணை வாய்உம் இன்றி — வடித்தகொடிய அம்பின்தழும்புமில்லாமல், தோள்வாய்சிலையின் ஒலியால்—தோளிற்சாத்திய வில்லின் குணத்தொனியால், தொறுமீட்டு மீள்வான்—(வேடர்கொண்ட) பசுக்களைமீட்டுத்திரும்பிச்செல்லு மச்சீவகன், நாள்வாய்நிறைந்த — நாள்தோறுநிறைந்த, நகைவெள்மதிசெல்வது ஒத்தான்— ஒளியமைந்த வெள்ளியசந்திரன் செல்வதை யொத்திருந்தான்.

ந - ரை. கோள்வாய் மதியத்தைத்திருமால்விடுத்தாற்போல, மைந்தன், அவ்வேடர்மேல் வாட்டழும்பு மின்றாக அம்புத்தழும்புமின்றாகச் சிலையினொலியால் நிரைமீட்டு மீள்வான், மதிபோவதனையொத்தான் என்க.

திருமால் விடுத்தாங்கு எனவும் பாடம். வாயுமின்றி வாய்வைத்தலுமின்றியென்னும் பொருள்மேல் நிற்றலால் தழும்பின்றி யென்றார். நாள்வாய் வாய்தொழிற்பயில்வு பொருளில்வந்த இடைச்சொல். உலகறியக் கலைநிரம்பினசந்திரன்போலப் போர்க்கலைபுணர்ச்சி நிரம்பினவனென்பார் நாள்வாய்நிறைந்த நகைவெண்மதிசெல்வது எனவும்,வேடர் எவ்வகையாலுங் கொல்லத்தகாதவராதலால் கொலையில்லையென்பது தோன்றக் களத்துப்போகின்றானென்று கூறாது செல்வதொத்தான் எனவுங்கூறினார். மதியநெடியான் விடுத்தாங்கு. மதிசெல்வதொத்தான் இதுதொழிலுவமையணி. நாள்வாய்நிறைந்த மதிசெல்வது என்றற்குப் பதினாறு வயதுடைமைபற்றியெனக் கொள்ளலுமொன்று. (சகூ)

(47) ஆளற்றமின்றியலர்தாரவன்றேழறோங்குங்
கோளுற்றகோவனிரைமீட்டனனென்றுகூற

வாளுற்றபுண்ணுள்வடிவேலெறிந்திற்றதேபோல்
நாளுற்றுலந்தான்வெகுண்டானகரார்த்ததன்றே.

இ - ள். அலர்தாரவன் — மலர்ந்தமாலையை யணிந்த சீவகன், தோழ ரோடும்—தனது தோழர்களோடும், ஆள் அற்றம் இன்றி (இரண்டுசேனை யாலும்) ஓராளுக்குங் குற்றமில்லாமல், கோவன்—நந்தகோபனுடைய, கோ ளுற்ற நிரைமீட்டனன் என்றுகூற (வேடரால்) கொள்ளப்பட்ட பசுக்களை மீட்டானென்று கண்டோர்கூற, வாள்உற்ற புண்உள்—(அதுகேட்டு) வாளா ற்பட்ட புண்ணில், வடிவேல் எறிந்து இற்றதுஏபோல்—வடித்தவேலாலெறி யப்பட்டு அதுமுறிந்துநின்றதுபோல, நாள்உற்று உலந்தான் வெகுண்டான் (தனக்குநியமித்த) ஆயுள் நாளுற்றுக்கெட்ட கட்டியங்காரன் கோபித்தான் நகர்ஆர்த்தது—நகரிலுள்ளார் மகிழ்கூர்ந்து கோஷித்தார்கள்.

ந - ரை. தாரவன், தோழருடனே இரண்டுபடையிலும் ஓராளுக்குங் குற்றமின்றாக நிரைமீட்டானென்றுகூற, அதுகேட்டு நாளுற்றுலந்தான் இற் றதுபோல வெகுண்டான், நகர் உவந்தார்த்தார் என்க.

தோழர்க்குப் போரில்லை யாயினும் கூடநிற்றலால் வினையிலுடனிகழ்ச் சிப்பொருளில்வந்த ஓடுருபுதந்து தோழரோடுமெனவும், பசுமீட்டதற்குக் கோபித்தமையால் நாளுற்றுலந்தானெனக் கட்டியங்காரனுக்கு ஒருபெயர்க் காரணந்தோன்றவும், சீவகனரசுரிமையெய்து நாள்வந்துறுதலில் தனக்குநிய மித்த நாளுற்றுலந்தவன் என்பதுதோன்றவும் நாளுற்றுலந்தானெனவுங்கூறி னார். உலந்தான் வினைமுதற் பொருள்மேல்நிற்றலால் வினைமுதற்பெயர் உல பகுதி. கோவன் நந்தகோவன் என்னும்பொருள்மேல் நிற்றலால் முன்மொ ழிகெட்ட பின்மொழிநிலையல். இதனை வடநூலார் நாமைகதேச நாமக்கிரக ணமென்பர்.

வேறு. (௪௭)

(48) இரவிதோய்கொடிகொண்மாடத்திடுபுகைதவழச்சுண்ணம்
விரவிப்பூந்தாமநாற்றிவிரைதெளித்தாரந்தாங்கி
அரவுயர்கொடியினான்றனகன்படையனுங்கவென்ற
புரவித்தேர்க்காளையன்னகாளையைப்பொலிகவென்றார்.

இ - ள். இரவிதோய் கொடிகொள்மாடத்து — சூரியமண்டிலத்தைதய ளாவிய கொடிகட்டிய மாடத்தில், இடுசுண்ணம் புகைவழ—இட்ட சுண்ணத் தோடு கலந்தபுகை தவழாநிற்க, பூதாமம் விரவிநாற்றி—மலராற்றொடுத்த மா லையைக் கலந்துதொங்கவிட்டு. விரைதெளித்து—வாசனைத்திரவியங்களை யெ ங்குந்தெளித்து அலங்கரித்து, ஆரம்தாங்கி — தாமு முத்தமாலையையணிந்து, அரவுஉயர் கொடியினான்தன் அகன்படை அனுங்கவென்ற—சர்ப்பக்கொடி யையுயர்த்திய துரியோதனனுடைய இடம்பரந்த சேனைகெடவென்ற, புரவி தேர்காளை அன்னகாளையை—குதிரைபூட்டிய தேரையுடைய அருச்சுனனை யொத்த சீவகனை, பொலிக என்றார்—என்றும் விளங்கக்கடவனென்று கற்பு டைமகளிர் வாழ்த்தினார்கள்.

ந - ரை. சீவகன் செல்லுகின்ற தெருவிலே கற்புடைமகளிர், மாடத் தேசுண்ணத்தோடே கலந்து புகைதவழாநிற்கத் தாமத்தைநாலப் பண்ணிவி

ளையையெங்குந்தெளித்து அதனையிங்ஙனங்கோடித்து, தாமுமங்கலமாக ஆர த்தையணிந்து, துரியோதனன்படை கெடும்படியென்ற அருச்சுநனையொத்த காளையைப்பொலிகவென்றார் என்க.

அஞ்ஞாதவாசஞ்செய்த பாண்டவர்கள் விராடனகரத்தில் கரந்து வாச ஞ்செய்கின்றமை துரியோதனன்தெரிந்து,மீட்டும் அவர்க்குக்கேடுசூழப்படை யெடுத்துச்சென்று பசுக்களைக்கவர அருச்சுநன் அவர்களைவென்று பசுக்களை மீட்டமையால் காளையன்ன காளையென்றார். நாற்றிவிரலி இறந்தகால வினை யெச்சங்கள் நாற்று விரவுபகுதி. வில்லும் தேரும் பசுமீட்டலும் உவமை யாதலால் ஒப்புமைக்கூட்ட வுவமையணி. (௪௮)

(49) இன்னமிர்தனையசெவ்வாயிளங்கிளிமழலையஞ்சொற்
பொன்னவிர்சுணங்குபூத்தபொங்கிளமுலையினார்தம்
மின்னவிர்நுசுப்புநோவவிடலையைக்காணவோடி
அன்னமுமயிலும்போல வணிநகர்வீதிகொண்டார்.

இ - ள். செவ்வாய்—செவந்தவாயினையும், இன்அமிர்து இளங்கிளி அ னைய—இனிய அமிர்தத்தையும் இளங்கிளியையுமொத்த, மழலைஅம் சொல் பொன் அவிர்சுணங்குபூத்த—அழகிய மழலைச்சொல்லையும் பொற்பிதிர்போல விளங்கும் தேமல்பூத்த, பொங்கு இளமுலையினார்—விளங்கு மிளமைபொருந் திய தனங்களையுமுடைய மற்றைப்பெண்கள், தம்மின் அவிர்நுசுப்புநோவவி டலைநகாணஓடி—தமது மின்னலையொத்த இடைவருந்தச் சீவகனைக்காணும் படியோடி, அன்னம்உம் மயில்உம்போல—அன்னமும் மயிலும்நிற்றல்போல அணிநகர் வீதிகொண்டார்—அலங்கரித்த இராசமாபுரத்தின் றெருவைக்கைக் கொண்டு நின்றார்கள்.

க - ரை. செவ்வாயினையுஞ் சொல்லினையுமுடைய வளர்கின்ற இளைய முலையினார், விடலையைக்காண்பதாக நுசுப்புநோவவோடி, அன்னமுமயிலு நின்றாற்போல நகரிற்றெருவைக் கைக்கொண்டுநின்றார் என்க.

இங்கேகூறிய பெண்கள்கற்புடைமகளிரொழிந்தோராதலால் அணிநகர் வீதிகொண்டார் என்றார். விடலைபுருடர்பருவத்தின் மேல்நின்றது. அன் னமுமயிலும்போலக்கொண்டார் என்றது பலபொருளுவமையணி. (௪௯)

(50) நூல்பொரவரியநுண்மைமருசிப்பினையொசியவீங்கிக்
கால்பரந்திருந்தவெங்கட்கதிர்முலைகச்சின்வீக்கிக்
கோல்பொரச்செவந்தகோலமணிவிரற்கோதைதாங்கி
மேல்வரல்கருதிநின்றார்விண்ணவர்மகளிரொத்தார்.

இ - ள். நூல்பொரஅரிய—நூலெதிர்த்துப் போர்செய்தற்கரிய, நுண் மைநுசுப்பின்ஐ ஒசியவீங்கி — நுண்ணிய இடைதளரும்படி பருத்து, கா ல்பரந்து இருந்தவெம்கண்கதிர்முலை—அடிபரந்திருந்தவிரும்புஞ்சூசுகத்தையு டைய முத்தின்வடத்தி னொளிவாய்ந்ததனத்தை, கச்சுஇன்வீக்கி (அவ்விடை தளராதிருக்க) கச்சினாற்கட்டி, கோல்பொரசெவந்த கோலம்மணிவிரல்—நர ம்பைத்தடவுதலால் செவப்பேறியஅழகிய விரலில், கோதைதாங்கி — மாலை யையேந்தி, மேல்—மாடத்தின்மேல், வரல்கருதிநின்றார்—சீவகன்வரவைக்

கருதிநின்றபெண்கள், விண்ணவர் மகளிர்ஒத்தார்—தெய்வப்பெண்களை யொத்திருந்தனர்.

க - ரை. இடைதளரும்படி வீங்கி அடிபரந்துதளராதிருந்த முலையைக்கச்சாற்கட்டி, விரலாற்கோதையைத்தாங்கிச் சீவகன்வரவைக்கருதி, இமையாதேபார்த்து மேனிலத்துநின்றவர் தெய்வமகளிரை யொத்தாரென்க.

பொர, ஒசிய காரியத்தின்மேல்நிற்றலால் எதிர்காலத்தில்வந்த செயவென்னும் வாய்பாட்டெச்சங்கள் பொரு, ஒசிபகுதிகள். செவந்த இறந்தகாலப் பெயரெச்சம் செவபகுதி. மகளிர் ஒருமைப்பாலில் பன்மைப்பால் வந்தவழுவமைதி மகபகுதி, ளகரமெய்பெண்பால்விகுதி, அனைத்தும்ஒருபகுதி, இர்புதியன புகுதலால்வந்த பலர்பால்விகுதி. இன்ஐ வேண்டாவழிச்சாரியை.

(51) வாளரந்துடைத்தவைவேலிரண்டுடன்மலைந்தவேபோல்
ஆள்வழக்கொழியநீண்ட வணிமலர்த்தடங்கணெல்லாம்
நீள்சுடர்நெறியைநோக்குநிரையிதழ்நெருஞ்சிப்பூப்போல்
காளைதன்றேர்செல்வீதிகலந்துடன்றொக்கவன்றே.

இ - ள். வாள் அரம் துடைத்தவை வேல் இரண்டுஉடன் மலைந்தபோல்—வாளாகிய அரத்தாலராவினகூரிய இரண்டுவேல்கள்தம்முள்போர்செய்தனபோல, ஆள்வழக்கு ஒழியநீண்ட— ஆள்வழங்குதலறப் போர்செய்து நீண்ட, அணிமலர்தடகண்எல்லாம்—அழகிய தாமரை மலர்போலப்பரந்த கண்களெல்லாம், நீள்சுடர்நெறிஐ நோக்கும்— மிக்ககிரணத்தை யுடையசூரியன் செல்லு நெறியைநோக்காநின்ற, நிரைஇதழ்நெருஞ்சி பூபோல்—பத்தியாயுள்ளஇதழையுடைய நெருஞ்சிமலரைப்போல, காளைதன்தேர்செல்வீதி — சீவகனது தேர்செல்லும் வீதியில், கலந்துஉடன்தொக்க—தம்மிற்கலந்து சேரநெருங்கின.

க - ரை. அராவின வேலிரண்டு தம்மில்மலைந்தனபோல ஆள்வழக்கமறமலைந்து நீண்டகண்ணெல்லாம் கொடுமைசெய்யமாட்டாது தம்மிற்கலந்து, ஞாயிறுபோநெறியை நோக்கும்பூப்போலே காளைதேர்செல்கின்ற வீதியிலே சேரநெருங்கின.

நெருஞ்சி முள்நெருங்குதலையுடைய தெனநிற்றலால் வினைமுதற்பொருளில்வந்த தொழிற்பெயர் நெருங்குபகுதி, உகரக்கேடுசந்தி, இவிகுதி. நெருங்கிநெருஞ்சியெனவந்ததுமரூஉ. நெருஞ்சில் எனவரில், இல்புடைபெயர்ச்சிவிகுதியாகக்கொண்டுதொழிலாகு பெயரெனக்கொள்க. மலைந்த, தொக்க அஃறிணைப் பலவின்பாற்படர்க்கை யிறந்தகாலவினைமுற்றுகள் மலைபகுதி. தொகுபகுதி, முதனிலையெழுத்தாய்த்தோன்றி யககரமெய்இடைநிலை, உகரக்கேடுசந்தி, அவிகுதி. பூவினைமுதற்பொருளில்வந்த இகரவிகுதியொடு புணர்ந்துகுன்றிய தொழிற்பெயர். இதுஎடுத்துக் காட்டுவமையணி. அரம் வாளில் ஒருவகையதாதலால் அரம் விசேடம் என்றார். நெருஞ்சிமலரைப் போலப் பெண்கள் கண்கள் சீவகன்தேர் போதல்மேல் நின்றது என்பது கருத்து.

(52) வடகமுந் துகிலுந்தோடுமாலையுமணியுமுத்தும்
கடகமுங்குழையும்பூணுங்கதிரொளிகலந்துமூதூர்
இடவகையெல்லையெல்லாமின்னிரைத்திட்டதேபோல்
படவரவல்குலாரைப்பயந்தனமாடமெல்லாம்.

இ-ள். வடகம்உம் துகில்உம் — மேற்போர்வையும் ஆடையும், தோடும் மாலைஉம் மணிஉம் முத்துஉம் — காதணியுமலர்மாலையும் இரத்தினாபரணமும்முத்தவடமும், கடகம்உம் குழைஉம் பூண்உம் — கடகங்களுங்குண்டலங்களும் ஆபரணங்களும், கதிர் ஒளிகலந்து — சந்திரசூரியர்களையொத்த ஒளிதம்மிற்கலக்கும்படி, மின்நிரைத் திட்டதுபோல் — மின்னலைநிரைத்தாற்போல, மூதூர் இடம்வகைஎல்லைஎல்லாம் — தொன்றுதொட்டுள்ள இராசமாபுரத்தினிடத்தின் கூறுபாட்டின் எல்லையெல்லாவற்றிலுமுள்ள, மாடம்எல்லாம் — மாடங்களெல்லாம், அரவுபடம் அல்குலாரைபயந்தன — பாம்பின்படத்தையொத்த அல்குலையுடைய பெண்களைப்பெற்றன.

க-ரை. வடகமுதலியன ஒளிதம்மிற்கலக்கும்படி மின்னைநிரைத்தாற்போல, மூதூரிடத்தினது கூறுபாட்டினெல்லையெல்லா வற்றினுமுள்ள மாடமெல்லாம் அல்குலாரைப் பெற்றனவென்க.

வடகம் அத்தவாளம். வகைகூறுந்தெருவு. கலந்து செயவெனெச்சத்திரிபு. வடகமுதலியன ஒளிவீச மின்னலை வரிசைப்படுத்தியதுபோல மாடங்கள்மேற் பெண்கள்நின்றார் என்பதுகருத்து.

(53) மாதுகுமயிலினல்லார்மங்கலமரபுகூறிப்
போதகநம்பியென்பார்பூமியும்புணர்கவென்பார்
தோதகமாகவெங்குஞ்சுண்ணமேற்சொரிந்துதண்ணென்
தாதுகுபிணையல்வீசிச்சாந்துகொண்டெறிந்துநிற்பார்.

இ-ள். மாதுஉகு மயிலின்நல்லார் — ஆசைமிக்க மயிலைப்பார்க்கிலும் பொலிவுவாய்ந்தபெண்கள், மங்கலமரபுகூறி — மங்கலவாழ்த்துக்கூறி, நம்பி போதகஎன்பார் — ஆணிற்சிறந்தவனே வருகவென்பாரும், பூமிஉம் புணர்க என்பார் — (அரசனென்றறியாதிருந்தும்) நிலமாதினையும் சேரக்கடவாயென்பாரும், தோதகம்ஆக — வருத்தமிக, எங்கும் மேல் — எவ்விடத்து மாடத்தின் மேல்நின்று, சுண்ணம்சொரிந்து — சுண்ணப்பொடியைச்சிந்தி, தண்ணென்தாது உகுபிணையல்வீசி — குளிர்ந்தமகரந்தத்தைச் சிந்துமலர்மாலையைவீசி, சாந்துகொண்டு எறிந்துநிற்பார் — கலவையைக்கொண்டு தெளித்து நிற்பவரும்.

போதக "இருவேபுகுதக" என்றார்போலவந்தது. போதுகஎன்பது பொருள்.

(54) கொடையுளுமொருவன்கொல்லுங்கூற்றினுங்கொடியவாட்போர்ப்
படையுளுமொருவனென்றுபயங்கெழுபனுவலுண்ணூல்
நடையுளார்சொலிற்றெல்லாநம்பிச்சீவகன்கட்கண்டாந்
தொடையலங்கோதையென்றுசொல்லுபுதொழுதுநிற்பார்.

இ-ள். அம்தொடையல்கோதை — அழகியமாலையையணிந்த கூந்தலையுடையாய், கொடையுள்உம் ஒருவன் — கொடுத்தற்றொழிலிலும் ஒருவனே

கொடுப்பான், கொல்லும் கூற்றினும் கொடிய—கொல்லாநின்ற இயமனைப் பார்க்கினும் கொடிய, வாள்போர் படையுள்ளும் ஒருவனென்று—வாளேந்தி ச்செய்யும்போர்த்தொழிலில் வல்லசேனையினும் ஒருவனே வெல்வானென்று, பயம்கெழு நுண்பனுவல்—பிரயோசனமிக்க ஆராய்ச்சியையுடைய நுண்ணிய பொருளமைந்த, நூல்நடைஉள்ளார்சொல்லிற்றுஎல்லாம்—நூலின்ஒழுக்கமுடையவர்சொல்லியதையெல்லாம், நம்பிசீவகன்கண்கண்டாம்என்று — இவ்விரண்டும் ஒருவனிடத்து நில்லாவாயினும் நம்பியாகிய சீவகனிடத்திற்பார்த்தோம் என்று, சொல்லுபுதொழுதுநிற்பார்—சொல்லித்தொழுதுநிற்பவரும்.

த - ரை. கோதாய், நுண்ணூல் வல்லார்கூறிற்று, கொடையிலுமொருவன்கொடுப்பான், படையிலுமொருவன்வெல்வான், இரண்டுமொருவனிடத்தேநில்லாவென்றேயாயினும், அவ்விரண்டுஞ் சீவகனிடத்தே கண்டாமென்று தம்மிற்கூறி அவனைத்தொழுதுநிற்பவரும்.

உம்மை இரண்டும் உயர்வுசிறப்புப்பொருளன, ஒன்றல்லனவெல்லாம் பலவாதலால் இரண்டினைஎல்லாம் என்றார். சொல்லிற்றெல்லாம் ஒருமைபன்மைமயக்கம். நம்பிச்சீவகன்இருபெயரொட்டுப்பண்புத்தொகைநிலைத்தொடராதலால்வருமொழிமுதல்வல்லெழுத்துமிகுதல் "இயல்பினும்விதியினுநின்றவுயிர்முன்" என்றசூ-ஆல். இன்உருபு உயர்வுகுறித்தலில்வந்த எல்லைப்பொருட்டு. கோதை அண்மைவிளி. தொழிலுக்குந்தொழிலிக்கும்ஒற்றுமையுண்மையால்தொழிலைத்தொழிலிமேலேற்றிப்பனுவனூல்எனவும்,குணத்துக்குங்குணிக்கும் ஒற்றுமையுண்மையால்குணத்தைக்குணிமேலேற்றிநுண்ணூல் எனவுங்கூறினர்.கொடையைக்கன்னனிடத்தும்வெற்றியையருச்சுனனிடத்துங்கொள்க.

(55) செம்மலைப்பயந்தநற்றாய்செய்தவமுடையளென்பார்
எம்மலைத்தவஞ்செய்தாள்கொலெய்துவம்யாமுமென்பார்.
அம்மலையமுதமன்னாரகம்புலர்ந்தயர்ந்துநோக்கித்
தம்முறுவிழுமவெந்நோய்தந்துணைக்குரைத்துநிற்பார்.

இ - ள். செம்மலைபயந்தநற்றாய்— பெருமையிற் சிறந்தசீவகனைப்பெற்றநற்றாயானவள், செய்தவம் உடையள் என்பார்—செய்தவமுடையாளென்பவரும், எமலைதவம்செய்தாள்கொல் — (இவனையடையவிருக்கின்றவள்) எந்தமலையிலிருந்து தவஞ்செய்தாளோ, யாம்உம் எய்துவம் என்பார்—நாமுந்தவஞ்செய்ய அம்மலையையடைவோமென்பவரும், அமுலை அமுதம் அன்னார் அகம்புலர்ந்து — அழகியதனத்தையுடைய அமுதத்தையொத்த பெண்கள்நெஞ்சுலர்ந்து, அயர்ந்துநோக்கி—சோர்ந்துபார்த்து, தம்உறுவிழுமம் வெம்நோய்—தம்முடையமிக்ககாமநோயை, தம்துணைக்கு உரைத்துநிற்பார் — தமதுதோழிக்குச்சொல்லிநிற்பவரும்.

த - ரை. இவனைப் பயந்தமையாற் றவமுடைய ளென்பாரும், இவனைப்பெறவிருக்கின்றவள் எம்மலையில் நின்று தவஞ்செய்தாள் யாமும் அதனைச் சேர்வேமென்பாரும், நெஞ்சுலர்ந்து தம்முடையமிக்க சீரியகாமநோயைத்தந் தோழியர்க்குக் கூறிநிற்பாரும்.

தவஞ்செய்தார்கொல் எனவும் பாடம். கொல்ஐயப்பொருளில்வந்தஇ

டைச்சொல். எய்துவம் தன்மைப்பன்மை யெதிர்காலவினைமுற்று எய்துபகுதி, வகரமெய்இடைநிலை, அம்விகுதி. குற்றியலுகரங் கெடாதியல்பாதல் "உயிர்வரினுக்குறள்" என்னுஞ்சூ — இல் "ஓடும்" என்றஇலேசால். அகம் புலர்ந்து உயர் திணையொடுசார்ந்த அஃறிணையுயர்திணை முடிபேற்று நின்றது திணைவழுவமைதி, புலர்ந்து, அயர்ந்து, நோக்கி, உரைத்துஎன்னும் இறந்தகாலவினையெச்சங்கள் ஒன்றனையொன்று கொண்டுநிற்பார் என்னும் வினைமுற்றின் முதனிலைகொண்டன. அம்மூலை யமுதமன்னார் இல்பொருளுவமையணி.

(56) சினவுநர்க்கடந்தசெல்வன்செம்மலரகலநாளைக்
கனவினிலருளிவந்துகாட்டியாங்காணவென்பார்
மனவிரியல்குலார்தம்மனத்தொடுமயங்கியொன்றும்
வினவுநரின்றிநின்றுவேண்டுவகூறுவாரும்.

இ - ள். மனவிரி அல்குலார் — இரத்தினமழுத்தியமேகலையையணிந்த பெண்கள், சினவுநர்கடந்தசெல்வன் — கோபிக்கும்பகையரசரைவென்றபோர்ச்செல்வத்தையுடைய சீவகனே, அருளி — இன்று எம்மைக்காத்து, நாளை — நாளைத்தினம், செம்மலர் அகலம்கனவின் இல்வந்து — செவந்தமலராகிய மாலையையணிந்த மார்பினைக்கனவில்வந்து, யாம்காணகாட்டி என்பார் — யாங்காணக் காட்டுவாயாக வென்பவரும், ஒன்றுஉம் வினவுநர் இன்றி — ஒன்றுந் தம்மைவினவுவோரில்லாமையால்; மயங்கிநின்று — மயக்கங்கொண்டுநின்று, தம்மனத்து ஒடுவேண்டுவகூறுவார்உம் — தமது மனத்தோடு அவனிடத்து விரும்பும் நுகர்ச்சிகளைச் சொல்லுகின்றவர்களும்.

ந - ரை. செல்வனே எம்மையருளி நாளைக்கனவிடத்தேவந்துநின்னகலத்தையாங்காணக் காட்டுவாயாகவென்பாரும், தாங்கூறுவனவொன்றுகேட்பாரின்றாகவுமயங்கிநின்று தாமிவனிடத்து விரும்புநுகர்ச்சிகளைத் தம்மனத்தோடு கூறுவாரும்.

சினவுநர், வினவுநர் எதிர்கால வினைமுற்றுப்பெயர் சினவு, வினவுபகுதிகள், நகரமெய் இடைநிலை, அர்விகுதி. இன் உருபிற்கு இன்சாரியையில்லாமையால் கனவினில் எனப்பாடங்கொள்க. செல்வன் அண்மைவிளி. காட்டிவியங்கோள் வினைமுற்று காட்டுபகுதி, உகரக்கேடுசந்தி, இவியங்கோள் விகுதி. (௫௬)

(57) விண்ணகத்துளர்கொல்மற்றிவ்வென்றிவேற்குரிசிலொப்பார்
மண்ணகத்திவர்களொவ்வார்மழகளிறனையதோன்றல்
பண்ணகத்துறையுஞ்சொல்லார்நன்னலம்பருகவேண்டி
அண்ணலைத்தவத்திற்றந்தார்யார்கொலோவளியரென்பார்.

இ - ள். மழகளிறு அனையதோன்றல் — இளமைதங்கிய யானையையொத்த இச்சீவகனை, மண் அகத்து இவர்கள் ஒவ்வார் — மண்ணுலகிலுள்ள இம்மனிதர்களொப்பாகாராதலால், இவென்றிவேல் குரிசில் ஒப்பார் — இந்தவெற்றியமைந்த வேலையேந்திய பெருமையிற் சிறந்தவனையொப்பவர்; விண் அகத்து உளர்கொல்மற்று — தேவருலகிலிருக்கின்றாரோ இல்லை, பண் அகத்து உறை

யும் சொல்லார்—இசையில் குடிகொண்ட சொல்லையுடைய பெண்கள், நல்நல
ம்பருகவேண்டி—இவ்வுலகிலில்லாத தோரின்பத்தைநுகர விரும்பி, அண்ண
லைதவத்துஇல்தந்தார்—இந்த அண்ணலைத்தவத்தாற் பெற்றவர்கள், யார்கொல்
ஓ—தேவரோமக்களோயாரோ, அளியர் என்பார்—அவரே எல்லாராலுங்கா
க்கத்தக்கவர் என்பாரும்.

ந - ரை. தோன்றலை மண்ணிடத்து இம்மக்களொவ்வாராதலாற் பின்
னையிக்குரிசிலையொப்பார் விண்ணகத்துளரோ, அஃதறிகின்றிலே மென்பா
ரும், இவ்வுலகின் மகளிர் ஈங்கில்லாத தொருநலத்தை நுகரவெண்டி இவ்வ
ண்ணலைத் தாஞ்செய்ததவத்தாற் றந்தவர் தேவரோ மக்களோ அவர் யாவரா
யினும் எல்லாராலு மளிக்கத்தக்கார் என்பாருமாய்.

அண்ணல் பெருமையிற்சிறந்தோன். அதன்முதலில் அகரச்சுட்டுத்தொ
குத்தல். மற்று இல்லையென்னும் பொருள்மேல்நிற்றலால் வினைமாற்றுப்பொ
ருளில்வந்தது. ஒப்பார் உடன்பாட்டில்வந்த உவமவுருபிடைச் சொல்லடியா
கப்பிறந்த வினைமுற்றுப்பெயர்ஒ இடைச்சொற்பகுதி, பகரம்சந்தி, பகரமெய்
இடைநிலை, ஆர்விகுதி. ஒவ்வார் எதிர்மறையில்வந்த உவமவுருபிடைச்சொல்
லடியாகப்பிறந்த எதிர்மறைவினைமுற்றுஒ இடைச்சொற்பகுதி, வகரமெய்சந்
தி, ஆஎதிர்மறைவிகுதி, தனிக்குறின்முன் ஒற்றுமிகுதல்சந்தி,அனைத்தும் ஒரு
பகுதி. முதற்குறைபாய்நின்ற ஆர்பலர்பால்விகுதி. (௫எ)

(58) வட்டுடைப்பொலிந்ததானைவள்ளலைக்கண்டபோழ்தே
பட்டுடைசூழ்ந்தகாசுபஞ்சிமெல்லடியைச்சூழ
அட்டரக்கனையசெவ்வாயணிநலங்கருகிக்காமக்
கட்டழலெறிப்பநின்றார்கைவளைகழலநின்றார்.

இ - ள். வட்டுடைபொலிந்ததானை வள்ளலைகண்டபோழ்தவ—வட்டு
டையால்விளங்கிய காலாட்படையையுடைய சீவகனைக்கண்டகாலத்தே, பட்
டுஉடைசூழ்ந்தகாசு—பட்டாடைமேற்சூழ்ந்த மேகலை, பஞ்சிமெல் அடியை
சூழ—செம்பஞ்சுக்குழம்பூட்டிய மெல்லியகாலைச்சூழ, காமம்கட்டழல் எறிப்
ப—காமத்தீயெரிய, அட்ட அரக்கு அனையசெவ்வாய் அணிநலம் கருகின்
றார்—உருக்கிய அரக்கினையொத்த செவந்தவாயின் அழகுகருகினறவர்கள்,
கைவளைகழலநின்றார்—கையிலணிந்தவளை சோரநின்றார்கள்.

ந - ரை. வள்ளலைக்கண்டபொழுதே காமத்தீயெரியவாய்கருகினின்றவ
ர்கள்பின்பு, மேகலைகழலவளை கழலநின்றார் என்க.

வட்டுடைமுழந்தாளளவும் வீரருடுக்கும் உடை. மாதுகு என்னுஞ் செ
ய்யுள்முதல் இச்செய்யுள்காறும் ஒருதொடராதலால் மேலைச்செய்யுளின்கடை
யில் ஆய் என்னும் வினையெச்சந்தருகின்றார் என்பதுகொண்டுமுடியநிற்
றலால் குளகம். அட்டபெயரெச்சத்தி னீறுதொகுத்தல். (௫அ)

(59) வார்செலச்செல்லவிம்முவரிமுலைமகளிர்நோக்கி
ஏர்செலச்செல்லவேத்தித்தொழுதுதோகைக்கவிப்பாற்
பார்செலச்செல்லச்சிந்திப்பைம்தொடிசொரிந்தநம்பன்
தேர்செலச்செல்லும்வீதிபீர்செலச்செல்லுமன்றே.

இ - ள். நம்பன்தேர்செல இபால்வார்செல செல்லவிம்முவரிழுலைமக ளிர் நோக்கி—சீவகன்தேர்செல்லுதலால் இப்புறம் கச்சுமேலேபோகப் போக விம் மாநின்றசந்தனக்கோலமமைந்த தனத்தையுடைய பெண்கள் தேர்மறை யுமளவும்பார்த்து, ஏர்செலசெல்ல—அழகுகழியாநிற்கக் கழியாநிற்க, ஏத்தி தொழுது தோள்தூக்க — கைகூப்பித்தொழுது தோளைத்தொங்கவிட, பைந் தொடிபார் செல்ல செல்ல சிந்திசொரிந்த (அத்தோள்கள்) பசியதொடிகள் நிலத்திலேசெல்லும்படி செல்லும்படி சிந்திச்சொரிந்தன, செல்லும் வீதியீர் செல செல்லும்—(பின்பு அவனதுதேர்) செல்லும் வீதியில் (அப்பெண்களுக் கு) பசலைபரக்கச் செல்லாநிற்கும்.

ந - ரை. நம்பன்தேர் செல்லுதலாலே யிப்பாலுள்ள மகளிர், மறையு மளவுநோக்கிநின்று அழகுபோகா நிற்கப்போகாநிற்க ஏத்தித்தொழுது தோளை நாற்ற, அத்தோள்கள் செருகிக்காத்தற்குரிய தொடிகளையுஞ் சொரிந்தன, பி ன்பு அவனதுதேர் செல்கின்றவீதியின் மகளிர்க்குப் பசப்புப்பரக்கத் தான் செல்லாநிற்குமென்க.

தொடிவளையலில் ஒருவகை. தொடுக்கப்படுவது என்னும் பொருள்மேல் நிற்றலால் செயப்படுபொருளில்வந்த தொழிற்பெயர் தொடுபகுதி, உகரக்கேடு சந்தி, இவிகுதி. வார்செலச்செல்ல மிகுதிப்பொருளில்வந்த அடுக்கு. ஏர் செலச்செல்ல, பார்செலச்செல்ல அவலப்பொருளில்வந்த அடுக்கு. ஏத்தி, தொழுது இறந்தகாலவினையெச்சங்கள் ஏத்து, தொழுபகுதிகள். (௬௧)

(60) வாண்முகத்தலர்ந்தபோலுமழைமலர்த்தடங்கண்கோட்டித்
தோண்முதற்பசலைதீரத்தோன்றலைப்பருகுவார்போல்
நாண்முதற்பாசந்தட்பநடுங்கினார்நிற்பநில்லான்
கோண்முகப்புலியோடொப்பான்கொழுநிதிப்புரிசைபுக்கான்.

இ - ள். தோள்முதல் பசலைதீர—(பெண்கள்) தமது தோளிடத்துப்ப சப்புநீங்க, தோன்றலைபருகுவார்போல், சீவகனைப்பருகுவாரைப்போல, வாள் முகத்து அலர்ந்தமலர்போலும் மழைதட கண்கோட்டி—ஒளியமைந்த முகத் தில்மலர்ந்த மலரையொத்த குளிர்ந்த பரந்தகண்களைவளைத்துப்பார்த்து, நாண் முதல்பாசம்தட்ப—நாணுகிய முதற்றளைதடுத்தலால், நடுங்கினார்நிற்ப—நடுங்கி நிற்க, கோள்முகம்புலியோடு ஒப்பான்நில்லான் — கொலைத்தொழிலமைந்த முகத்தையுடைய புலியையொத்த அச்சீவகனில்லாது, கொழுநிதி புரிசைபுக் கான்—பெருஞ்செல்வம்வாய்ந்த மதிலுக்குள்ளே புகுந்தான்.

ந - ரை. அங்ஙனம் பசந்தவர்தம் தோளிற் பசலைதீரும்படி, தோன்ற லைப்பருகுவார்போலே கண்ணாலேவளைத்துப்பார்த்து நடுங்கினராய் நாணுகிய முதற்றளைதடுத்தலாலேசெல்லமாட்டாதுநிற்ப, தான்நில்லானுய்க்கொல்லுமுக த்தையுடைய புலிபோல்வான்புரிசைக்குள்ளே புகுந்தான என்க.

பெண்களுக்குரிய நான்குகுணத்துள் நாணமுதற்குணமாதலால் நாண்மு தற்பாசம் எனவும், வீட்டைச்சூழ்ந்த மதிலாதலால் கொழுநிதிப்புரிசை யெ னவுங்கூறினார். தோள்முதல் என்றதில் முதல்இடம். நடுங்கினர், நில்லான் முற்றெச்சங்கள். கோட்டி இறந்தகாலவினையெச்சம் கோட்டுபகுதி. புக்கான்

இறந்தகாலவினைமுற்று புகுபகுதி, முதனிலையெழுத்தாய்த்தோன்றியககரமெய்இடைநிலை, உகரக்கேடுசந்தி, ஆன்விகுதி. (சுo)

(61) பொன்னுகம்புரவிபூட்டுவிட்டுடன்பந்திபுக்க
மன்னுகவென்றியென்றுமணிவள்ளநிறையவாக்கி
இன்மதுப்பலியும்பூவுஞ்சாந்தமும்விளக்குமேந்தி
மின்னுகுசெம்பொற்கொட்டில்விளங்குதேர்புக்கதன்றே.

இ - ள். புரவிபொன்நுகம் பூட்டுவிட்டு உடன்பந்திபுக்க—குதிரைகள் பொன்னாற்செய்தநு கத்தினது பூட்டுதலைவிட்டு விரைந்துபந்தியிற் புகுந்தன, இன்மது மணிவள்ளம் நிறையவாக்கி (தேருக்கு) இனியமதுவினை அழகிய வட்டில் நிறையவார்த்து, பலிஉம் பூஉம் சாந்தம்உம் விளக்குஉம் — அம்மதுவாகிய பலியையும் பூவையுஞ் சந்தனத்தையும்விளக்கையும், வென்றிமன்னுக என்று ஏந்தி—எப்பொழுதும் வெற்றிபெறுகவென்றேந்த, விளங்குதேர்—விளங்காநின்றதேர், மின்உகு செம்பொன்கொட்டில் புக்கது—ஒளிவீசும் செவந்தபொன்னாலாகிய கொட்டிலிற் புகுந்தது.

ந - ரை. புரவிநுகம் பூட்டுதல்விட்டுப் பந்தியிலே புக்கன, பின்பு தேருக்கு மதுவைவட்டி னிறையவார்த்து, அம்மதுவாகிய பலிமுதலியவற்றைவென்றிமன்னுகவென்றேந்த, அத்தேர் மகிழ்ந்து கொட்டிலிலேபுக்கதென்க.

பூட்டுமுதனிலைத் தொழிற்பெயர். ஏந்திசெயவெனெச்சத்திரிபு. வாக்கி இறந்தகாலவினையெச்சம் வாக்குபகுதி. (சுக)

(62) இட்டவுத்தரியமெல்லென்றிடைசுவல்வருத்தவொல்கி
அட்டமங்கலமுமேந்தியாயிரத்தெண்மரீண்டிப்
பட்டமுங்குழையுமின்னப்பல்கலனொலிப்பச்சூழ்ந்து
மட்டவிழ்கோதைமார்பின்மைந்தனைக்கொண்டுபுக்கார்.

இ - ள். ஆயிரத்தெண்மர் ஈண்டி — ஆயிரத்தெட்டுச் சுமங்கலப்பெண்கள் நெருங்கி, அட்டமங்கலம்உம் ஏந்தி—எட்டுமங்கலங்களையுமேந்தி, பட்டம்உம் குழைஉம்மின்ன—நெற்றிப்பட்டமுங் குண்டலமும் விளங்கவும், பல்கலன்ஒலிப்ப—பலஆபரணங்களுமொலிக்கவும், இட்ட உத்தரியம் மெல்லென்ற இடைசுவல்வருத்த—மேலேயிட்ட உத்தரியமானதுமிருதுவாகிய இடையையும் பிடரியையும் வருத்தவும், மட்டு அவிழ்கோதைமார்பு இன்மைந்தனை—வாசனையோடலர்ந்தமலர் மாலையையணிந்த மார்பினையுடைய சீவகனை, ஒல்கிசூழ்ந்துகொண்டுபுக்கார் — எதிர்கொண்டு சூழ்ந்து வீட்டுள்ளே கொண்டு புகுந்தார்.

ந - ரை. ஆயிரத்தெண்மரீண்டியெட்டு மங்கலத்தையுமேந்தி, மின்ன, ஒலிப்ப, உத்தரியம் இடையையுஞ் சுவலையும்வருத்த எதிர்கொண்டு சூழ்ந்து மைந்தனையுள்ளேகொண்டுபுக்கார் என்க.

அட்டமங்கலங்கள்ஆவன சாமரை, தீபம், பொற்குடம், இணைக்கயல், கண்ணாடி, தோட்டி, கொடி, முரசு "சாமரைதீபந்த பனியப்பொற்குடம்—காமர்கயலிணிணைமுதலாத்—தேமருவு—கண்ணாடிதோட்டி கதலிகைவென்முரசம்—எண்ணிய மங்கலங்களெட்டு" என்பதனால் உணர்க. இணைக்கயல்,

முரசு, தீபம், தோட்டி இவைகளை ஒழித்துச் சிவிற்சம, சுவத்திகம், சங்கு, இடபம் இவற்றைக்கூட்டி எட்டென்பாரும் உண்டு. ஒல்கி இறந்தகாலவினையெச்சம். ஒல்குபகுதி. ஆயிரத்தெண்மர் ஆயிரவரும் எண்மரும் உம்மைத்தொகை நிலைத்தொடர். எண்மர் என்றதில் மகரம்பெயரிடைநிலை. முதல்சினைக்கொற்றுமையுண்மையால் சினைவினையைமுதல் மேலேற்றி மட்ட விழ்கோதையென்றார். மெல்லென்ற பெயரெச்சத்தி னீறுதொகுத்தல். (௬௨)

(63) தாயுயர்மிக்கதந்தைவந்தெதிர்கொண்டுபுக்குக்
காய்கதிர்மணிசெய்வெள்வேற்காளையைக்காவலோம்பி
ஆய்கதிருமிழும்பைம்பூணாயிரச்செங்கணான்றன்
சேயுயருலகமெய்தியன்னதோர்செல்வமுற்றார்.

இ - ள். தாய்உயர்மிக்க தந்தைவந்து எதிர்கொண்டுபுக்கு—தாயும்தன் பிள்ளையுயர்ச்சிமிகுதற்குக் காரணமான தந்தையும்வந்து எதிர்கொண்டுபுகுந்து' கதிர்காய் மணிசெய்வெள் வேல்காளையை—ஒளிவீசுங்கடைமணியையுடைய நிணந்தோய்ந்த வேலினையேந்திய சீவகனை, காவல்ஓம்பி — ஆலத்தி முதலியவற்றாற் கண்ணெச்சில்போக்கி, கதிர் உமிழும் ஆய்பைம்பூண்—ஒளியுமிழும் ஆராய்ந்தபசிய ஆபரணத்தையணிந்த, ஆயிரச்செங்கணான் தன் சேய்உயர் உலகம் எய்தியன்னது ஓர்செல்வம் உற்றார்—இந்திரனுடைய சேய்மையிலுள்ள உயர்ந்த விண்ணுலகத்தைப் பெற்றாலொத்ததொரு செல்வத்தை யடைந்தார்கள்.

ந - ரை. தாயுந்தந்தையும் பிள்ளையையெதிர்கொண்டுபுக்கு, ஆலத்திமுதலியவற்றாலே பரிகரித்து, உலகைப் பெற்றாலொத்ததோர் செல்வத்தைத் தாம் உற்றார் என்க.

சேய்மைதூரம். காவலோம்பி ஒருசொல். கதிருமிழும் வீசுதலேயன்றிஉமிழ்தலில்லாமையாற் குணவணி. எய்தியன்னது தொகுத்தல்விகாரம்.()

(64) தகைமதியெழிலைவாட்டுந்தாமரைப்பூவினங்கட்
புகைநுதியழலவாட்கட்பொன்னனாள்புல்லநீண்ட
வகைமலிவரைசெய்மார்பின்வள்ளலைக்கண்டுவண்டார்த்
தொகைமலிதொறுவையாளுந்தோன்றன்மற்றின்னகூறும்.

இ - ள். தகைமதி எழிலைவாட்டும் — பொலிவமைந்த சந்திரனுக்குத் தன்பொலிவுகெடாமல் அதன்பொலிவைக்கெடுக்கும், தாமரைப்பூவின் அங்கண் நுதி அழலபுகைவாள்கண் பொன்அன்னாள் — தாமரைமலரின்கண் வசிக்கும் நுனியில்நெருப்பெழப்புகையும் வாள்போன்ற கண்களையுடைய இலட்சுமி, புல்லநீண்டவகை மலிவரைசெய் மார்பின்வள்ளலைகண்டு—பொருந்தப் பருத்தபொருளின் பகுதிநிறைந்த மலையையொத்த மார்பினையுடைய சீவகனைப்பார்த்து, வண்தார்தொகை மலிதொறுவை ஆளும்தோன்றல்— செழித்தமுல்லைமலர் மாலையையணிந்த கூட்டமிக்க பசுக்களையாளும் நந்தகோன், இன்னகூறும்—இத்தன்மையாகிய சொற்களைக்கூறுவான்.

ந - ரை. தான்மதிக்குக்கெடாதே மதியைத்தான்கெடுக்கும் பொற்றாமரையிற் றிருப்பொருந்தும்படி பெருத்த மார்பினையுடைய வள்ளலைக்கண்டு

சிலமொழிகளைக் கூறுநிற்கும் நிலைமையாளும் வண்டானை யுடைய நந்தகோன் எனக.

வளைஎன்றது மலைபடுதிரவியங்களை. சந்திரனைக்கண்டு தாமரைகுவிதலால் இதுதெய்வத்தன்மையதென்பார் தகைமதியெழிலைவாட்டு மெனக்கூறினர். மற்றுஅசைநிலை. இன்னபண்பின்மேல்நின்ற சுட்டடியாகப்பிறந்த குறிப்புவினைமுற்றுப்பெயர். இசுட்டிடைச் சொற்பகுதி, னகரமெய்விரித்தல்விகாரம், னகரமெய்சந்தி, அவிகுதி.

(65) கேட்டிதுமறக்கநம்பிகேண்முதற்கெடுசூழ்ந்த
நாட்டிறைவிசயையென்னுநாறுபூங்கொம்பனாளை
வேட்டிறைபாரமெல்லாங்கட்டியங்காரன்றன்னைப்
பூட்டிமற்றவன்றனாலேபொறிமுதலடர்க்கப்பட்டான்.

இ - ள். நம்பிஇது கேட்டுமறக்க— ஆணிற்சிறவனே இதனைக்கேட்டுமறப்பாயாக. இன்னகேள்—இத்தன்மையையுடைய இரண்டுமொழிகளைக்கேளாய், விசயையென்னும்நாறுபூங்கொம்பு அன்னாளை—விசயையென்னு மணங்கமழும்பூங்கொம்பையொத்தவளை, வேட்டு—கல்லியாணஞ்செய்து, முதல்நாடு கேடுசூழ்ந்தஇறை—தனக்குமுன்னே நாட்டிற்குக் கெடுதிசூழ்ந்த சச்சந்தன், இறைபாரம்எல்லாம் கட்டியங்காரன் தன்னைப்பூட்டி— அரசியற் பாரத்தையெல்லாம் கட்டியங்காரனுக்குப்பூட்டி, அவன்தன் ஆல்பொறிமுதல் அடர்க்கப்பட்டான்—அக்கட்டியங்காரனால் உயிரைப்போக்கப் பட்டானாயினன்.

ந - ரை. வள்ளலைக்கண்டு கூறுந்தோன்றல், நம்பி, இதனைக்கேட்டுமறப்பாயாக, பின்னை இன்னகேட்பாயாக அவ்விரண்டும்யாவையென்னின், கொம்பனாளைவிரும்பிப் பல்லுயிரைக் காக்கின்றபாரத்தை யெல்லாங் கட்டியங்காரனைப்பூட்டி, தனக்குமுன்னே நாட்டிற்குக் கேடுசூழ்ந்தஇறை அவனாலேயுயிரைப்போக்கப்பட்டான் எனக.

இரண்டுமொழிகளாதலால்முன்பாட்டில் இன்னவென்னும்பன்மைப்பாற்சொல்லைக் கூட்டிக்கேள்எனவும், இருவினையையுஞ் செய்தற்குக்காரணமானவுயிர் ஆதலால் உயிரைப்பொறி முதலெனவுங்கூறினர். வேட்டு இறந்தகாலவினையெச்சம் வேள்பகுதி. மறக்கவியங்கோள்வினைமுற்று மறபகுதி, ககரமெய்சந்தி, கவிகுதி. எல்லாவுருபோடும் நான்காம்வேற்றுமையுருபு வருதலால்கட்டியங்காரன்றன்னைப்பூட்டியென இரண்டனுருபுதந்தார் "எல்லாவுருபொடுங்கொள்வோனெழுமே" என்பதுசூத்திரம் "செய்யவள்தவ்வையைக்காட்டிவிடும்" என்பதனால்அறிக. பொறிமுதல் என்றது தொல்காப்பியம் சொல்லதிகாரம் வேற்றுமை மயங்கியல் "வினையேசெய்வது" உ௯-ம்சூ — இல் "தொழின்முதனிலையே" என்றாற்போலவந்ததுஎன்றார். தொழின்முதனிலை என்றதற்குத் தொழிலைக்காரியத்திற்கு முன்னிற்குங் காரணம்என்பதுபொருள், அதுபோல இருவினையாகிய காரியங்களைச் செய்தற்குக் காரணமாய் உயிர்முன்னிற்றலால். அவன்றனால் பொறிமுதலடர்க்கப் பட்டான் செயப்படுபொருளால் முடிந்தமுடிபில் அவன்றனால் என்னும் மூன்றாம்வேற்றுமை வினைமுதலின் பயனிலையாகிய அடர்க்கவென்னும் வினையெச்சம் சச்சந்தனென்னும்

செயப்படுபொருளின் முடிபாகிய பட்டான் என்னும் வினைமுதலின் முடிபாகிய பயனிலையின் முதனிலையைக் கொண்டது. மற்றுஎன்னும் இடைச்சொல்காத்தல் என்னும் வினையைமாற்றி நிற்றலால் வினைமாற்றுப் பொருளில்வந்தது. (௬௫)

(66) கோலிழுக்குற்றஞான்றேகொடுமுடிவரையொன்றேறிக்
காலிழுக்குற்றுவீழ்ந்தென்கருந்தலைகழியலுற்றேன்
மால்வழியுளதன்றாயின்வாழ்வினைமுடிப்பலென்றே
ஆலம்வித்தனையதெண்ணியழிவினுள்அகன்றுநின்றேன்.

இ - ள். கோல்இழுக்கு உற்றஞான்றுஏ—சச்சந்தன்செங்கோல்ஒழியக் கொடுங்கோல் தலையெடுத்த அப்பொழுதே, கொடுமுடி வரை ஒன்றுஏறி—சிகரத்தையுடைய மலையொன்றிலேறி, கால்இழுக்கு உற்றுவீழ்ந்து—காலோடிவீழ்ந்து, என்கருந்தலைகழியலுற்றேன்—எனதுஇழிந்ததலைசிதற உயிர்போக்கத்தொடங்கியயான், மால்வழி—திருமால்போன்றஅச்சச்சந்தன்வழியே, ஆலம்வித்துஅனையது—ஆலம்வித்தைப் போலத்தெறித்து மறைந்துபோய்த்தோன்றும் பிள்ளையொன்று, உளது அன்றுஆயின்—தோன்றுவதில்லையானால், வாழ்வின்ஐ முடிப்பல்என்று எண்ணி—உயிரைமுடிப்பேனென்றுகருதி, அழிவின்உள் அகன்றுநின்றேன்—வருத்தத்தில்மேம்பட்டுநின்றேன்.

ந - ரை. அவனுலுயிரைப்போக்கப்பட்ட அன்றேவரையேறி வீழ்ந்து உயிரைப்போக்கலுற்றயான், மால்வழி ஆலம்வித்துப்போலத் தெறித்துப்போய்மறைந்து பின்றோன்றினதில்லையாயின் உயிரைப்போக்குவலென்றே யெண்ணி, வருத்தத்தேமிக்கு நின்றேனென்றானென்க.

கட்டியங்காரன், நந்தகோன்சச்சந்தனோடிறந்தானதலாலிவன் அரசனோடு நட்புடையானென்று தன்சுற்றத்தையும் அழிப்பானேயென்று கருதிக் காலிழுக்குற்று வீழ்ந்தேனாகவென்றாது வீழ்ந்துஎனவும், தேவிக்குப்பிள்ளையுண்டென்றறிதலால் ஆலம்வித்தனை யதுமால் வழியுளதன்றாயின் எனவும் இதனைமறக்க என்பான்கேட்டிது மறக்கவெனவுங்கூறினான். கருமையென்னும்பண்பு "வெள்ளைப்புத்தி, வெண்கலம் என்றாற்போல இழிவின்மேல்நின்றது, வெள்ளைஎன்பது மந்தத்தின்மேலும், வெண்மை என்பது கலப்பின்மைமேலுநின்றாற்போல. தலைகழியலுற்றேன் உயர்திணையொடுசார்ந்த அஃறிணை உயர்திணை முடிபேற்றது திணைவழுவமைதி. முடிப்பல் தன்மையொருமையெதிர்காலவினைமுற்று முடிபகுதி, பகரமெய்சந்தி, பகரமெய் எதிர்காலவிடைநிலை, அல்விகுதி. (௬௬)

(67) குலத்தொடுமுடிந்தகோன்றன்குடிவழிவாராநின்றேன்
நலத்தகுதொறுவினுள்ளேனுமங்கோவிந்தனென்பேன்
இலக்கணமமைந்தகோதாவரியெனவிசையிற்போந்த
நலத்தகுமனைவிபெற்றநங்கைகோவிந்தைஎன்பாள்.

இ - ள். குலத்து ஒடுமுடிந்த கோன்தன் குடிவழி — தன்குலத்தோடு அழிந்த சச்சந்தனதுகுடியின்வழியே, வாராநின்றேன்—இடைவிடாதுவாராநின்றேன், நலம் தகுதொறுவின்உள்ளேன்—வளத்துக்குத்தக்க இடைநிலத்தி

ழுள்ளேன், நாமம்கோவிந்தன் என்பேன்—பெயர் கோவிந்தனென்று சொல்ல ப்படுவேன், கோதாவரி என்னஇசைஇல்போந்த— கோதாவரியென்று புகழா லெங்கும்பரந்த, இலக்கணம் அமைந்த நலத்தகுமனைவி—இலக்கணங்களமை ந்த என்செல்வத்துக்குத் தக்கமனைவியானவள், பெற்றநங்கை கோவிந்தையெ ன்பாள்—பெற்றபெண்ணிற்சிறந்தவள் கோவிந்தையென்று சொல்லப்படுவாள்.

ந - ரை. யான், கோன்குடி வழிவாராநின்றேன், இடையிடத்தேன், பெயர்கோவிந்த னென்றுகூறப்படுவேன், கோதாவரியென்று கூறிப்புகழா லெங்கும்பரந்த இலக்கணமமைந்த என்மனைவிபெற்றநங்கைகோவிந்தையெ ன்றுகூறப்படுவாள்.

தன்பெயரும் தன்மனையாள்பெயரும் புத்திரியின்பெயரும் இதனாற்கூற ப்பட்டன. தொறுபசுக்கூட்டம். அது தானியாகுபெயராய்த்தானமாகியமுல் லைநிலத்தின்மேல்நின்றது. குலந்தோன்று தலருமைபற்றி முடிந்தவெனவு ம், அரசன் கோற்கீழ்வாழுங் குடிதானுதலால் கோன்குடிவழியெனவும், தன்குடியெல்லாம் இப்பொழுது தானாய்நிற்றலால் வாராநின்றேன் எனவும், பெண்களுக்குக்கூறிய முப்பத்திரண்டிலக் கணமுமுடைமையால் இலக்கணம மைந்த வெனவுங்கூறினு னெனக்கூறினர். குறிஞ்சி, பாலை, முல்லை, மரு தம், நெய்தலென்னும் ஐந்துநிலங்களுக்கு முல்லை, நடுநிலமாதலால் இடை யிடம் எனக்கொள்க. இடையர்எனவந்த பெயர்க்காரணமுமது. வாராநின் றேன், நிகழ்காலத்தில்வந்த இறந்தகாலத்தன்மை யொருமைவினைமுற்று வா பகுதி, ரகரவுகரம் விரித்தல்விகாரம், உகரக்கேடுசந்தி, ஆநில்நிகழ்காலவிடை நிலை, அனைத்தும் ஒருபகுதி, றரமெய்இடைநிலை, லகரத்திரிபுசந்தி, ஏன்வி குதி, ஆசாரியையாகக்கொண்டு நில்என்பதை நிகழ்கால இடைநிலையாக்கலு மொன்று. (சுஎ)

(68) வம்புடைமுலையினுளென் மடமகள்மதர்வைநோக்கம்
அம்படியிருத்திநெஞ்சத்தழுத்தியிட்டனையதொப்பக்
கொம்படுநுசுப்பினுளைக்குறையிரந்துழந்துநின்ற
நம்படைதம்முளெல்லாநகைமுகமழிந்துநின்றேன்.

இ - ள். வம்புஉடையமுலையினுள் என்மடமகள்மதர்வைநோக்கம்—கச் சினையணிந்ததனத்தையுடைய என்புத்திரியினதுமதர்த்தபார்வையானது, அ ம்புஅடிஇருத்தி—அம்பினைத்தோளினடியிலேசெல்லவித்து, நெஞ்சத்து அ ழுத்தியிட்டனையதுஒப்ப—மனத்திலழுத்தியதன்மையையொத்தலால், கொம் புஅடுநுசுப்பினுளை குறைஇரந்து—பூங்கொம்பினையொத்த இடையையுடைய அக்கோவிந்தையைப்பெறத்தமதுகுறைகூறிவேண்டி,உழந்துநின்றநம்படை தம்உள் எல்லாம்—வருந்திநின்ற நமது ஆயரிடத்தெல்லாம், நகைமுகம் அழிந் துநின்றேன்—முகமலர்ச்சியில்லாமல் மறுத்துநின்றேன்.

ந - ரை. முலையினுளாகிய என்மகள்நோக்கம், எல்லார்க்கும் அம்பைத் தோளடியிலே செல்லவித்து நெஞ்சிலேயழுத்திய தன்மையையொத்தலா லே, அந்நுசுப்பினுளைப்பெற வேண்டுமென்று வருந்திநின்ற நம்ஆயரிடத்தெல் லா முகச்செவ்வியின்றி மறுத்துநின்றேனென்க.

தான்சீவகனுக்குத் தன்மகளைக்கொடுக்க நேர்ந்ததால் அவனையுளப்படுத்தி நம்படை என்றதால் வழாநிலை. சீவகன் தன்மகளைவிரும்பி மணம்புரிதற்கு இவ்வாறு சிறப்பித்துத் தன்மகளைக் கூறினான் என்பதுகருத்து. மதர்வைதொழிற்பெயர் மதர்பகுதி, வைபுடைபெயர்ச்சிவிகுதி. நோக்கம் கருவிப்பொருளில்வந்த தொழிற்பெயர் நோக்குபகுதி, உகரக்கேடுசந்தி. அம்விகுதி. ஒப்பகாரணப்பொருள் மேல்நிற்றலால் இறந்தகாலவினையெச்சம்ஒ இடைச்சொற்பகுதி, பகரமெய்விரித்தல்விகாரம், பகரமெய்சந்தி, ஆவிகுதி. உழந்து இறந்தகாலவினையெச்சம் உழுபகுதி. முதல்சினைக் கொற்றுமை யுண்மையால் சினைவினையைமுதல் மேலேற்றிமுகமழிந்துநின்றேன் என்றார். (௬௮)

(69) பாடகஞ்சுமந்தசெம்பொற்சிலம்படிப்பரவையல்குல்
சூடகமணிந்தமுன்கைச்சுடர்மணிப்பூணினாளை
ஆடகச்செம்பொற்பாவையேழுடன்றருவனைய
வாடலில்வதுவைகூடி மணமகனாகவென்றான்.

இ - ள். ஐய—சீவகனே, பாடகம்செம்பொன்சிலம்பு சுமந்தஅடி—பாடகத்தையுஞ் செவந்த பொன்னாலமைந்த சிலம்பினையுமணிந்த காலையும், பரவைஅல்குல்—பரந்தஅல்குலையும்,சூடகம் அணிந்தமுன்கை—வளையலையணிந்த முன்கையையுமுடைய, சுடர்மணிப்பூணினாளை—விளங்குமித்திரமழுத்திய ஆபரணத்தையுடைய என்புத்திரியினை, ஆடகம் செம்பொன்பாவை ஏழ்உடன்தருவன்—ஆடகம்என்னுஞ் செவந்தபொன்னாற்செய்த பதுமையேழுடனேகொடுப்பேன், வாடல்இல்வதுவைகூடி மணமகன்ஆகஎன்றான்—குறைவற்றமணஞ்செய்து மணமகனாகக் கடவாயென்று நந்தகோன் கூறினான்.

ந - ரை. ஐயனே, அடிமுதலியவற்றையுடைய கோவிந்தையைப் பாவையேழுடனே தருவேன், குறைவற, மணம்பொருந்தி மணமகனாவாயாகவென்றானென்க.

முன்னர் இன்னகேள் என்றது இச்செய்யுளின்கருத்தையெனக்கொள்க. ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதம் என்னும்நால்வகைப்பொன்னுள் ஆடகம் ஒருவகையாதலால் ஆடகச்செம்பொன் என்றார். இது ஆடகமென்னுஞ் சிறப்புப்பெயர் பொன்என்னும் பொதுப்பெயரை விசேடித்துவந்த இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர். (௬௯)

வேறு.

(70) வெண்ணெய்போன்றூறினியன்மேம்பால்போற்றீஞ்சொல்லள்
உண்ணவுருக்கியவாநெய்போன்மேனியள்
வண்ணவநமுலைமாதர்மடநோக்கி
கண்ணுங்கருவிளம்போதிரண்டேகண்டாய்.

இ - ள். வநம் வண்ணம் முலைமாதர் மடநோக்கி—சந்தனக்கோலத்தின் வண்ணமமைந்த தனத்தையும் விருப்பஞ்செய்யு முதிராத பார்வையையுமுடைய என்புத்திரி, வெண்ணெய்போன்று ஊறு இனியள் — வெண்ணெயைப்போலக் குழைந்து இனியபரிசத்தையுடையவள், மேவும்பால்போல் தீஞ்சொல்லள் - விரும்பும்பாலையொத்த இனியசொல்லையுடையவள், உண்ண

உருக்கியஆம் நெய்போல் மேனியள்—உண்ணும்படி யுருக்கிய அமைந்த புத்துருக்கு நெய்போலநறுமணங்க மழுமேனியையுடையவள், கண்உம் (இவையன்றி) அவள் கண்களும், கருவிளம்போது இரண்டு ஏகண்டாய்—கருவிளமலரிரண்டே காணாய்.

க - ரை. முலையிணையுங் காதலிணையுமுடைய மடநோக்கி, வெண்ணெய் போற்குழைந்தினியள், சொல்லள், மேனியள், அவையன்றி யவள்கண்களும் பூவிரண்டேகாண்.

கண்டாய் தெளிவுபற்றிவந்த காலவழுவமைதி. ஊறு இனியள் விகுதி பிரித்து இனிய ஊறள் எனக்கொள்க. "கொடிச்சேவலான்" என்றாற்போல் மேவும் என்னும் பெயரொச்சத்தி னீற்றயலுயிர் மெய்யோடுகெட்டு மேம்பால் எனநின்றது. மேவல் விரும்பல். (எ0)

(71) குலநினையல்நம்பிகொழுங்கயற்கண்வள்ளி
நலனுகர்ந்தானன்றேநறுந்தார்முருகன்
நிலமகட்குக்கேள்வனுநீணிரைநப்பின்னை
இலவலர்வாயின்னமிர்தமெய்திறைனன்றே.

இ - ள். நம்பி—சீவகனே, நறுந்தார்முருகன்—நறுமணங்க பழுமாலையணிந்த முருகக்கடவுள், கொழுங்கயல் கண்வள்ளிநலன் நுகர்ந்தான் அன்றுஏ—கொழுவியகயல்போன்ற கண்களையுடைய வள்ளிநாச்சியாரின்பத்தை நுகர்ந்தானல்லவா, நிலமகட்கு கேள்வன்உம்—பூதேவிக்கு நாயகனாகிய திருமாலும், நீள்நிரைநப்பின்னை இலவு அலர்வாய்இன் அமிர்தம் எய்தினான் — மிக்கபசுக்கூட்டத்தையுடைய சிறந்தபின்னைப் பிராட்டியின் முள்ளிலவின் மலர்போன்றவாயிலுள்ள இனிய அமிர்தத்தை நுகர்ந்தானல்லவா, குலம்நினையல்—குலத்தில் உயர்வுதாழ்வு கருதாதொழிக

ந - ரை. யாமறிய முருகன் வள்ளி நலநுகர்ந்தானன்றே, திருமால்பின்னையைப் புணர்ந்தானன்றே, குலத்திற் றாழ்வுகருதாதொழிக.

நச்சென்னை, நப்பாலத்தன். நக்கீரன் என்பவற்றில்நகரம் சிறப்புப்பொருளையுணர்த்தும் ஓரிடைச்சொல்லாய்நிற்றல்போல நப்பின்னையென்பதில் நகரமும் சிறப்புப்பொருளையுணர்த்தும் ஓரிடைச்சொல்லாய் நின்றது. நமது பின்னையென்னும் பொருள்மேல்நின்றால்நம்பின்னை என்றதுநப்பின்னையென வலிக்கும் வழிவலித்தல் எனக்கொள்க. நினையல் எதிர்மறைவியங்கோள்வினைமுற்று நினைபகுதி, யகரமெய்சந்தி, அல்விகுதி. முன்னிலையொருமையெதிர்மறையேவலில்வரில் நினையாதேயெனப் பொருள்கொள்க. (எக)

(72) சேதாநறுநெய்யுந்தீம்பாற்சுமைத்தயிரும்
பாதாலமெல்லாநிறைத்திடுவன்பைந்தாரோய்
போதார்புனைகோதைசூட்டுன்னடித்திசை
யாதாவதெல்லாமறிந்தருளியென்றான்.

இ - ள். பைந்தாரோய்—பசியமாலையையுடையாய், ஆவது யாது (நீமணம்புரிந்தால்) இதனால் வருந்தீங்குயாது, எல்லாம் அறிந்தருளி—நான்சொல்லியதையெல்லாந் திருவுளம்பற்றி, உன் அடித்தியை போது ஆர் புனைகோ

தைசூட்டு—உன்னடிச்சியை மலரால்நிறைய அலங்கரித்த மாலைசூட்டாய் (சூட்டுமிடத்துக் கல்யாணஞ்செய்தற்குச் சிறிதும்நாணேனல்லேன்) சேதாநறுநெய் உம் தீம்பால் சுமைதயிர்உம்—பசுவினது மணங்கமழுநெய்யையும் இனியபாலையும் ஆடையையுடைய தயிரையும், பாதாலம் எல்லாம்நிறைத்திடுவன் என்ருன்—பாதாளங்களையெல்லாம் நிறைப்பேனென்று கூறினான்.

ந - ரை. யாது ஆவது, யான்கூறினவெல்லாந் திருவுளம்பற்றி நின்னடிச்சியைக் கோதைசூட்டுவாயாக, சூட்டுமிடத்துக் கல்யாணஞ் செய்தற்குச் சிறியேனல்லேன், நெய்யும் பாலுந் தயிரும் பாதாளமெல்லா நிறைப்பேனென்ருனென்க.

மணமகளைக் கடவாயென்ற விடத்துச் சீவகனுக்கு முகமலர்ச்சி காணுமையாலிது கூறியுடம்படுத்தினுனென்பது கருத்து.

சேதாவென்றசெய்யுள் குலநிலையல் என்னுஞ் செய்யுளுக்கு முதலிலுள்ளது, அதனைப்பின்னேவைத்தது பொருளியைபுநோக்கி. சுமை ஆடை. அடித்தி அடிமைபகுதி, தகரமெய் பெயரிடைநிலை, தகரமெய்சந்தி, இவிகுதி. அடிச்சியென்றவிடத்துச் சகரம்பெயரிடை நிலையாகக்கொள்க. சேதா செந்நிறமையைந்தபசு,வருமொழி உயிரானவழிசெம்மையென்னும்பகுதி, ஈறுகெட்டு முதனீண்டுமகரம் தகரமெய்யாகத்திரிந்து நின்றது. நிறைத்திடுவன் எதிர்காலத்தில்வந்த பிறவினைத்தன்மை யொருமை வினைமுற்று நிறைத்து பிறவினைப்பகுதி, உகரக்கேடுசந்தி, இடுபகுதிப் பொருள்விகுதி, அனைத்தும் ஒருபகுதி, வகரமெய் எதிர்காலவிடைநிலை, அன்புதியனபுகுதலால்வந்த தன்மையொருமைவிகுதி. நின் உன்என வந்தது மரூஉ. (எஉ)

வேறு.

(73) கன்னியர்குலத்தின்மிக்கார்கதிர்முலைக்கன்னிமார்ப
முன்னினர்முயங்கினல்லால்முறிமிடைபடலைமாலைப்
பொன்னிழைமகளிரொவ்வாதவரைமுன்புணர்தல்செல்லார்
இன்னதான்முறைமைமாந்தர்க்கெனமனத்தெண்ணினுனே.

இ - ள். முறிமிடை படலைமாலை பொன்இழைமகளிர் (நம்குலத்தோர்) தளிரால்நெருங்கிய மாலையினையும் மலராற்றொடுத்த மாலையினையும் பொன்ருற்செய்த ஆபரணத்தையுமுடைய பெண்களை மணஞ்செய்யுமிடத்து, கன்னியர் குலத்துஇன் மிக்கார்கதிர் முலைகன்னிமார்பம் — கன்னிப்பெண்களுள் மேம்பட்ட குலத்திற்ருேன்றிய பெண்களது முத்துவடத்தால் விளங்குந்தனத்தையுடைய அழியாதமார்பை, முன்னினர்முயங்கின் அல்லாமல்—எதிர்ப்பட்டுக்கலந்தாலல்லாமல், ஒவ்வாதவரை முன்புணர்தல் செல்லார்—தங்குலத்திற்கு ஒவ்வாதவரைமுற்படமணஞ்செய்யமாட்டார்கள், மாந்தர்க்குமுறைமை இன்னதுஎன (தேவர்க்கொழிய) மக்கட்பிறப்பினர்க்குமுறைமையித்தன்மையதாயிருந்ததுஎன்று, மனத்துஎண்ணினுன்-தன்மனத்தினிடத்தேபதுமுகனை நினைத்தான்.

ந - ரை. நங்குலத்தோர்வகைமாலையையும் இழையினையுமுடையமகளிரைவரையுமிடத்து, கன்னியரிற்குலத்தின் மிக்காருடைய அழியாதமார்பத்

தையெதிர்ப்பட்டாராய் முயங்கினல்லது, தங்குலத்திற்கு ஒவ்வாதாரை முற்ப டவமையார், அதுவும் அன்றித்தேவரையொழிய மக்கட்கு முறைமை இத் தன்மையாயிருந்ததெனக் கருதிப்பின்பு, தன்மனத்தினிடத்தேபதுமுகனுக் குக் கொடுப்பதாக எண்ணினான் என்க.

தேவர்க்கு முறையில்லையென்பார் தேவரையொழிய என்றார். கதிர் என் றகுறிப்பால் முத்துவடம் வருவிக்கப்பட்டது. முன்னினர் முற்றெச்சம். அல்லாமல் மகரம் இடைக்குறை. மாந்தர் பன்மைச்சொல், ஒருமையில் வாராது. (எ௩)

(74) கோட்டிளங்களிறுபோல்வானந்தகோன்முகத்தைநோக்கி
மோட்டிளமுலையினாணின்மடமகளெனக்குமாமான்
சூட்டொடுகண்ணியன்றேயென்செய்வானிவைகள்சொல்லி
நீட்டித்தல்குணமோவென்றுநெஞ்சகங்குளிர்ப்பச்சொன்னான்.

இ - ள். கோடு இளங்களிறுபோல்வான் — கொம்பினையுடைய இள மைதங்கிய யானையையொத்த சீவகன், நந்தகோன் முகத்தைநோக்கி—நந்த கோன் முகத்தைப்பார்த்து, மோடு இளமுலையினாள் நின்மடமகள் — உயர்ந்த முதிராத தனத்தையுடைய உனது புத்திரி, மாமான் எனக்கு சூட்டொடு கண் ணி அன்றவ—மாமான் எனக்குச்சூட்டினோடு கண்ணியல்லவா, இவைகள் சொல்லிநீட்டித்தல் செய்வான்என்—இவைகளைப்பேசிக் காலத்தைப்போக்கு வானேன், குணம்ஓ என்று—இவை குணமாவென்று, நெஞ்சு அகம் குளிர்ப் பசொன்னான்—நெஞ்சிடங்குளிரும்படி சொன்னான்.

ந - ரை. களிறுபோல்வான், நந்தகோன் முகனைப்பார்த்து, முலையினா ளாகிய நின்மகள் மாமான் எனக்குச்சூட்டொடு கண்ணியல்லவோ, இவைகள் சொல்லி நீட்டித்தல் செய்வானேன், அது குணமோவென்று நெஞ்சிடங்கு ளிரும்படி கூறினான் என்க.

பதுமுகனுக்குக் கொடுப்பதாகத் தன்மனத்தேகருதுதலால் நின்மடமகள் மாமான் எனவும், இடுந்தன்மையன்றிச்சூட்டுந் தன்மையோடுகூடிய கண்ணி யல்லவோவென்றும், நெற்றிச்சூட்டுங் கண்ணியுமல்லவோவென்று மிரண்டு பொருள்படச் சூட்டொடு கண்ணியன்றேயென்றுங் கூறினான். இவ்வாறுகூ றவே "மார்பிற்கு மாலையிடுகவென்றுந் தலைக்குக் கண்ணிசூட்டுக வெனவுங் கூறினான். இவ்வாறுகூறவே "மார்பிற்கு மாலையிடுகவென்றுந் தலைக்குக் கண்ணிசூட்டுகவென்றும்" பெருமபான்மையும் வழக்குநடத்தலின். தலைமேல் சூட்டப்படுங் கண்ணியல்லவோவென்று சொன்னானாக நந்தகோன் நினைத் தான் எனவும், நெற்றிச்சூட்டுப் புருடர்க்கு ஆகாததன்மையும் கண்ணி புரு டர்க்கு ஆகுந்தன்மைபோலத் தன்குலத்திற்கு அவளைமணஞ்செய்தல் சிறிதும் பொருந்தாமையால் சூட்டின்தன்மையும், பதுமுகன் குலத்திற்குச்சிறிதுபொ ருந்துதலால் கண்ணியின் தன்மையுமுடையளென்று சீவகன் நினைத்தான் எனவும் பொருள்படுதல்காண்க. பதுமுகன் வணிகர்குலமாதலால் ஆயரினும் வாணிகஞ்செய்வரிருத்தலின் பதுமுகன்குலத்திற்குச் சிறிதுபொருந்தும் என் றது. மாமான் எனக்குச்சூட்டொடு கண்ணியன்றே யென்றதற்குத் தனக்கு

ஆகாமையால் எனக்குப்புலாலும், பதுமுகற்கு ஆதலால் பூமாலையுமல்லவா எனப்பொருள்கொள்ளுதலும் ஒன்று. எனக்கும் ஆமான்சூட்டு இனியெனக்கும் காட்டுமோட்டின்சூட்டு எனப்பொருள்கொள்ளுதலும் ஒன்று. நெஞ்சகம் நெஞ்சினது இடமெனவிரிதலால் ஆறும்வேற்றுமைத்தொகைநிலைத்தொடர். உபமேயத்தையுணர்த்துஞ்சொற்களாற்குறித்தறிதற்குத்தகுதியாகச்சூட்டோடு கண்ணியன்றே என்றது குறிநிலையணி. (எச)

(75) தேன்சொரிமுல்லைக்கண்ணிச்செந்துவராடையாயர்
கோன்பெரிதுவந்துபோகிக்குடைதயிர்குழும்பப்புக்கு
மான்கறிகற்றகூழைமௌவல்சூழ்மயிலைப்பந்தர்க்
கான்சொரிமுல்லைத்தாரான்கடிவினைமுடிகவென்றான்.

இ - ள். தேன்சொரிமுல்லை கண்ணிசெந்துவர் ஆடை ஆயர்கோன்— தேனைச்சிந்து முல்லைமலர் மாலையையும் செவந்தது வருட்டிய ஆடையையுமுடைய இடையர்க்கரசனாகிய, கான்சொரிமுல்லைதாரான்—வாசம்வீசு முல்லைமாலையையணிந்த நந்தகோன், பெரிது உவந்துபோகி — மிகவு மகிழ்ந்து சென்று, மான்கறிகற்ற கூழைமௌவல்சூழ் மயிலைபந்தர்—மான்கள் கடித்த லைக்கற்ற சிறுபுதலாகிய மல்லிகைசூழ்ந்த இருவாட்சிப்பந்தலில், குடைதயிர் குழும்பபுக்கு—கடையுந்தயிர்கலங்கவொலிக்கப்புகுந்து, கடிவினைமுடிக என்றான்—கல்யாணமுடிவதாகவென்று கூறினான்.

க - ரை. முல்லைத்தாரானாகிய ஆயர்கோன் உவந்துபோய்ப்புக்குப்பந்தரிலே கடிவினைமுடிவதாக வென்றானென்க.

தயிர்முழுங்கப்போதல் நன்னிமித்தம் ஆதலால் குடைதயிர் குழும்பப்புக்கு என்றார். குடைதயிர் குழும்பப்புக்கு என்னும் பாடத்துக்குத் தயிர்கடைதலால் ஓசைநெருங்க என்பதுபொருள். தயிர் உடையும்போது ஓசையெழுதலால் தயிர்குழும்ப என்றார். குடைதல் கடைதல். பந்தல் பந்தர் இறுதிநிலைப்போலி. குழும்ப நிகழ்காலவினையெச்சம் குழும்புபகுதி. (எரு)

(76) கனிவளர்கிளவிகாமர்சிறுநுதல்புருவங்காமன்
குனிவளர்சிலையைக்கொன்றகுவளைக்கண்கயலைக்கொன்ற
இனியுளரல்லராயரொனச்சிலம்பரற்றத்தந்து
பனிவளர்கோதைமாதர்பாவையைப்பரவிவைத்தார்.

இ - ள். கனிவளர்கிளவி — சுவைபழுத்துவளருஞ் சொல்லையுடைய கோவிந்தையின், காமர்சிறுநுதல் புருவம் — விருப்பஞ்செய்யுஞ் சிறியநெற்றியும் புருவமும், காமன்குனிவு வளர்சிலையைகொன்ற— மன்மதனது வளைந்த வில்லைக்கெடுத்தன, குவளைகண் கயலைகொன்ற—குவளைமலர்போன்ற கண்கள் கயலைக்கெடுத்தன, ஆயர் இனி உளர் அல்லர் என்னசிலம்பு அரற்ற — ஆயர்கள் இவற்றைக்கண்டு இனியுயிரோடிருப்பாரல்லரென்று சிலம்புகளொலிக்க, பாவையைபனிவளர் கோதைமாதர்தந்து—பதுமைபோன்ற அக்கோவிந்தையைக் குளிர்ந்த கூந்தலையுடைய தோழிப்பெண்கள் கொண்டுவந்து, பரவிவைத்தார்—தெய்வத்தைவணங்கி மஞ்சனச்சாலையில்வைத்தனர்.

க - ரை. மாதர், கனிந்தமைதோற்றுகின்ற கிளவியையுடையாளுடை

யழுதலும் புருவமுஞ் சிலையைக் கெடுத்தன, கண்கயலைக் கெடுத்தன, இப்ப ருவங்கண்டு ஆயருயிர் கொண்டிருப்பாரல்லரென்று சிலம்பொலியாகிற்கப் பாவையைத்தந்து பரவிவைத்தார் என்க.

காமமருவு காமர்தொகுத்தல். குனிவு குனிதொகுத்தல் விகாரம். அரற் றநிகழ்காலவினையெச்சம் அரற்றுபகுதி. (எசு)

(77) நாழியுளிழுதுநாகான்கன்றுதின்றொழிந்தபுற்றோய்த்
தாழிதோறுநுந்தோழும்போன்றுடன்மூக்கவென்று
தாழிருங்குழலினளைநெய்தலைப்பெய்துவாழ்த்தி
மூழைநீர்சொரிந்துமொய்கொளாய்ச்சியராட்டினாரே.

இ - ள். மொய்கொள் ஆய்ச்சியர்—நெருங்கிய இடைப்பெண்கள், தாழ்இருங்குழலினளை—தாழ்ந்துநீண்டகூந்தலையுடைய கோவிந்தையை, ஆஉம் தோழுஉம்போன்று-பசுவுந்தொழுவும்போல, ஊழிதோறு உடன்மூக்க என்று வாழ்த்தி—ஊழிதோறு முன்கணவனு நீயுஞ்சேர மூப்படையக் கடவீரென்று ஆசிவசனங்கூறி, நாழிஉள் இழுதுநாகு ஆன்கன்றுதின்று ஒழிந்தபுல்தோய்த்து—நாழியிலிருந்த நெய்விழுதை நாகாகிய பசுவின்கன்றுதின்றுகழித்தபுல்லி னல்தோய்த்து, நெய்தலைபெய்து—அந்நெய்யைத் தலையிலேவார்த்து, மூழை நீர்சொரிந்து ஆட்டினார் — முகவையால் நீர்முகந்து பெய்துமங்கள நானஞ் செய்வித்தார்.

க - ரை. ஆய்ச்சியர், குழலினளைப் பசுவுந்தொழுவும்போலே யூழிதோறும் நீயும் உன்கணவனுஞ்சேர மூப்பீராகவென்று வாழ்த்தி, நாழியுளிருந்த நெய்விழுதை நாகாகிய பசுவின்கன்றுதின் றொழிந்தபுல்லாலே தோய்த்து, அந்நெய்யைத் தலையிலேவார்த்து, மூழையாலே நீரைச்சொரிந்தாட்டினார் என்க.

மூழைமுகவை. இதுநெய்யளக்கும் ஒருவகைக்கருவி. இதனால் மங் களநானஞ்செய்வித்தார் என்பதுகூறப்பட்டது. மங்களநானஞ்செய்விக்கும் போது இவ்வாறுசெய்வித்தல் அவர்கள்மரபுக்குரிய இலக்கணமாதலால் இது சாதித்தன்மையணி. நெய் என்பதன்முதலில் அகரச்சுட்டுத் தொகுத்தல். மூக்கவியங்கோள் வினைமுற்று மூபகுதி, ககரமெய்சந்தி, கவிகுதி. நாகுஆன் கன்று நாகென்னும் பொதுப்பெயர் ஆன்கன்றென்னுஞ் சிறப்புப்பெயரை வி சேடித்துவந்த இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர். நாகு என் பது, ஓரறிவுயிர்முதல் ஐயறிவுயிர்க்குஞ்செல்லும் இளமைப்பெயர். (எஎ)

(78) ஏறங்கோண்முழங்கவாயரெடுத்துக்கொண்டேகிமூதூர்ச்
சாறெங்குமயரப்புக்குநந்தகோன்றன்கையேந்தி
வீறுயர்கலசநன்னீர்சொரிந்தனன்வீரனேற்றான்
பாறுகொள்பரிதிவைவேற்பதுமுககுமரற்கென்றே.

இ - ள். ஏறங்கோள்முழங்க—முல்லைநிலப்பறைமுழங்க, ஆயர் எடுத்துக்கொண்டு—ஆயர்களவனைச் சிவிகையி லெடுத்துக்கொண்டு, மூதூர் எங்கும் சாறு அயரஎகி—தொன்றுதொட்டுள்ள ஊரெங்கும் விழவுசெய்ய ஊர்க் கோலஞ்செய்து, புக்கு (நந்தக்கடன்வீட்டில்) புகுதலால், நந்தகோன் வீறு

உயர்கலசம் தன்கையேந்தி—நந்தகோனுனவன் நிகரில்லாத அழகில்மிக்க கலசத்தைத் தன்கையிலேந்தி, நல்நீர்சொரிந்தனன்—தாரைவார்த்தனன், பாறுகொள் பரிதிவைவேல்பதுமுக குமரற்குஎன்று வீரன்ஏற்றான் — பருந்துகள் சுழலும் சூரியனைப்போலும் ஒளிவாய்ந்தகூரியவேலையேந்திய பதுமுகனுக்கு நின்மகள் உரியவளென்று சீவகன்சொல்லியேற்றனன்.

ந - ரை. ஆயர் ஏறுகோட்பறை முழங்காநிற்க, அவளையெடுத்துக் கொண்டு மூதாரொங்குஞ் சாற்யரவேகிப் பின்பு கந்துகன் மனையிலே புகுதலின், நந்தகோன் தன்கையிலே கலசத்தையேந்தி நீரைச்சொரிந்தான், வீரனும்பதுமுகற்கென்றுகூறி யேற்றானென்க.

வீறுவேறொன்றிற்கு இல்லாதஅழகு. இதனால் கல்யாணஞ்செய்தது கூறினார். புக்கு என்னும் இறந்தகாலவினையெச்சம் காரணகாரியப்பொருள் மேல்நின்றது. பகைவருள்செறிதலால் பாறுகொள் எனவும், சூரியன்புறவிருளையோட்டுதல் போற்பகையிருளோட்டுதலால்பரிதிவேல் எனவுங்கூறினார்.

(79) நெய்விலைப்பசும்பொற்றோடுநிழன்மணிக்குழையுநீவி
மைவிரிகுழலினாளைமங்கலக்கடிப்புச்சேர்த்திப்
பெய்தனர்பிணையன்மாலையோரிலைச்சாந்துபூசிச்
செய்தனர்சிறுபுன்கோலந்தொறுத்தியர்திகைத்துநின்றார்.

இ - ள். மைவிரிகுழலினாளை—மேகம்போலக் கருநிறம்பரந்த கூந்தலையுடைய கோவிந்தையை, நெய்விலை பசும்பொன்தோடும் — நெய்விலையால் வந்த பசியபொன்னாலாகிய தோட்டையும், நிழல்மணி குழைஉம்நீவி—ஒளியமைந்த இரத்தினங்களிழைத்த குண்டலத்தையுநீக்கி, மங்கலம்கடிப்புசேர்த்தி —மங்கலத்திற்குரிய குதம்பையையிட்டு, பிணையல் மாலைபெய்தனர் — மாலைசூட்டி, ஓர் இலைசாந்துபூசி சிறுபுன்கோலம்செய்தனர் — ஓரிலையிற்கொண்டு வந்த சந்தனத்தையும்பூசிச் சிறியமங்கலக் கோலஞ்செய்தார்கள், தொறுத்தியர் திகைத்துநின்றார் (அதுகண்டு) ஆய்ச்சியர் மயங்கிநின்றார்கள்.

ந - ரை. கருமைவிரிந்த குழலினாளை, நெய்விலையாலுண்டான பொற்றோட்டையுங் குழையையுநீக்கி மங்கலமான கடிப்பிணையையிட்டு மாலையையிட்டனராய், ஓரிலையிலிடுவித்துவந்தசந்தனத்தையும்பூசிக்கோலஞ்செய்தார், அதுகண்டு ஆய்ச்சியர் திகைத்துநின்றார் என்க.

"சந்திரபாணித்தகைபெறு கடிப்பிணை" என்றார்பிறரும். பெய்தனர் முற்றெச்சம். நீவி இறந்தகாலவினையெச்சம் நீபகுதி, பகுதியல்லாதனவெல்லாம் இடைச் சொல்லாதலால் "இடையுரிவடசொலின்" என்ற சூ—ஆல் வந்த வகரமெய்சந்தி, இஎச்சவிகுதி. இதனடியாக நீத்தல், நீத்த, நீத்து, நீத்தான் என வினைவிகற்பங்கள் வரும். (எ௯)

(80) தீம்பாற்கடலைத்திரைபொங்கக்கடைந்துதேவர்
தாம்பாற்படுத்தவமிர்தோதடமாலைவேய்த்தோள்
ஆம்பாற்குடவர்மகளோவென்றரிவைநைய
வோம்பாவொழுக்கத்துணர்வொன்றிலனாயினனே.

இ - ள். தேவர் தீம்பால்கடலை திரைபொங்க கடைந்து—(பதுமுகன்) தேவர்கள் இனியபாற்கடலை அலையெழக்கடைந்து, தம்பால்படுத்த அமிர்தோ—தம்மிடத்தகப்படுத்திய அமிர்தமோ, அம்பால் குடவர்மகள்ஓ என்று—அழகிய பாலையுமுடைய ஆயர்மகளோவென்று நயப்புரைகூறி, தடமாலை வேய்தோள் அரிவை (இரண்டாயிரம் பசுக்களோடும் பொற்பாவையேபோலும்வந்த) பெருமைவாய்ந்தமலர்மாலையினையு மூங்கிலையொத்ததோளையுமுடையகோவிந்தை, ஓம்பாத ஒழுக்கத்துநைய—நீக்கவொண்ணாதபுணர்ச்சியொழுக்கத்திலவசமாக, உணர்வுஒன்றுஇலன் ஆயினன்—தானும்அறிவுமயங்கினன்.

ந - ரை. இவன் தேவர்கடலைக்கடந்து தம்மிடத்தே யகப்படுத்த அமுதமோ, அன்றி அழகியபாலையுடைய இடையர்மகளோ, என்று நயப்புரைத்துப்பின்னும் பரிகரிக்கவொண்ணாத புணர்ச்சியொழுக்கத்திலே மாலையிணையுந் தோளிணையுமுடைய அரிவை அவசமாகத் தானும் அறிவுமயங்கினான் என்க.

கடைகிறகாலத்தில் அலையெழுதலால் திரைபொங்க எனவும், தன்மனத்திற் கழிபெருங்காதலுடையவனாய்த் தன்னயப்புரைத்தலால் நயப்புரையென்னுந் துறைதோன்றத் தாம்பாற்படுத்த வமிர்தோவெனவும், ஆம்பாற்குடவர்மகளோ வெனவுங்கூறினார். திரைவினைமுதற்பொருளில்வந்த இகரவிகுதியொடுபுணர்ந்து குன்றிய தொழிற்பெயர். தம் தாம், அம் ஆம் நீட்டும் வழி நீட்டல். அமிர்து மரணநீக்குவது. வேய்த்தோள் வடிவத்திற்கு அன்றிநிறத்திற்கும் உவமையாய் நிற்றலால் சமுச்சயவணி. "நலத்தகையவட்கு நாகாவாயிரத்திரட்டிநன்பொன் - இலக்கணப்பாவையேழுங் கொடுத்தனன்போக" எனமுன்னர்கூறுதலால் இரண்டாயிரம் பசுக்களோடும்பொற்பாவையேழோடும்வந்த எனவருவித்தாம். (அ0)

தொடர்ச்சி.

"சில்லரிச்சிலம்பின்" "ஆகமுமிடையும்" "நலத்தகையவட்கு" "கள்வாய்விரிந்த" என்னு முதற்குறிப்புகளையுடைய செய்யுள்கள் பரீட்சைக்கு விலக்குகளாதலால் விலக்கப்பட்டன.

## கோவிந்தையார் வரலாற்றுச்சுருக்கம்.

சிலநாள்கழிந்து சீவகனுக்குப்பதினைந்தாண்டுசென்றபின், ஒருநாள் இளவேனிற்காலத்தில்அரசன்பசுக்கள் இங்குள்ளமலையில்மேயும், அப்போதுநாம் கவர்வோமென்று அம்மலையில் வேடர்கள்வந்து நெருங்கி யவ்வரசன் பசுக்களைக்கவர்ந்துசெல்ல, அப்பசுக்களைக் காக்கும் ஆயர்கள் அவ்வேடர்களோ டெதிர்த்துப்போர்செய்யும் வலிமைதமக்கு இல்லாமையால் மனம்வருந்தித் துணுக்குற்றுக் கட்டியங்காரனிடத்து விரைந்துவந்து முறையிட்டார்கள், அப்போதுஅக்கட்டியங்காரன் சினந்து தன்புதல்வர் நூற்றுவரையும் தன்மைத்துனன்மதனனையும் நோக்கிநீங்கள் சேனையுடன் சென்று அவ்வேடர்களை வென்று பசுக்களைமீட்டுவாருங்களெனக் கட்டளையிட, அவர்கள்சேனையோடு சென்று போர்செய்து அவ்வேடரால் முறியடிக்கப்பட்டுப் புறங்காட்டிவந்தனர்கள். அந்த ஆயர்கள் மீளவந்து நடந்தசெய்தியை அக்கட்டியங்காரனுக்குக்கூற அதுகேட்டு அவன்வாளா இருந்தனன்; அதனை யவ்வாயர்தலைவன் நந்தகோன் தெரிந்து வருத்தங்கூர்ந்து இப்பசுமந்தையை மீட்டுவருவோர் யாராயினுமாக, அவர்க்கே என்கன்னிகையைக் கொடுப்பேன் என்று எங்கும்பறைசாற்றினன், அதுகேட்டுப் பலவீரர்களும் அவ்வேடருக்கு அஞ்சிவாளாவிருந்தனர்கள், அதனையறிந்த அச்சீவகன் வஞ்சினங்கூறி யுத்தசன்னத்தனாய்த்தன்தோழருடன்சென்று அவ்வேடர்கள் ஐம்பத்தாறாயிரவரும் தனக்கு ஒருவகையாலும் பகைவரல்லாமையாலவர்களு யிரைச்சூறையாடாது தன்கைவில்லாலச்சுறுத்தி அந்நிரையைமீட்டுவந்து அந்நந்தகோன் வேண்டுகோளின்படி, அவன் மகளை மணம்புரிதல் தன்மரபிற்குப்பொருந்தாதாதலால்தன்தோழனாகிய பதுமுகனுக்கு வாணிபத்தால் ஒருவாறியைதலால் மணஞ்செய்வித்தனன்.

பதுமுகன், சீவகன் தோழர்கள் சீதத்தன், புத்திசேனன், தேவதத்தன், பதுமுகன் என்னும் நால்வருளொருவன்.

என அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. மகிழ்தூங்க அஃறிணை உயர்திணைமுடிபேற்று வருதலால் திணைவழுவமைதி. எழில் தோற்றம் எழுபகுதி, உகரக்கேடுசந்தி, இல்புடைபெயர்ச்சி விகுதி. (ககரு)

ஓடுமுகிலகீறியொளிர்திங்கள்சிகைவைத்தே
மாடமதுவார்சடையவள்ளலையுமொக்கும்
நாடிமுகநான்கதனினான்முகனையொக்கும்
நேடிநிமிர்தன்மையினினேமியையுமொக்கும்.

இ - ள். மாடமதது—அந்தமாடமாகியஅது, ஓடும்முகில்கீறி ஒளிர்திங்கள்—ஓடாநின்ற மேகத்தைக்கிழித்துச சென்றுவிளங்குஞ் சந்திரனை, சிகைவைத்து—தலையில்வைத்தலால், வாரசடையவள்ளலையும் ஒக்கும்—நீண்டசடையினையுடை சிவபிரானையொத்துததோன்றும், முகம்நான்கு அதனின் நாடி—நான்குமுகங்களால் நாடுதலால், நான்முகனை ஒக்கும்—நான்குமுகங்களையுடைய பிரமனையுமொக்கும், நேடிநிமிர்தன்மையினில்—மேலெல்லையைத் தேடியோங்கிய தன்மையால், நேமியைஉம்ஒக்கும்—திருமாலையுமொக்கும்.

(ந - ரை) அந்தமாடமாகிய அது முகிலைக்கிழித்துப் பிறையைத்தலையிலே வைத்தலா அரனையொக்கும், முகநான்காகிய அதனானேயெங்கு நாடுதலா லேயயனையொக்கும, மேலெல்லையைத்தேடி நிமிர்ந்ததன்மையால் அரனையுமொக்கும்.

நாடியென்பதற்கு நாசியென்றுபொருள் கூறுவாறுமுண்டு இது ஏது உவமையணி. (சoரு)

கண்டவர்கள்காமுறலிற்காமனையுமொக்கும்
கொண்டுலகமேந்தலினக்கொற்றவனையொக்கும்
வண்டெரிபலாரமுலைமாதர்மகிழமுதம்
உண்டவர்களெவ்வகையரவ்வகையதொன்றே

இ - ள். கண்டவர்கள் காமுறலில்—பார்த்தோர்விரும்புதலால், காமனையும் ஒக்கும்— மன்மதனையுமொத்துத தோன்றும், உலகம்கொண்டு ஏத்தலின்—உலகிலுள்ளோர் நன்குமதித்துத்துதித்தலால், அ கொற்றவனைஒக்கும்— அந்தச் சக்கரனையுமொத்துத் தோன்றுநிற்கும், (இவ்வாறிருத்தலால்) ஆரம்வண் தெரியல்முலை மாதர் மகிழ்அமுதம்—வளமைவாய்ந்த முத்துமாலையையணிந்த தனத்தையுடைய பெண்களாகிய மகிழ்ச்சிசெய்யு மமுதினை, உண்டவர்கள்எவ்வகையர் அவ்வகையது ஒன்று—உண்டோரொத்தன்மையர் அத்தன்மையையுடையது

(ந - ரை.) பெண்களின் பநுகர்ந்தோர் அவரினின்றும் பிரிதலரிதாதல் போல இம்மாடத்தைக்கண்டோர் அதினின்றும் பிரிதலரிதாதலால் எவ்வகையரவ்வகைய தொன்றேஎன்றார். ஏத்தலினங் கொற்றவனையொக்கும் எனவும்பாடம்உண்டு. (சoசா)

## வேறு.

முகிற்றலைமதியமன்னமுழுமணிமாடத்திட்ட
அகிற்புகைதவழ்ந்துவானத்தருவிசுப்பறுத்துநீண்டு

பகற்கதிர்பரப்பிற்ருகிப்பஞ்சவர்விமானமுட்டிப்
புகற்கருமமராகற்பம்புக்கயாவுயிர்த்ததன்றே

இ - ள். மதியம்அன்னமுழுமணி—சந்திரனையொத்த பருமுத்துக்களபதித்த, முகில்தலைமாடத்து இட்ட அகில் புகைதவழ்ந்து— மேகங்களைத்தலையிலிட்ட மாடங்களிலிட்ட அகிலின்புகைதவழ்ந்து, வானத்துஅருவிசும்பு அறுத்துநீண்டு—ஆகாயத்திலுள்ள அரியமேகமண்டிலத்தையூடுருவிஅப்புறஞ்சென்று, பகல்கதிர் பரப்பிறறுஆகி—தினஞ்செய்கின்ற சூரியனிடத்தே பரத்தலையுடைத்தாகி, பஞ்சவர் விமானம்முட்டி— ஜ்யோதிஷ்கரது விமானத்தைமுட்டி, புகற்குஅரும் அமராகற்பம்புக்கு அயர்வுயிர்ததது—செல்லுதற்கரிய தேவர்களது இருப்பிடத்திலும்புகுந்து இளைப்பாறியது.

(ந - ரை.) மதிபோன்ற நிறையமணிகளையுடைய முகிற்றலைமாடத்திட்ட புகைதவழ்ந்து சென்று வானத்து மேகத்தையூடுருவி நீண்டு, பகலைச்செய்கின்ற கதிரிடத்தே பரத்தலையுடைத்தாய் ஜ்யோதிஷ்கரது விமானத்தைமுட்டி, அமரர்கற்பத்தையும்புக்கு அயாவுயிர்ததுவெனக

கற்பம் இருத்தற்குக் கற்பித்தஇடம. பஞ்சவா சந்திரன், சூரியன், கிரகம், நக்ஷத்திரம, தாணமீன் இவர்க்கு ஜ்யோதிஷ்கா எனவும்பெயா (கoஅ)

வேறு

அரசனதருளினொடகன்மனையவனெயதி
உரைசெலல்வகையினொடுலகமுமறிவுற
முரசதிரிமிழிசைமுதுநகரறைகென
விரைசெலவிளையனைவியவரின்விடவே.

இ - ள் அரசனது அருளினொடு— (மண்டபஞ்சமைத்து) அரசனுககு அறிவித்து அவனருளோடு, அகன்மனை அவன்எய்தி—இடம்பரந்த தன்வீட்டினையடைந்து, உலகமும்அறிவுற—உலகமுற்றுமறியும்படி, முதுநகர் உரைசெலல் வகையினொடு—தொன்றுதொட்டுள்ள இந்நகரில் உரைநடத்தலின் கூறுபாட்டோடு, முரசு அதிா இமிழ்இசை அறைகஎன்ன—முரசிலதிரந்தொலிக்குமொலியால் அறைவாாகளாக வெனககூறி, விரைசெலல இளையனை—விரைந்துசெல்லுந் தன்னிளைஞனை, வியவரின்விட — ஏவலாளரிடததனுப்ப.

உரைநடத்தலின் கூறுபாடு ஆவதுமுன்னே தெரிவிககுமுறை. முரசதிரிமிழிசையாவது முரசின்மார்சசனையி லடிக்கும்போது நடுங்குதலால் அப்போததிரந்தொலிக்குமோசை. வியம்ஏவல வியங்கோள் எனவருதல்காண்க. செலல்என்னுந் தொழிறபெயா பெயரொச்சததில்வந்தது இதுமுதல்மண்ணகமடந்தையாகம என்பதுகாறு மொருதொடா. (கoக)

விடுகணைவிசையொடுவெருவருதகையவர்
படுபணையவருறைபதியதுகுறுகி
நெடுமதியகடுறநிமிறவழ்கொடியுயா
கடிநகரிடிமுரசறைமினமெனவே

இ - ள். பொருநகையவர் — அஞ்சத்தக்க ஏவல்செய்வோர், விடுக ணைவிசையொடு — எய்த அம்பின்விசையோடு, படுபணையவா உறைபதிய துகு றுகி — ஒலியெழும்முரசறைவோர் வசிக்கும் ஊரையடைந்து, நெடுமதிஅகடு உற — தூரத்திலுள்ள சந்திரனதுவயிறறிற பொருந்த, நிழல்தவழ் கொடிஉயர் கடிநகர் — ஒளிவிளங்குங் கொடியுயர்ந்த காவல்பூண்ட நகரில், இடிமுரசுஅ றைமின்என்ன — ஒலிக்குமுரசறையுங்களென்று ஏவல்செய்வோர்கூற.

அது பகுதிபொருள்விகுதி அமசாரியையிடைச்சொல். (௧௧௦)

மங்கலவணியினா மலர்கதிர்மதியன
புங்கவனறநெறிபொலிவொடுமலிகென
அங்கதிர்மணிநகையலமருமுலைவளர்
கொங்கணிகுழலவள்கோடணையறைவாம்.

இ - ள். அமகதிர் மணிநகை அலமரும்முலை — அழகியஒளிவாய்ந்த முத்துவடம்சுழன்றாடிக்குந்தனத்தையும், வளர்கொங்கு அணிகுழலவள் கோடணை அறைவாய் — வளர்ந்தபூந்தாதுநிறைந்த கூந்தலையுமுடைய தத்தையின துயாழுவாசிக்கின்றமையையறையாமென்றுகூறி, மங்கல அணியினா (முரசறைவோர்) வெள்ளணியையுடையவராகி, மலர்கதிர் மதி அன்ன — பரந்தகிரணத்தையுடைய சந்திரனையொத்த, புங்கவன் அறநெறிபொலிவு ஒடும்மலிகஎன்ன — அருகக்கடவுளது தருமமார்க்கம் விளக்கியோடு மிகுகவெனவும்.

அறநெறி எவ்வுயிர்க்கும் தண்மைசெய்தலின் மதியனஎன்றார். இதுப யன்பற்றிவந்த வுவமையணி மலிக வியங்கோளீறுதொகுத்தல். (௧௧௧)

வேறு

வானறருவளந்தந்தாகிவையகம்பிணியிற்றீர்க
தேன்றருகிளவியாருங்கற்பினிற்றிரிதலின்றி
ஊன்றுகவூழிதோறுமுலகினுள்ளமாந்தரெல்லாம்
ஈன்றவாவயத்தராகியில்லறம்புணர்கநாளும்.

இ - ள். ஊழிதோறும் வையகம்வான்தருவளத்தது ஆகி — ஊழிதோறு மிந்நிலவுலகு மழைதரும் வளத்தையுடையதாகி, பிணியில்தீர்க — பிணியினின்றும் நீங்குகவெனவும், தேன்தருகிளவியாரும் — தேனையொத்தசொற்களை யுடைய பெண்களும், கற்பினில் திரிதல் இன்றி ஊன்றுக — கற்பினிற் றிரியாது நிலைபெறுகவெனவும், உலகின உளமாந்தர் எல்லாம் — உலகிலுள்ள மக்களெல்லாரும், ஈன்றவா வயத்தர் ஆகி — இரு முதுகுரவர் வசத்தினராய்ச் சொற்கேட்டு, நாளும் இல்லறம் புணர்க — எந்நாளு மில்லறம் வழுவாது நடக்கவெனவும். (௧௧௨)

தவம்புரிந்தடக்கினோர்க்குந்தத்துவாதலைப்பட்டோம்பிப்
பவம்பரிகெயசகுமென்றுபணிந்தவருவபபவீமின்
அவம்புரிந்துடம்புநீங்காதருந்தவமுயன்மின்யாரும்
சிவம்புரிநெறியைச்சேரச்செப்புமிப்பொருளுங்கேண்மின்.

இ - ள். தவம்புரிந்து அடக்கினோர்க்கும் — தவத்தொழிலில் மிருந்து ஐம்புலனுமடக்கினோர்க்கும், தத்துவா தலைப்பட்டு — தத்துவவுணர்ச்சியுடை

யவளை யெதிர்ப்பட்டு, எமக்கும்பவம்பரிக என்று பணிந்து நயமி—எமக்கும் பிறப்பறுகவென்றுபணிந்து அவளை யுபசரித்து, அவா உவப்ப ஈமின்— அவா விரும்புவனவற்றைக் கொடுங்கள், யாரும் அவம்புரிந்து உடம்புநீங்காது அருந் தவம்முயன்மின்—எவரும் அவத்தொழில்செய்து வீணாள்போக்கி யுடம்புநீங் காமல் அவ்வுடம்பால்தவமுயன்றுசெய்யுங்கள், சிவம்புரிநெறியைசேர—நன் மைசெய்யு முத்திநெறியையடைய, செப்பும் இ பொருளை நேண்மின்—யான் கூறுமிககாரியத்தைககேளுங்கள

நோற்கும் எதிர்காலப்பெயரெச்சம் நோல் பகுதி, கு சாரியை, லகரந் திரிபும் உகரக்கேடும் சந்தி. (கஎரு)

அம்மலரணிச்சத்தம்போதல்லியோடணியிநொந்து
விம்முறுநுசுப்பினைபவீற்றிருந்தணங்குசோந்த
வெம்முலைபரவையல்குல்மிசைமணிக்கலாபமேய்ந்தோட
செம்மலர்த்திருவின்சாயற்றேமொழித்தத்தையென்பாள

இ - ள். அம்மலர் அணிசசத்தம்போது—அழகுமிக்க அனிச்சப் போ தை, அல்லியோடு அணியின் — அகவிதழோடணிந்தால், நொந்து விம்முறு நுசுப்பினைய — நொந்துவிம்முமிடை யையுடைய, வீற்றிருந்து அணங்குசேர்ந்த வெம்முலை— வீற்றிருந்து விறலுடைத்தெய்வஞ்சேர்ந்த விருப்பந்தருந் தனத்தை யும, பரவை அல்குல—பரந்த அலகுலையும், மணிமிசை கலாபம —அதன்மேல் வீக்கிய கலாபத்தையும், வேய்த்தோள—மூங்கிலையொத்த தோளையும, செம்ம லர் திருவின்சாயல் தேன்மொழித்தத்தை என்பாள—செந்தாமரை மலரில வசி க்கும் இலக்குமியை யொத்த மென்மையும் தேன்போன்றசொலலையுமுடை ய தத்தையென்பவள்

வீற்றுத்தெய்வம் மங்கைப்பருவத்துக்கு அடைமொழி. (கஎசு)

மற்றவடந்தைநாயகன்வண்மைகைசீதத்தனென்பான
கொற்றவன்குலத்தின்வந்தானகூறியபொருளிதாகும
முற்றவமுடையளாகிமூரிநூற்கலைகளெல்லாங
கற்றவள்கணங்கொணல்யாழநங்கனைக்கனிக்குநீரா

இ - ள். கொற்றவன் குலத்தின்வந்தான—கலுழவேகன் குலத்தில்வந் தவனுதலால், வண்மைகை சீதத்தன் என்பான் நாயகன் அவள்தந்தை— கொடுக்குங் கையையுடைய சீதத்தனெனனும் பெயரையுடைய வணிகன் அவள்தந்தையாவான், கூறிய பொருள் இது ஆகும— அவன்கூறிய காரியமி துவாகும், முன்தவம் உடையள் ஆகி—முன்புதவமுடையவளாகி, மூரி நூல் கலைகள் எல்லாம் கற்றவள்—பெருமைவாய்ந்த பலநூல்களையுமெல்லாங் கற்ற வள், கணம் கொள் நல்யாழ் — யாழ்வித்தையின் கூட்டத்தையுடைய நல்ல யாழால்; அநங்கனைகனிக்கும் நீரள் — மன்மதனைக் கனிவிக்குந் தன்மையை யுடையவள்.

தெய்வப்பிறப்பினளாயினும் மக்கட்பிறப்பினளை மணயபுரிய நின்றாள் என்பதன்மேல் மற்று என்னும இடைச்சொல் நிற்றலால விளைமாற்றுப்பொ

ருளில்வந்த; கனிகரும பிறவினைபபெயரெச்சம. தன்வினையில் கனியும் எனவரும். கொற்றவன் குலத்தின் வந்தானென்றது முன்னர்க்காண்க. ()

தீங்தொடைமகரவீணைத்தெள்விளியெடுப்பித்தேற்றிப்
பூந்தொடையரிவைதன்னிற்புலமிகுத்துடையநம்பிக்
கீந்திடுமிறைவராதிமூவகைக்குலத்துளார்க்கும்
வேந்தடுகுருதிவேற்கணவிளங்கிழைதாதையென்றான்

இ - ள். வேந்து அடுகுருதிவேற்கண்விளங்கிழைதாதை — பகையரசரைக்கொன்ற வுதிரந்தோய்ந்த வேல்போன்ற கண்களையுடைய தத்தையின் பிதாவாகியகலுழவேகன், இறைவர் ஆதிமூவகைகுலத்துளார்க்கும்—அரசர்முதலிய மூவகைக் குலத்திலுள்ளாரிலும், தீம்தொடை மகரவீணை தெள்விளி எடுப்பித்து ஏற்றி — இனிய நரம்புபூர்ந்த மகரயாழின தெள்ளிய இசையையெழுப்பிப் பெருக்கி, பூந்தொடை அரிவைதன் இல—மலர்மாலையையணிந்த தத்தையைக்காட்டிலும், புலம் மிகுத்து உடைய நம்பிக்கு—அறிவுமிகவுடைய சிறந்தோனுக்கு, ஈந்திடும்என்றான் — அவளைக்கொடுமென்று சீதத்தனுக்குக்கூறினனென்று

தத்தை நால்வகையாழிலடங்கிய ஒராயிரம்பது நரம்புகட்டின மகரவீணையில் வல்லவள்என்பான் மகரவீணைப்புலமிகுத்துடைய நம்பிக்குஎன்றார் நால்வகையாழின் வகையை முன்னர்க்காண்க என்றான்முற்றெச்சம். ஏழாமுருபு நிற்றற்குரிய விடத்து நான்காமுருபுநின்றலால் உருபுமயக்கம (௧௧௬)

மணமகமடந்தையாகமார்புறமுயங்கிநின்ற
அண்ணலையாதியாகவருங்கடிநகரைவாழ்த்தி
விண்ணகமுழக்கினேயப்பவீதிதோறெருக்கியெங்கும
கண்ணொளிர்கடிப்பினோச்சிக்கடிமுரசறைந்தகாலை

இ - ள். மணமகம் மடந்தை ஆகம்—நிலமாதின்மார்பினை, மார்புஉற முயங்கிநின்ற அண்ணலை ஆதியாக—தனது மார்பிற்பொருந்தத் தழுவி நின்ற கட்டியங்காரன்முதலாக, அருங்கடி நகரைவாழ்த்தி—அரியகாவல்பூண்ட நகரினையும்வாழ்த்தி, விண்அகம்முழக்கின் ஏய்ப்ப — மேகத்திலெழுந்த முழக்கமொப்ப, முரசுகண்—முரசின்மார்ச்சனையில், ஒளிர்கடிப்புஇன்— விளங்குங்குறுந்தடியால், ஓச்சி எருக்கி—ஓங்கித்தாக்கி, வீதிதோறு எங்கும் அறைந்தகாலை—வீதிதோறுமெங்கும் சாற்றியகாலையில

எருக்கி, ஓச்சி இறந்தகாலவினையெச்சங்கள் எருக்கு, ஓச்சு பகுதிகள் விடஎன்னும்வினையெச்சம் குறுகியென்னும் எச்சத்தின்முதனிலையையும், அது எனஎன்னும் எச்சத்தின் முதனிலையையும், அதுஎன என்னும் எச்சத்தின் முதனிலையையும், அது அறைவாமென்னும் எச்சத்தையும், அது என்றுஎன்னும்எச்சத்தையும், அதுவாழ்த்தியென்னும் எச்சத்தையும், அது எருக்கி, ஓச்சி என்னும் எச்சங்களின் முதனிலைகளையும், அது அறைந்த என்னும் இறந்தகாலப்பெயரெச்சத்தின் முதனிலையையும் அப்பெயரெச்சம் காலையென்னும் காலப்பொருளையு முறையேகொண்டன. (௧௧௭)

வணக்கருத்தானைமன்னர்மத்தகம்பிளந்துவாய்த்த
திணகொழுங்குருதிவாட்கைசிலம்புடைபெயர்க்குமாற்றல்

அணைப்பருங்களிகொள்வேழத்தத்தினபுரத்துவேந்தன்
கணைகவினழித்தவுண்கட்கன்னியைக்கருதிவந்தான்.

இ - ள் வணங்கு அரும்தானைமன்னர் — (அதுகேட்டு) பகைவர்க்கு வணங்குதலில்லாத சேனையையுடைய அரசர்களது, அணைப்பு அரும்களி கொள் வேழத்து மத்தகம்பிளந்து — அடக்குதற்கரிய மதக்களிப்பையுடைய யானையின் மத்தகத்தைப்பிளந்து, நிணம் கொளுங் குருதிவாய்த்தவாள்கை— நிணத்திலும் உதிரத்திலும் படிந்த தப்பாதவாளையேந்திய கையையும், நிலம்புடை பெயர்க்கும் ஆற்றல — நிலவுலகைநிலை பெயர்க்கும் வன்மையையும் உடைய, அத்தினபுரத்து வேந்தன் — அத்தினபுரத்தினரசன், கணைகவின் அழித்த உண் கண்கன்னியை கருதிவந்தான்—அம்பினழகினை யழித்தமையுண்ட கண்களையுடைய நத்தையை விரும்பிமணம்புரியவந்தனன்.

(ந - ரை.) மன்னருடையவேழத்தினது மத்தகத்தைப்பிளந்து தப்பாத வாளையுடைய கையினையும் மெய்வலியினையுமுடைய அத்தினபுரத்தினரசன் கன்னியைக் கொள்ளக்கருதி வந்தானென்க.

வணக்கு வலிதல் விகாரம் (கக௮)

சிதைப்பருஞ் சீற்றத்துப்பிறசெய்கழனரலவீக்கி
மதக்களிறடாத்துக்குன்றமணிவட்டினுருட்டுமாற்றல்
கதக்களியொளிறுவைவேற் காம்பிலிக்காவன்மன்னன்
பதைப்பரும்பருமயானைப்பாலகுமரன்வந்தான்.

இ - ள் சிதைப்பு அரும் சீற்றம் துப்பின் — பகைவராலழித்தற்கரிய கோபவன்மையினாலே, செய்கழல நரலவீக்கி — பொன்னாற்செய்தவீரகண்டையொலிக்கக் கட்டி, மதக்களிறு அடாத்து — பகைவரது மதத்தையுடைய யானையைக்கொன்று, குன்றம் மணிவட்டின் உருட்டும் ஆறறல்— மலைகளையழகிய வட்டைபபோலுருட்டும் வன்மையையும, ஒளிறுவைவேல— விளங்குங்கூரிய வேலினையும், கதம்களி பதைப்பு அரும்பருமம யானை — கோபக்களிப்பால் பகைவருக்கு அஞ்சிப்பதைத்தோடுதலில்லாத கவசமணிந்த யானையையுமுடைய, காம்பிலி காவல்மன்னன் பாலகுமரன்வந்தான்— காம்பிலிநாட்டுக்கரசனாகிய பாலகுமரன்வந்தனன்.

(ந - ரை) பகைவரால் சிதைத்தற்கரியதுப்பாலே வீரக்கழலைக்கட்டிக்களிற்றையடர்த்துக்குன்றைவட்டைப்போலுருட்டு மெய்வலியினையும வேலினையும் யானையினையுமுடைய காம்பிலிநாட்டுக்குமன்னனாகிய பாலகுமரன் வந்தானென்க.

மா இசைநிறைத்தலில் வியங்கோளிலலாதுவந்த இடைச்சொல் (ககக)

இலைபொரவெழுதியன்னவெரிமணிக்கடகமுன்கைச்
சிலைபொரத்திரண்டதிண்டோட்சில்லரிச்சிலம்பினார்த
முலைபொரவுடைந்ததண்டாமொய்ம்மதுத்துளிப்பவந்தான்
மலைபொரவரியமார்பின்வாரணவாசிமன்னன்.

இ - ள. இலைபொரஎழுதிஅன்ன —இலைத்தொழில் நெருங்க எழுதினாற்போன்ற, எரிமணிகடகமமுன்கை—தீப்பொறிபோலொளிவிடும் மாணிக்கமிழைத்

தகடகத்தையணிந்த முன்கையினையும், மலைபொரதிரண்டதிணதோள்—மலையொடுபோர்செய்த திரண்ட திண்ணிய தோளினையும், மலைபொரஅரிய மார்பின்—மலையொப்பாதலில்லாத மார்பினையுமுடைய, வாரணவாசிமன்னன்—காசிநகரத்தரசன், சில் அரிசிலம்பினாறு—சிலம்பென்னுமொலிசெறிப்பையுடைய பருக்கைக்கற்களைப் பொரு சிலம்பினையணிந்த பெண்களது, முலை பொர உடைந்த தண்தார்—முலைபொருதலாலுடைந்த தண்ணியமாலை, மொய்ம்மது துளிப்ப வந்தான்—நெருங்கிய தேனைத் துளிக்க வந்தனன்.

(ந - ரை) கடகமணிந்த முன்கையினையும் திரண்டதிண்ணிய வெற்றிபொருந்திய தோளினையும் மலையொத்தற்கரிய மார்பினையுமுடைய மன்னன் முலைபொருதலாலலர்ந்த தாரின் மதுத்துளிப்ப வந்தானென்க.

முன்புள்ள பொருநெருங்குதற்பொருண்மேலும், இடையிலுள்ளஇரண்டும்பொருதற்றொழில்மேலும், இறுதியிலுள்ளது ஒப்புப்பொருண்மேலும் நின்றன. பொருபகுதி, உகரச்சாரியை கெட்டது, அகரம் சந்தி, விகுதி குன்றியது. சிலம்பொரவென்னும் வினையிலுடனிகழ்ச்சிப்பொருளில் வந்த மூன்றும் வேற்றுமைத் தொகை. இது சொற்றொடர்.

> கதிர்முடிமன்னர்சூழ்ந்து கைதொழுதிறைஞ்சிமாலைத்
> திருமுடிவயிரவில்லாற்சேவடி திளைப்பவேத்தி
> அருமுடியணிந்தகொற்றத்தவந்தியன்முரசமார்ப்ப
> வொருபிடிநுசுப்பினாளையுள்ளுபுவந்துவிட்டான்.

இ - ள். கதிர்முடிமன்னர்சூழ்ந்து—விளங்குங்கிரீடத்தையணிந்த அரசர்கள்சூழ்ந்து, கைதொழுது இறைஞ்சி—கைகூப்பிவணங்கி, மாலைதிருமுடிவயிரம்வில்ஆல்—மாலையணிந்ததமது அழகியகிரீடத்திலுள்ள வயிரத்தின் ஒளியால், சேவடிதிளைப்பஏத்தி—தனதுசெவந்தபாதம் ஒளியுறு திருக்கும்படிவணங்க, அருமுடி அணிந்தகொற்றத்து அவந்தியன்—அடைதற்கரிய கிரீடத்தையணிந்த வெற்றியையுடைய அவந்திநாடாளுமரசன், முரசம்ஆர்ப்ப—வெற்றிமுரசொலிக்க, ஒருபிடிநுசுப்பினாளை உள்ளுபுவந்துவிட்டான்—ஒருபிடியிலடங்கிய இடையையுடைய தத்தையைக்கொள்ளக் கருதிவந்தனன்.

(ந - ரை.) மன்னர்சூழ்ந்தனையாராய்த்தொழுது தமதுமுடியின் வயிரத்தினொளியாலே அவன்சேவடி ஒளியிடையழுந்திருக்கும்படி யிறைஞ்சியேத்த, முடியணிந்த அவந்தியனார்ப்ப, ஒருபிடியினடங்கு நுசுப்பினாளைக் கொள்ளக்கருதிவந்துவிட்டானென்க.

ஏத்தி செயவெனெச்சத்திரிபு. உள்ளுபு செய்து என்னும்வாய்பாட்டிறந்த காலவினையெச்சம். (கஉச)

> வெள்ளணியணிந்தநான்றேவேந்தர்தமுடியிற்கொண்ட
> கள்ளணிமாலைமோந்துகளைகழலிலங்குநோன்றாட்
> புள்ளணிகொடியினானிற்போர்பலதொலைத்தவாற்றல்
> அள்ளிலையணிந்தவைவேலயோத்தியர்கோவும்வந்தான்.

இ - ள். வெள்ளணி அணிந்தநான்றே—வெள்ளணியணிந்த அந்நாளே, வேந்தர்தம் முடியில் கொண்ட கள் அணிமாலைமோந்து—அரசர்கள்

தமது முடியிற்சூடிய கள்ளொழுகுமலர்மாலையைமோந்து, கனைகழல் இல
ஙகும்நோன்றாள்—ஒலிக்கும்வீரகண்டைகட்டியவலியகாலினையும், புள் அணி
கொடியினன் புல்—கருடகொடியையுடைய திருமாலைப்போல, பலபோர்
தொலைத்த ஆற்றல—எதிர்த்தபலபோரையும் வென்ற வலிமையும், அள் இலை
அணிந்தவைவேல் அயோத்தியர் இறையும்வந்தான்— செறிந்த இலைபோலத்
தகட்டு வடிவுவாய்ந்த கூரிய வேலையுமுடைய அயோத்தி நாட்டார்க்கு அரச
னும் வந்தான்

(ந - ரை.) ஒப்பனையையணிந்தவன்றே மாலையைமோந்து கழலிலங்கு
காலினையும், கருடக்கொடியோனைபபோலப பல போரைத்தொலைத்த ஆற்ற
லையும் வேலையுமுடைய அயோத்தியாக்கிறையும் வந்தானென்க.

வெள்ளணி பிறந்தநாளி லணியும் அணி. அள் செறிதல். மோந்து இற
ந்தகாலவினையெச்சம் மோபகுதி (கஉஉ)

> நீணிதிவணிகரீருநிலமி யவாகளெல்லாம்
> வீணையிறபொருதுவெலவான்விரைவினார்துவன்றிமூதூரக்
> கோணமுமறுகுமெல்லாநகுச்செனநிறைந்தமாந்தர்
> மாண்மதுநசையின்மொய்த்தமதுகரவீட்டமொத்தார்.

இ - ள். நீள்நிதி வணிகர் ஈருக நிலமிசை யவர்கள் எல்லாம்—(முரச
றைந்தமாலையில்) அளவிறந்த செல்வத்தையுடைய வைசிய ரீருக நிலவுலகி
லுள்ள அந்தணரும் அரசருமெல்லாரும், வீணையில் பொருதுவெல்வான்—
வீணையிற்போர்செய்து வெல்லவேண்டி, விரைவினர் துவன்றி— விரைந்து
நெருங்கி, மூதூர்கோணமும் மறுகும் எல்லாம்— தொன்றுதொட்டு இரா
புரத்தின் குறுந்தெருவிலும் நெடுந்தெருவிலுமெல்லாம், குச்சு என்ன நிரைத்
து—பாவாற்றியைபபோல வரிசையாயிருந்ததனால், அ மாந்தர்மாண்மதுநசை
யின்மொய்த்த மதுகர ஈட்டம் ஒத்தார—சுயம்வரந்திற்குவந்த அவர்கள் மாட்
சிமைப்பட்ட மதுவின் விருப்பத்தாலமொய்த்தவண்டின் கூட்டங்களையொத்
தனர்.

(ந - ரை ) கடிமுரசறைந்த [illegible]யில் வணிகரீருக நிலமிசையவர்களா
கிய இவர்களும், ஒழிந்த அரசரும அந்தணருமெல்லாரும் வீணையிற்பொருது
வெல்ல வேண்டி விரைவினராய் நெருங்கி மூதூரிற குறுந்தெருவிலும் நெடு
ந்தெருவிலும் பாவாற்றியென நிரைத்தலாலே, அம்மாந்தர் மதுநசையால்
மொய்த்த தேனீயின் றிரட்சியை யொத்தாரென்க.

மதுகரவீட்டமொத்தார என்றது மதுகரம் வருந்தத் தேனையொருவன்
கொண்டுபோகும் வகைபோலஇவர் வருந்தச் சீவகன் கொண்டுபோனன் என்
பதைக்குறிப்பித்து. துவன்றி இறந்தகாலவினையெச்சம் துவன்று பகுதி,
உகரக்கேடுசந்தி, இ எச்சவிகுதி. (கஉகூ)

> உருக்கமைந்தெரியுஞ்செம்பொனோவில்லகலமாகத்
> திருக்குழன்மடந்தைசெல்லத்திருநிலந்திருத்திப்பின்னர்
> விரைத்தகுநானநீராலவெண்ணிறப்பொடியைமாற்றிப்
> பாவியினர்பநிவண்டார்ப்பப்பன்மலாபரப்பமெல்லாம்

இ - ள். திருகுழல் மடந்தைசெல்ல — (சீதத்தன்) அழகிய கூந்தலையுடைய தத்தை வீதியிற்செல்லும்படி, திரு நிலம் உருக்கு அமைந்து எரியும் செம்பொன்—அழகியநிலத்தைஓட்டமைந்தெரியும் பொன்னாலே, ஓர் ஐவில் அகலம் ஆக—ஒரைந்துவிற்கிடையகலமாக, திருத்தி— எங்குந்திருத்தி, பின்னர்—பின்பு, விரைதகு நானம் நீர் ஆல் வெள் நிறம் பொடியைமாற்றி— நறுநாற்றமிக்ககஸ்தூரியாலும் பனிநீராலும் எழுந்த வெள்ளிய புழுதியை மாற்றி, பக்கம் எல்லாம் படுவண்டு ஆர்ப்ப—பக்கமெல்லாம்மதுவில் வீழும் வண்டுகள் ஒலிக்கும்படி, பல்மலர்பரப்பினர்—பல மலர்களைப் பரப்பினார்கள்.

(ந - ரை.) மடந்தைசெல்லும்படி வீதியிற திருநிலத்தை யோட்டமைந்தெரியும் பொன்னாலே யோரைந்து விற்கிடையகலமாக வெங்குந் திருத்தி, பின்பு நாற்றத்திற்குத்தக்க புழுகாலும் பனிநீராலும் எழுந்தபொடியைமாற்றிப்பக்கமெல்லாம் வண்டார்க்கும்படி மலரைப்பரப்பி.

பின்வருஞ் செய்யுளோடு முடிதலால் ஒருதொடர். பரப்பினர் முற்றெச்சம். (கஉச)

> விலைவரம்பறிதலில்லாவெண்டுகிலடுத்துவீதி
> அலர்தலையணிச்சத்தம்போதைம்முழவகலமாகப
> பலபடப்பரப்பிப்பாவைமெல்லடிப்பரிவுதீர
> நிலவரைத்தன்னனாரைநிதியினால்வறுமைசெய்தான்.

இ - ள். வீதி — அங்ஙனம் பரப்பியவீதியில், பாவைமெல் அடி பரிவு தீர—தத்தையினது மெல்லிய பாதத்தின் வருத்தந் தீரும்படி, விலை வரம்பு அறிதல் இல்லாத வெண் துகில் பலபட அடுத்து— அந்நிலத்தில் விலையினளவுஅறிதல் கூடாத வெள்ளிய துகிலைப் பலபடச்சேர்த்து, அலர்தலை அணிச்சத்து அம் போது ஐமுழவு அகலம் ஆக பரப்பி— மலர்தலையுடைய அனிச்சமலரை யைந்துமுழ வகலமாகப் பரப்பி, நிலவரை தன் அன்னாரை—நிலவுலகினெல்லையில தன்னையொப்பவரை, நிதியினால் வறுமைசெய்தான்— நிதியால் வறியவராக்கினன்.

(ந - ரை.) அங்ஙனம பரப்பிப்பாவையதடியிற் பரிவுதீரும்படி அப்பொன்னிலத்தே வெண்டுகிலைப் பலபட வடுத்து அதன்மேலே யனிச்சம்பூவை ஐம்முழவகலமாகப் பரப்புதலாலே, நிலத்தெல்லையில் தன்னை யொப்பாரை நிதியாலே மிடியராக்கினனென்க.

திருத்தி, மாற்றி, பரப்பி, அடுத்து, பரப்பி என்னும் வினையெச்சங்கள் ஒன்றனையொன்று கொண்டு வறுமைசெய்தான் என்னும் வினைமுற்றின்முதனிலையைக்கொண்டன. "அரசனாலையங்கட்டினான்" என்றாற்போல இவன் ஏவுதற்கருத்தாவாக நிற்றலால இயற்றுவோர் தொழிலை யிவன் றொழிலாகக் கூறி வறுமைசெய்தான் என முடித்தார். (கஉரு)

> மண்டிலநிறைந்தமாசின்மதிப்புடைவியாழம்போன்றோர்
> குண்டலமிலங்கநின்றகொடியினைக்குறுகித்தோழி
> விண்டலர்கோதைவிம்மும்விரைக்குழன்முழுதுநீவிப்
> பண்டியன்மணங்களெல்லாம்பரிவறப்பணிந்துசொன்னாள்.

இ - ள். மண்டிலம் நிறைந்தமாசு இல் மதிபுடை — வட்டமாக ந்த குற்றமற்ற சந்திரன்பக்கத்தில், வியாழம் போன்று— நின்ற வியாழத்தை யொத்து, ஓர்குண்டலம் இலங்கநின்ற கொடியினை—ஒருகுண்டலம் விளங்க நின்ற பூங்கொடிபோன்ற தத்தையை, தோழிதொழுது குறுகி — வீணாபதிவ ணங்கியடைந்து, விண்டு அலர் கோதைவிம்மும் விரைகுழல் நீவி—மலர்ந்தல ர்ந்த மலர்மாலையின் நிறைந்த வாசமமைந்த கூந்தலைக்கோதி, பண்டு இயல் மணங்கள் எல்லாம் பரிவு அறபணிந்து சொன்னாள் — முன்னுலகில் நடந்த விவாகங்களை யெல்லாம் அவளுக்கு நாலுல்வந்த வருத்த நீங்கப் பணிந்து கூறினாள்.

(ந - ரை.) வட்டநிறைந்த மறுவில்லாத மதியின் பக்கத்து நின்ற வியா ழம் போன்று முகத்தருகேயொருகுண்டல மிலங்கும்படி நின்ற கொடியினை வீணாபதி தொழுது குறுகி, விரைக்குழலைக்கோதி அவட்கு நாலுல் வரும் பரி வறப்பண்டு உலகிலியலு மணங்களையெல்லாந்தாழ்ந்து கூறினாளென்க.

நீவி இறந்தகாலவினையெச்சம் நீவுபகுதி. (கஉசு)

> எரிமணிநெற்றிவேய்ந்தவிளம்பிறையிதுகொலென்னப்
> புரிமணிசுமந்தபொற்பூண்பொறுககலாநுசுப்பிற்பாவை
> திருமணிவீணைக்குன்றத்திழிந்ததீம்பாலைநீத்தத்
> தருமுடியரசராழ்வரம்மனையறிவலென்றாள்.

இ - ள். இது எரிமணி நெற்றிவேய்ந்த இளம் பிறை கொல் என்ன— இது தீப்பொறியையொத்தமாணிக்கத்தை யிரண்டு தலையிலுமழுத்திய ஒரு இளம் பிறையோவென்று கூற, புரிமணிசுமந்த பொன்பூண் பொறுக்கலாத நுசுப்பின்பாவை— முத்துவடங்கள் மாணிக்கத்தை யிரண்டுதலையிலுஞ் சும ந்த அழகிய ஆபரணத்தைச் சுமக்க வியலாத இடையையுடைய பதுமை போல்வாய், அம்மனை—தாயே, திருமணிவீணைகுன்றத்து இழிந்த தீம்பாலை நீத்தத்து—சிறந்தமாணிக்கமிழைத்த வீணையாகிய மலையினின்றுங் குதித்த இனிய பாலைப்பண்ணாகிய நீர்ப்பெருக்கில், அருமுடி அரசர் ஆழ்வர்—பெறு தற்கரிய கிரீடத்தையணிந்த அரசர்களழுந்துவார், அறிவல் என்றாள் — அத னைநானறிவேனென்று வீணாபதி கூறினாள்.

(ந - ரை.) வீணாபதி இது மணியை இரண்டுதலையிலு மழுத்திய தோர் பிறையோவென்ன, முத்து வடங்களிரண்டுதலையினுமணியைச் சுமந்த பூணை ப்பொறுக்கலாதநுசுப்பிற்பாவாய், அம்மனாய் நினது மகரயாழாகிய மலையினி ன்றுங் குதித்த பாலையாகிய நீர்ப்பெருக்கிலரசரழுந்துவர், அதனை நானறிவே னென்றாளென்க.

இதனால் பின்வருதலை வீணாபதி கூறினாள் என்பது கருத்து. புரிமுத் துவடம். பாலைப்பண்செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும் பாலை, கொடிப்பாலை, மேற்செம்பாலை, விளரிப்பாலையென எழுவகைப்படும் தலைவியைத்தோழி அம்மனையென்று கூறல் முறைப்பெயர்பற்றிவந்தவழுவ மைதி "அன்னை யென்னை யென்றலுமுளவே" என்ற தொல்காப்பியச்சூத்தி ரத்தால் (கஉஎ)

மண்ணிடமலியவெங்குமார்ந்தரும்வந்துதொக்கார்
ஒண்ணிறவுரோணியூர்ந்தவொளிமதியொண்பொனாட்சித்
தெண்ணிறவிசும்பினின்றதெளிமதிமுகத்துநங்கை
கண்ணியவீணைவாட்போர்க்கலாமின்றுகாண்டுமென்றே.

இ - ள். மாந்தரும் வந்துமண் இடம் மலிய எங்கும்தொக்கார்— மாந்தரெல்லாரும்வந்து நிலவுலகெங்கும் நிறையக் கூடினாராதலால், ஒள்நிறம் உரோகிணி ஊர்ந்த ஒளிமதி ஒண்பொன் ஆட்சி—ஒளிவாய்ந்த உரோகிணியூர்ந்த விளக்கமுடைய சந்திரனோடு கூடிய ஒள்ளிய வியாழக்கிழமையில், தெள்நிறம் விசும்பில்நின்றதெளிமதிமுகத்துநங்கை—தெளிந்தநிறத்தையுடையஆகாயத்தில் நின்ற களங்கமில்லாதசந்திரனை யொத்தமுகத்தையுடைய தத்தையின், கண்ணிய வீணைவாள்போர்கலாம் இன்று காண்டும் என்று—மதிக்கத்தக்க வீணையாகிய வாட்போரின் மாறுபாட்டினையின்றுகாண்போமென்று.

இது அடியில்வருஞ் செய்யுளோடு முடிதலால் ஒருதொடர். மண்ணிடமின்றி யீண்டியெனப்பாடமாயில் தம்மிற்றிரண்டு எனப் பொருள்கொள்க. மாந்தர் வெகுவசனம். (கஉஅ)

பசுங்கதிர்க்கடவுள்யோகம்பழிப்பறநுனித்துவல்லான்
விசும்பிவர்கடவுளொப்பான்விருச்சிகனறிந்துகூற
அசும்புதேனலங்கலைம்பாலரிவையோடாய்ந்துநாய்கன்
விசும்புபோன்மாந்தராரவிழுநிதிசிதறினானே.

இ - ள். பசுங்கதிர் கடவுள்யோகம்— சந்திராபரணமென்னுஞ் சோதிடநூலில், பழிப்பு அற நுனித்துவல்லான் — குற்றமறக்கூர்த்து வல்லவனாகிய, விசும்புஇவர் கடவுள் ஒப்பான்விருச்சிகன் அறிந்துகூற—ஆகாயத்திற்செல்லும் பிருகஸ்பதியையொத்த கணிதெரிந்து கூற, தேன் அசும்பு அலங்கல் ஐம்பால் அரிவையோடு ஆய்ந்து—தேன் பொசியுமாலையையணிந்த கூந்தலையுடைய பதுமையோடு செய்யுமுறையை யாராய்ந்து, நாய்கன், சீதத்தன், விசும்புபோல மாந்தர் ஆர விழுநிதிசிதறினான்—மேகம் போலமாந்தர்கள் நுகரப்பெரும் பொருளைசசிந்தினான்.

பசுங்கதிர்ககடவுள் இளங்கிரணத்தையுடைய கடவுள் என்றமையால் சந்திரன், யோகம் என்றமையால் சையோகம் அது ஆபரணத்தின்மேல்நிற்றலால் சந்திராபரணமென்றார். (கஉகூ)

வாசநெய்வண்டுமூசமாந்தளிர்விரல்கள்சேப்பப்
பூசிவெள்ளலோத்திரத்தின்பூம்பொருக்கனைத்தசாந்தின்
காசறுகுவளைக்காமரகவிதழுபயிலமட்டித்
தாசறத்திமிர்ந்துமாநரணிகலநதிகழ்வித்தாரே.

இ - ள். மாதரவண்டுமூச— தத்தையினுடம்பில் வண்டுகள் மொய்க்க, மாந்தளிர்விரல்கள் சேப்ப—மாந்தளிர்போன்ற விரல்கள்செவக்க, வாசம்நெய்பூசி—வாசமமைந்த நெய்யைப்பூசி, வெள்ளலோத்திரத்தின் பூம்பொருக்கு அனைத்த சாந்தின்—உலர்ந்தமுணை முருக்கம் பூவினையனைத்த குழம்பினை,

காசுஅறுகுவளைகாமர் அகவிதழ்பயிலமட்டித்து ஆசுஅறதிமிர்ந்து—குற்றமற றகுவளையினதுஅழகிய உள்ளிதழின்தடிப்புப்போலக் கலந்துதிமிர்ந்து, அணி நலம்திகழ்வித்தார்—அழகிய அவளழகைப் பொலியச்செய்தார்கள்.

(ந-ரை.) மாதர்மெய்யிலே வண்டுமூசவிரல் செவப்ப நெய்யைப்பூசி வெள்ளலோத்திரத்தினது பூவுலாதலேயனைத்த குழம்பாலே குற்றமறத்திமிர்ந் துநலத்தைத விளக்கினரென்க.

வெள்ளலோத்திரம் வடசொல் இதுதமிழில்வெள்ளலோத்தம் எனவ ரும். மட்டித்து, திமிர்ந்துஇறந்தகாலவினையெச்சம மட்டி, திமிர்பகுதிகள்.

கங்கையின்களிற்றினுச்சிக்கதிர்மணிகுடத்திற்றந்த
மங்கலவாசநன்னீர்மணிநிறங்கழீஇயதொப்ப
நங்கையைநயப்பவெல்லாம்விரைபொடுதுவருஞ்சேர்த்தி
அங்கரவல்குலாளையாட்டினாரமையன்னார்.

இ-ள். அரம்பைஅன்னார்—அரம்பைமார்களையொத்த தோழியர்கள், மணிநிறம்கழுவியது ஒப்ப—மாணிக்கத்தைச் சாணைபிடித்ததொக்க, நங்கை யை — தத்தையை, நயப்பஎல்லாம் — விரும்ப முப்பத்திரண்டு ஓ மாலி கைகளெல்லாவற்றையும், விரையொடு துவரும் சேர்த்தி — விரையையுந்து வரையுஞ்சேர்த்திப்பின்பு, களிற்றின் உச்சி கதிர்மணிகுடத்தில்தந்த கங்கை யின் மங்கலவாசம் நல்நீர் — யானையினுச்சியில் ஒளிவாய்ந்த நவமணிக ளிழைத்த குடத்தில்வந்தகங்கையினதுவாசமூட்டியமங்களகரமாகிய நல்லநீ ரினால், அங்குஅரவுஅல்குலாளை ஆட்டினார்—அவ்விடத்தப்பாம்பின் படத் தையொத்த அல்குலேயுடைய அத்தத்தையை நீராட்டினாகள்.

அரவல்குலாள் சினையைக்கூறுமுகலறி கிளவியாதலால முதலாகுபெய ர். இதன்முதலில் அகரச்சுட்டுத்தொகுத்தல. முப்பத்திரணடுவகை ஓமாலி கையை "இலவங்கம்பச்சிலேகச்சோலமேலம்—குலவியநாகணங்கோட்டம்—நிலவிய, நாகமதர் வரிசிதக்கோலநன்னாரி—வேகமில் வெண்கோட்ட மேவு சீர்—போகாத, கத்தூரிவேரிவிலாமிச்சைகணடில் வெண்ணெய்—ஒத்தகடு நெல்லியுயர்தான்றி—சொத்தலரும், வண்ணக்கச்சோல மரோணுகமாஞ்சிலுட ன்—எண்ணுஞ்சயிரோகமின்புழுகு—கன்னியிளம், புன்னைநறுந்தாது புலியுகி ர்பூஞ்சரளம்— பின்னுதமாலம் பெருவகுளம—பன்னும், பதுமுகநுண்ணே லம் பைங்கோடுவேரி, கதிர்நகையாயோ மாலிகை" என்னுங்கலிவெண்பாவி னும், ஐந்துவிரையை "சந்தனமகிலொடு கருப்பூரங்கத்தூரி—குங்குமமென் றிவையைந்தும் விரையே" என்னும் சூத்திரப்பாவிலும், பத்துத்துவரைமா ந்தளிர், கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், கருங்காலி, நாவல், ஆல், அரசு, அத்தி, இத்தி, "நாற்பான்மரமா நாவறிரிபலே—வன்கருங்காலிபத்து த்துவரோ" என்னுஞ்சூத்திரப்பாவிலுங் காண்க. (கஈக)

வெண்ணிறமழையின்மின்போல்வெண்டுகிற்கலாபம்வீக்கிக்
கண்ணிறமுலேயுந்தோளுஞ்சந்தனத்தேய்வைகோட்டித்
தெண்ணிறச்சிலம்புசெம்பொற்கிண்கிணிபாதஞ்சேர்த்திப்
பண்ணிறச்சுரும்புசூழும்பனிமுல்லேச்சூட்டும்வேய்ந்தார்

இ - ள். வெள்நிறம மழையில் மின்போல—வெள்ளியநிறத்தையுடையமேகத்திற்கிடந்த மின்னலைப்போல, வெள்துகில் கலாபம்வீக்கி—வெள்ளிய ஆடையில் கலாபம்என்னும் பதினாறுகோவையணியைககட்டி, கண்முலையும் நிறம்தோளும்—சூ சுகம்வாய்ந்த தனத்திலும் நிறம்வாய்ந்ததோளிலும், சந்தனத்தேய்வைகொட்டி—சந்தனக்குழம்பால் தொய்யிலெழுதி, தெள்நிறம்சிலம்பு செம்பொன் கிண்கிணிபாதம் சேர்த்தி—மிக்கவொளிபொருந்திய சிலம்பையுஞ்செவந்த பொன்னாலாகிய கிண்கிணியையுங் காலிற்சேர்த்தி, பண்நிறம் சுரும்பு சூழும்பனிமுல்லைசூட்டும் வேய்ந்தார்—பண்ணையும்நிறத்தையுமுடைய வண்டுகள்சூழும் குளிர்ந்தமுல்லை மாலையைக்கற்பினரசியின் தலையிற்சூட்டினார்கள்.

(ந - ரை.) வெணமேகத்தினுட்கிடந்த மின்னுப்போற்று கிலுக்குள்ளே கலாபத்தைவீக்கி, கண்களையு நிறத்தையுமுடைய முலையினுந்தோளினுஞ் சந்தனக்குழம்பைப்பூசி, சிலம்பையுங் கிண்கிணியையும் பாதத்தேசேர்த்தி, பண்ணையுநிறத்தையுமுடைய சுரும்புசூழு முல்லைச்சூட்டைக் கற்பிறருத்தலையிலே சூட்டினுரொன்க.

கண்ணிறமுலைதோள் முறைநிரனிறையணி. உம்மைஅசைநிலை. கோட்டி இறந்தகாலவினையெச்சம் கோட்டுபகுதி. (கசஉ)

எரிமணிச்சுண்ணமின்னுமிருஞ்சிலைமுத்தஞ்சேர்த்தித்
திருமணிமுலையினெற்றிசசிறுபுறஞ்செறியத்தீட்டிப்
புரிமணியாகத்தைதாவிரனுதிகொண்டுபூசி
விரிமணிவியப்பமேனியொளிவிட்டுவிளங்கிறறன்றே.

இ - ள். மின்னும் இருஞ்சிலை—விளஙகும் பெரியவானவிற்போன்ற முத்தம்திருமணி முலைநெற்றியில்சேர்த்தி—முத்துவடத்தையழகிய முலைத்தலையிற் சோத்தி, எரிமணிசுண்ணம் சிறுபுறம் செறியதீட்டி—தீப்பொறியையொத்தமாணிக்கச்சுண்ணததினைமுதுகிறசெறியஎழுதி, மணிபுரிஆகத்து ஐது ஆகவிரல் நுதிகொண்டுபூசி—முத்துவடத்தையணிந்த மார்பில் அழகாக விரனுனியைக்கொண்டுபூச, மேனிவிரிமணிவியப்ப ஒளிவிட்டுவிளங்கிற்று—அவள்மேனி யொளிமிக்கமாணிக்கம்விளங்கும்படி யொளிவீசிவிளங்கியது.

(ந - ரை) அவர்வானவிற்போலுமுத்துவடத்தை முலைத்தலையிலேசேர்த்தி, மணிச்சுண்ணத்தை முதுகிலேசெறியத்தீட்டி, அதனையாகத்தேவிரனுதியைக்கொண்டு ஐதாகப்பூசிமேனிதான் மணிவியக்கும்படிவிளங்கிற்றென்க.

புரி—வடம். பூசிசெயவெனெச்சத்திரிபு. ஐதுபண்படியாகப்பிறந்த குறிப்புவினைமுற்று ஐபகுதி, து ஒன்றன்பால்விகுதி; இதுஆகவென்னும் வினையெச்சத்தையடுத்து ஒருசொல்லாய்நின்றன. (கசங)

அருங்கயம்விசும்பிற்பார்க்குமணிச்சிறுசிரலையஞ்சி
இருங்கயந்துறந்துதிங்களிடங்கொண்டுகிடந்தநீல
நெருங்கியமணிவிற்காப்பநீண்டுலாய்ப்பிறழ்வசெங்கேழ்க்
கருங்கயலல்லகண்ணேயெனக்கரிபோக்கினார்.

இ - ள். நீண்டுஉலாய்பிறழ்வ— காதளவுநீண்டு உலாவிப்பிறழ்கின்றஇ வை, அருங்கயம்—ஆழ்ந்தகயத்தை, விசும்பில்பார்க்கும் மணிசிறுசிரலேஅஞ் சி—ஆகாயத்தில்நின்றுபார்த்துத்தன்னையெடுக்கும் அழகியமீன்குத்திக்குப்பய ந்து, இருங்கயம்துறந்து— பெரியஅக்கயத்தினின்றுநீங்கி, நீலமணிநெருங்கி யவில்காப்ப — நீலமணியாலமைந்த வில்மேலேநின்றுகாக்க, திங்கள்இடம் கொண்டு கிடந்தசெங்கேழ் கருங்கயல்அல்ல—சந்திரனைத்தனக்கு இடமாகக் கொண்டு கிடந்தசெந்நிறமுவாய்ந்த கரியகயலல்ல, கண்ணேஎன்ன—இவைக ண்களேயென்றுகண்டோர் கூற, கரிபோக்கினர்—மையெழுதினர்கள்.

(ந - ரை.) நீண்டுலாய்ப்பிறழ்கின்ற இவைஆழ்ந்த கயத்தைவிசும்பிலேநி ன்றுபார்த்துத் தன்னையெடுக்குஞ் சிச்சிலிக்கஞ்சி, அதனைத்துறந்து நீலமணி யாகிய நெருங்கியவிற்காப்பத்திங்களை யிடங்கொண்டு கிடந்தகயலல்ல, கண் ணேயென்றுபிறாகருதும்படி மையையெழுதினுரொன்க.

கரியென்றதற்குச்சாட்சி எனப்பொருள்கொண்டு சாட்சிபோலததோன் றஎனப்பொருள்கொளளுதலும் ஒன்று. கயமநீர்நிலையிலொருவகை. கயலெ னமயங்கினவனுக்கு அதுவல்லகண்ணேயென்று அம்மயக்கமொழிக்கமையெ ழுதினர் என்றமையால் இது ஒழிப்பணி. (சுகூச)

பொருந்துபொற்றூணநான்கிற்பொலிந்துநூற்புலவாசெந்நா
வருந்தியும்புகழ்தலாசாமரகதமணிசெயகூடத்
திருந்திளையாாகள்கோலமிந்திரனிருமித்தாற்போற்
றிருந்தச்செய்ததறபினங்கை திருவிறகோர்திலகமொத்தாள்.

இ - ள். பொருந்து பொன்தூணம் நான்கில்பொலிந்து — பொருந்திய பொற்றூணகளுன் கிற்பொலிந்து, நூல்புலவர் செம்நாவருந்தியும் புகழ்த ல்ஆகாத—நூல்களையுணர்ந்த புலவாகள்செவந்த நாவினுல்வருத்தங்கூர்ந்தும் புகழுதற்கியலாத, மரகதமணிசெய்கூடத்து இளையார்கள்இருந்து—மரகதம ணியாற்செய்தகூடத்தில் மஙகையாகளிருந்து, கோலம்இந்திரன் நிருமித்தா ல்போல்திருந்தசெய்ததன்பின் —கோலத்தையிந்திரனிருமித்ததுபோலத்திரு ந்த அலங்கரித்தபின்,நங்கை—நதகையாளவள்,திருவிற்குஓர்திலகம்ஒத்தாள்- இலக்குமிக்குஇட்ட ஒப்பில்லாத திலகத்தையொத்திருந்தனள்.

(ந - ரை.) தூணுன்காற் பொலிந்துநூற்புலவர்கள் புகழ்தலாகாத மணி யாற்செய்த ஒப்பித்தற்குப் பொருந்துங்கூடத்தே யொப்பிக்குமகளிரிருந்து கோலத்தை, இந்திரனிருமித்தாற போற்செய்தபின், நங்கைதிருமகட்கிட்ட தோர்திலகத்தை யொத்தாள் என்க. (சுகூரு)

மண்களைமுழவம்விம்மவரிவளை துவைப்பவள்வார்க்
கண்களைந்திடியின்வெம்பிக்கடலெனமுரசமார்ப்ப
விண்கனிந்துருகுநீாமைவெள்வளைத்தோளிபோந்தாள்
பண்கனிந்துருகுசல்யாழ்ப்படைபொருதுடைக்சலுற்றே.

இ - ள். விண்கனிந்து உருகும்நீர்மைவெள்வளைதோளி — தேவர்கள் மனநெகிழ்ந்துருகுந்தன்மையையுடைய வளையலையணிந்த தோளையுடையதத்

ளைத, பண்கனிந்து உருகுநல்யாழ்படைபொருது உடைக்கலுற்று—இசையால் கேட்டோர்யாவரு மனங்கனிந் துருகுதற்குக்காரணமான நல்லயாழினையுடைய மூன்றுவருணச்சேனையையுங் கெடுக்கத்தொடங்கி, மண்கணைமுழவம்விம்ம—மார்ச்சனையுடைய திரண்ட முழவு ஒருபாலொலிக்கவும், வரிவளை துவைப்ப—நிறமமைந்த சங்கமொருபாலொலிக்கவும், வன்வார் முரசம்—நெருங்கவாரால் விசித்த முரசு, கணைகனைந்து இடியின்வெம்பிகடல் என்ன ஆர்ப்பபோந்தாள்—கண்ணொலித்து இடியைப்போல ஓசைமிக்குக்கடலைப்போல வொலிக்கச்சென்றாள்.

(ந - ளா.) தேவர்நெஞ்சுநெகிழ்ந்துருகுந் தன்மையையுடையவளைத்தோளி, யாழையுடைய மூன்று வருணத்துப் படையையுங் கெடுக்கலுற்று முழவு விம்ம, வீணையொலிப்பவள்வாமுரசஙகணணொலிதது இடியின்வெம்பிக்கடலெனவாரப்பப்போநதாள் என்க.

அரசா முதலிய மூன்றுவருணத்திலும் யாழ்வல்லோராய்த் தன்னொடும்யாழ்ப்போர்செய்யவருவாரை வெல்லுந்திறலால் நல்யாழ்ப்படை பொருது உடைக்கலுற்று என்றா, பொருது இறந்காலவினையெச்சம் பொருபகுதி, தகரமெய் இடைநிலை, உ எச்சவிகுதி. (௧௬௬)

> பரந்தொளியுமிழுமைபம்பொன்கண்ணடிபதாகைதோட்டி
> விரிந்திருண்மேயுஞ்செமபொன விளக்குவெண்முரசுகும்பம்
> சுரந்தவெண்மதியைச்சூன்றுகதிர்கொண்டுதொடுத்தபோலும்
> பொருந்துபொற்கதிர்பெய்கற்றைபுணர்கயல்போந்தவன்றே.

இ - ள் ஒளிபாந்து உமிழும் பைமபொன்கணணடி—ஒளிபரவவீசும் பசிய பொன்னாலமைத்த கண்ணாடியும், பதாகை தோட்டி—கொடியும் அங்குசமும், விரிந்து இருள்மேயும செம்பொன்விளக்கு—ஒளிபரவி யிருளைக்கெடுக்கும் செவந்த பொன்னாலமைந்த விளக்கும், வெள்முரசு கும்பம்—வெள்ளியமுரசும் பூரணகலசமும், சுரந்த வெள்மதியைசூன்று கதிர்கொண்டு தொடுத்தபோலும்—அமுதினைச்சுரந்த வெள்ளிய சந்திரனை நடுவேதோண்டி அங்குள்ள கிரணங்களைவாங்கிச் சேர்த்தனபோலுமுள்ள, பொருந்துபொன்கதிர் பெய்கற்றை—பொருந்திய பொற்காம்பு கிரணத்தைப்பெய்யுஞ் சாமரையும், புணர்கயல் போந்த—இரட்டைக்கயலும் முன்னேசென்றன.

(ந - ளா.) கண்ணாடிமுதலிய அட்டமங்கலங்களாகிய இவை முன்னே போந்தனவென்க.

கண்ணாடி கண்ணடி குறுக்கல் விகாரம். சூன்று இறந்தகாலவினையெச்சம் சூல் பகுதி. (௧௬௭)

> வென்றவனகலம்பூட்டவிளங்கொளிமணிசெய்செப்பின்
> நின்றெரிபசுமபொன்மாலைபோந்ததுநெறியிற்பின்னர்
> ஒன்றியமணிசெய்நல்யாழ்போந்தனவுருவமாலை
> தினறுதேனிசைகள்பாடத்திருநகர்சுடரவன்றே.

இ - ள். நெறியில்—உலகில்நடக்குமநெறியால், வென்றவன் அகலம் பூட்ட— தன்னை யாழில்வென்றவன் மார்பிற்பூட்ட, விளங்கு ஒளிமணிசெய்

செப்பின் — விளக்குங்கிரணத்தையுடைய செப்பில், நின்று எரிபசும்பொன் மாலைபோந்தது—நின்றுவிளங்கும் பசிய பொன்னாலரிந்து செய்தமாலை முன்னேசென்றது, பின்னர்—அதன்பின், உருவம்மாலைநின்று தேன் இசைகள் பாடநிருநகர் சுடர — தம்முருவினைமறைத்து நின்ற மாலையையுள்ளடக்கி வண்டுகளிசைபாடவும் அழகிய நகர்விளங்கவும், ஒன்றியமணிசெய்நல்யாழ் போந்தன — ஒளிபொருந்திய இரத்தின மிழைத்த நல்லவீணைகளுஞ் சென்றன.

(ந - ரை.) உலகு நடக்குநெறியாலேயென்றவனைகலத்தே பூட்டுதற்குச் செப்பிலே பொன்மாலைபோந்தது; அதன்பின்னே பாடவிளங்க யாழ்போந்தனவென்க.

பூட்ட, சுடர என்னும் செயவென்வாய்பாட்டுவினையெச்சங்களில்முன்னது எதிர்காலத்திலும் பின்னது நிகழ்காலத்திலும்வந்தன. (௬௯௰)

நான்கடித்தரவு கொச்சகம்.

ஆரந்துயல்வரவந்துகில்சோர்தர
வீரம்படக்கையைமெய்வழிவீசித்
தேனைநடப்பனபோற்குறள்சிந்திநொ
டோருநடந்தனவொண்டொடிமுன்னே.

இ - ள். ஆரம்துயல்வர—முத்தாரமசையவும், அம்துகில் சோர்தர—அழகிய ஆடை நெகிழவும், வீரம்பட—வீரமுண்டாக, கையைமெய்வழிவீசி—கையினைவிலாப்புடைகளுள்ளேவீசி, தேனை நடப்பனபோல்— தேனைநடத்தல்போல, குறள் சிந்தின் ஒடு— குறள்சிந்தினுடனே, ஒண்தொடி முன்நடந்தன—ஒள்ளிய வளையலையணிந்த தத்தை முன்னேசென்றன.

(ந - ரை.) குறள் சிந்துடனேயாரமசையத்துகில் நெகிழாநிற்கவீரமுண்டாக விலாப்புடைக்குள்ளே கையை வீசித் தேனைகள் நடக்குமவைபோல வொண்டொடி முன்னே நடந்தனவென்க.

குறள், சிந்து குள்ளவடிவுகளின்வேறுபாடுகள். ஓரும் கட்டுரைச்சுவைப்பொருள் படவந்த இடைச்சொல். (௬௯௧)

இதுவும் அது.

வட்டச்சூறையர்வார்முலைக்கச்சினர்
பட்டுவீக்கியவல்குலர்பல்கணை
விட்டதூணியர்வில்லினாவாளினர்
ஒட்டியாயிரத்தோரெண்மர்முன்னினார்.

இ - ள். வட்டம்சூறையா—வட்டமாகிய பனிச்சையையுடையவரும், முலைவார்கச்சினர்—முலையில் வாராற்கட்டிய கச்சினையுடையவரும், பட்டுவீக்கிய அல்குலர் பல்கணைவிட்ட தூணியர்—சேலைகட்டின அல்குலையுடையவரும் பலவகைப்பட்ட அம்புகளைநிறைத்த அம்பறாத்தூணியை யுடையவரும், வில்லினர் வாளினர் — வில்லினரும் வாளினருமாய், ஆயிரத்தெண்மர் ஒட்டிமுன்னினார்—ஆயிரத்தெட்டுப்பேர்வஞ்சினங்கூறி முற்பட்டுச்சென்றார்.

குறையர்முதலிய குறிப்புமுற்றுகள் எச்சமாய்த் தனித்தனி முன்னினார் என்னும் இறந்தகாலவினைமுற்றின் முதனிலைகொண்டன. (கசO)

வம்புவீக்கிவருமுலையுட்கரந்
தம்பிநொய்யவராணுடைத்தானையர்
பைம்பொற்கேடகவாளொடுபற்றுபு
செம்பொற்பாவையைச்சேவித்துமுன்னினார்.

இ - ள். அம்பின் நொய்யவர் — அம்பினும் விரைந்துசெல்லும் நடையையுடையவர், ஆண் உடை தானையர் — ஆணுடையாகவுடுத்த ஆடையையுடையவராய், வருமுலை உள்கரந்து — தோன்றுமுலையுள்ளே மறைய, வம்பு வீக்கி—கச்சினைக்கட்டி, பைம்பொன் கேடகம் வாள் ஒடுபற்றுபு—பசியபொன்னாலமைந்த கேடகத்தையும் வாளையும் பிடித்து, செம்பொன்பாவைசேவித்து முன்னினார் — செவந்த பொன்னாலமைந்த பதுமைபோன்ற தத்தையை வணங்கி முற்படச்சென்றார்.

(ந - ஙா) ஓடுங்கால் அம்பினுங் கடியவர் வருமுலையுட்கரந்து கச்சுவீக்கி ஆணுடையாகவுடுத்தாடையுடையவராய்க்கேடகத்தையும் வாளையும் பிடித்துப்பாவையைச்சேவித்து முற்படச்சென்றாரென்க.

கரந்துசெயவெனெச்சத்திரிபு. ஒடு எண்ணிடைச்சொல். (கசக)

ஆணையாணையகலுமினீரென
வேணுக்கோலின்மிடைந்தவரொற்றலின்
ஆணையின்றெமதேயென்றணிநகர்
காணுங்காதலிற்கணனெருக்குற்றவே.

இ - ள். ஆணை ஆணை நீர் அகலுமின் என்ன — (காவற்குரியோர்) அரசனுணைநீங்களகலுங்களென்று, மிடைந்தவா வேணுக்கோலின் ஒற்றலின் —(காண) நெருங்கினவரை மூங்கிற்பிளிச்சால் மோதுதலால், அணிநகர் இன்று எமது ஆணை என்று—அழகிய நகரிலுள்ளோர் இன்று எம்முடைய ஆணையினை யாணையாகக்கொள்ளுமென்று, காணும் காதலின்கண் நெருக்குற்ற—காணும்விருப்பத்தால் கண்கணெருங்கின.

இன் உருபு ஏதுப்பொருட்டு. (கசஉ)

கண்ணினோடுபிறந்ததுகாரிகை
வண்ணங்காண்டற்கன்றோவென்றுவைதவர்
விண்ணுமண்ணும்விருந்துசெய்தாலொப்ப
எண்ணினெண்ணிடமின்றிநெருங்கினார்.

இ - ள். கண்ணினோடுபிறந்தது—நாககண்ணோடுபிறந்தது, காரிகைவண்ணம் காண்டற்கு அன்றுஓ—தத்தையினழகைக் காணுதற்கல்லவாவென்று, வைது—(காவற்காரரை)வைது, விண்ணும்மண்ணும் அவர் — விண்ணுலகிலுள்ள விச்சாதரரும் மண்ணுலகிலுள்ளமக்களும், எண்ணின் விருந்துசெய்தால் ஒப்ப— (தத்தையின்பொலிவு) ஆராயில்எங்களுக்குவிருந்துசெய்தாலொப்பனவென்று, எண் இடம் இன்றி நெருங்கினார்—எள்ளிட இடமில்லாமல் நெருங்கினார்கள். (கசங)

அறுசீர்நாலடித்தரவுகோச்சகம்.

*இனஞ்சேராவாகியிளையாருயிரின்மேலெண்ணங்கொள்வான்*
*புனஞ்சேர்கொடிமுல்லைபூம்பவளத்துள்புக்குப்பூத்தபோலும்*
*வனஞ்சேர்துவர்ச்செவ்வாய்வாளெயிறுங்கண்மலரும்வளையலாகாக*
*கனஞ்சேர்கதிர்முலையுங்கண்டார்கள்வீட்டுலகங்காணார்போலும்.*

இ - ள். புனம்சேர் முல்லைகொடி—புனத்திலுள்ள முல்லைக்கொடி, இனம்சேராதஆகி—தம்மினத்தைச் சேராதனவாகி, இளையார் உயிரின்மேல் எண்ணம்கொள்வான்—இளையவருயிரிடத்துள்ள அறிவைக் கொள்ளைகொள்ள, பூம்பவளத்து உள்புக்கு—பவளத்துள்ளேபுகுந்து, பூத்தபோலும் வனம் சேர்துவர் செவ்வாய் வாள்எயிறும்—பூத்தனபோலும் அழகமைந்த இவளதுபவளம்போன்ற செவந்தவாயினையும் ஒளிவாய்ந்த பற்களையும், கண்மலரும்வளையல்ஆகாத கனம்சேர்கதிர் முலையும்—கண்களாகியமலரையும் எழுதஇயலாத பருத்தவிளக்கம்வாய்ந்த முலையையும், காணார்—காணுதவர், வீட்டுலகம் கண்டார்கள்போலும்—முன்புமோட்சவுலகினைக் கண்டவர்கள்போலும், கண்டார்—இப்பொழுது பார்த்தவர், வீட்டுலகம் காணார்போலும்— பின்புமோட்சவுலகினைவிரும்பாதவாகள் (போலுமாம்)

(ந - ரை.) முல்லை இளையாருயிரிடத்தறிவைக் கொள்ளவேண்டித் தம்மினத்தைச் சேராவாய்ப்பவளத்துள்ளே புக்குப்பூத்தபோலுஞ் செய்யவாயையும் எயிற்றையும் கண்மலரையும் பண்ணமுடியாத முலையையுங்காணுதவர்கள்போலே யிருந்தது முன்பு வீட்டுலகதனைக் கண்டவர்களென்பாரும், இவையிற்றைக் கண்டவர்கள் பின்னை யிவையே காண்பாரக ளென்று கூறினுமொன்றுமாம்.

செவ்வாய் பெயர்மாத்திரையாகக்கொண்டு வாயினைச் செவ்வாயெனினுமமையும். இதுசெம்மொழிச் சிலேடையணி. (கசச)

*மீன்சேர்குழாமனையமேகலையும்வெம்முலையுங்கூற்றங்கூற்றம்*
*ஊன்சேருயிருய்யக்கொண்டோடிப்போமின்களுரைத்தேமென்று*
*கான்சேர்கமழ்கோதைகாறொடர்ந்துகைவிடாதரற்றுகின்ற*
*தேன்சேர்திருவடிமேறகிண்கிணிபொன்னுவதற்கேதக்கவென்பார்.*

இ - ள். கான்சேர் கமழ்கோதை கால்தொடர்ந்து—வாசம்நெருங்கிக்கமழுமாலையையுடையாளிடத்தே தொடர்ந்து, வெம்முலையும் கூற்றம்கூற்றம்-விருப்பத்தைத் தருந்தனமும் இயமன்இயமனே, ஊன்சேர் உயிர் உய்யகொண்டு ஓடிபோமின்கள் உரைத்தேம்என்று—நமதுயிர் உடலைச்சேர்ந்த வுயிராதலினது பிழைக்கக் கொண்டோடிப்போங்கள், உரைத்தேம்என்று—எம்மேற்குற்றமறச்சொன்னேமென்று, தேன்சேர்திருஅடிமேல்கைவிடாதுஅரற்றுகின்றகிண்கிணி—மலரொன்றுவண்டுகள்சேரும் அழகிய அவள்காலின்மேல் மாறுதொலிக்கின்ற சதங்கையும், மீன்சேர்குழாம் அனையமேகலையும்—நட்சத்திரனது கூட்டத்தையொத்த மேகலையணியும், பொன்ஆவதற்கு ஏதக்கஎன்பார்—பொன்னுவதற்கேதக்கன என்றுசொல்லுகின்றவரும்.

(ந - ரை.) கோதைபோல் வுளிடத்தே கட்டுப்பட்டு மூலையுங்கூற்றங் கூற்றம்; நுமதுயிர் வன்சேருயிராதலின் அதனைப்பிழைக்கக் கொண்டோடிப்போங்கள், எம்மேற்முழ்வற வுரைத்தேமென்று மாறுதாற்றுகின்ற திருவடிமேல் கிண்கிணியும் அல்குலின்மேகலையும் பொன்னுவதற்கோதக்க; இவளிடத்தே தங்குதற்குத் தக்கனவல்லவோ வென்பாரும்.

இன்பந்தரும்பொன் இவளிடத்துக் கிண்கிணியும் மேகலையுமாயடைந்து துன்பத்தைச்செய்தது என்பார் எதிர்மறைஏகாரம் தந்தமையால் இவளிடத்துத்தங்குதற்கல்லவோ வெனப்பொருள்கொள்க. கூற்றங்கூற்றம் அவலப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். (கசரு)

கள்வாய்ப்பெயப்பட்டமாலைக்கருங்குழல்கள்கண்டார்நைய
உள்வாய்ப்பெயப்பட்டவொண்மதுச்செப்போரிணைமெல்லாகமீன்ற
புள்வாய்மணிமழலைப்பொற்சிலம்பினிக்கொடியையீன்றாள்போலும்
கொள்வானுலகுக்கோர்கூற்றீன்றாளம்மவோகொடியவாறே.

இ - ள். கள்வாய் பெயப்பட்டமாலை கருங்குழல்கள்—மதுவினைத்தன் வாயாற்பெய்யப்பட்ட மாலையையணிந்த கரியகூந்தல்களையும், மெல்ஆகம்ஈன்ற—மென்மைவாய்ந்த மார்பம்தந்த, ஒள்மதுஉள்வாய்ப்பெயப்பட்ட செப்பு ஓரிணை—ஒள்ளியவிருப்பமாகிய மதுவைககாமுகர் நெஞ்சில்பெய்யப்பட்டஓரிரண்டுசெப்பையும், கண்டார்நைய—பார்த்தவர்கள் வருந்தும்படி, மணிபுள்வாய் மழலை பொன்சிலம்பின் இகொடியை—மணியாகிய நாவால் அன்னத்தின்வாய்போலும் மழலைவார்த்தை கூறும் பொன்னாற்செய்த சிலம்பினையணிந்த இந்தத்தத்தையை, ஈன்றாள்போலும்— பெற்றவள்போலிருந்தது, கொள்வான்உலகுக்கு ஓர்கூற்றுஈன்றாள்—உயிரைக்கொள்ளுதற்குஉலகினுக்கு ஒரு இயமனையீன்றவள், ஓ கொடிய ஆறுஅம்ம — ஓகொடியபடி யென்னென்பாரும்.

(ந - ரை.) கேட்பீராக, ஆகமீன்ற செப்பினையையும் கள்வாய்மாலைவேயப்பட்ட குழல்களையுங்கண்டார் விரும்பும்படி இக்கொடியையீன்றவள் போலேயிருந்தது முன்பு உலகத்திற்குக் கூற்றினையீன்றவள்; ஓஒருத்தி கொடியபடி என்னென்பாரும் என்க.

மாலைக்கருங்குழலும் எனவும் பாடம். ஐந்து பகுப்பாய் முடித்தலால் குழல்கள் எனப்பன்மையாற் கூறினார். ஐந்து பகுப்பாவன முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை. முடி மயிரையுச்சியில் முடித்தல். கொண்டை பக்கத்தில் முடித்தல். சுருள் பின்னே செருகுதல், குழல் சுருட்டிமுடித்தல், பனிச்சை பின்னிவிடுதல். பெண்ணும் ஆணும் இவ்வாறு வருந்துதலால் வியப்புப்பொருளைத்தரும் ஓவென்னு மிடைச்சொல் தந்தார். உபமானப்பொருளை யுபமேயமாக்கிக் கூறுதலால் எதிர்நிலையணி, இதனை வடநூலார் பிரதீபாலங்காரம் என்பார். (கசசு)

நாற்சீரடித்தாழிசை.

செய்யதாமரைமேற்றிருவேகொலோ
வெய்யநோக்கின்விச்சாதரியேகொலோ

மையில்வானவர்தம்மகளோகொலென்
றையமுற்றலர்தார்மன்னர்கூறினார்.

இ-ள். அலர் தார்மன்னர் — அலர்ந்த மலர்மாலையணிந்த அரசர்கள், செய்ய தாமரைமேல் திரு ஏ கொல் ஓ — செந்தாமரையில் வசிக்கும் இலக்குமியோ, வெய்யநோக்கின் விச்சாதரியேகொல் ஓ — கொடிய பார்வையையுடைய விஞ்சையர்மகளோ, மைஇல் வானவர்தம்மகள் ஏகொல் என்று—குற்றமற்ற தேவர்களது புத்திரியோவென்று, ஐயம் உற்று கூறினார்— சந்தேகங்கொண்டு கூறினார்கள்.

(ந - ரை,) மன்னர் என்பாரும் என்பாருமாய்ப் பின்னுந் திருவோ, விச்சாதரியோ, மகளோ வென்றை யுற்றுக் கூறினர் என்க.

கொல் ஐயப்பொருட்டு. ஓகாரம் சுட்டுரைச்சுவைப்பொருள் படவந்த அசைநிலை யிடைச்சொல். இது ஐயவணி. (கசஎ)

வீணைவென்றிவள்வெம்முலைப்பூந்தடம்
ஆணைதோய்வதல்லாற்பிறன்வெல்லுமேற்
கோணைப்போருட்குளிக்குவமன்றெனில்
மாணாற்றவஞ்செய்குவமென்மரும்

இ - ள். வீணைவென்று—வீணையால்வென்று, இவள்வெம்முலைபூந்தடம்- இவளது விருப்பந்தரும் தனமாகிய பூந்தடத்தில், தோய்வது அல்லால்— தோய்தலேயல்லாமல், பிறன் வெல்லுமேல்—பிறன் வலிந்து கொள்ளக்கருதில், கோணைபோருள்—மாறுபட்ட போரில், ஆணைகுளிக்குவம் — வஞ்சினங்கூறியவனோடுபோர்செய்வோம், அன்றுஎன்னில்—இவள்வென்றால், மாண நல்தவம் செய்குவம் என்மரும் — இவளைப்பெற நல்ல தவஞ்செய்வோம் என்பாரும்.

(ந - ரை.) இவள் முலைத்தடத்தை யாழைவென்றுதோய்தவன்றியொருவன் வலிதிற்கொள்ளக் கருதின், ஆணையேபோரிற்குளிக்கும்; இவடான் வெல்லின் இவளைப் பெறுதற்கு நல்வினையுண்டாம்படி தவஞ்செய்குவம் என்பாரும் என்க. (கசஅ)

குலிகச்செப்பெனக்கொம்மைவருமுலை
நலியுமெம்மையென்பார்நல்லகண்களால்
வலியவாங்கியெய்தாளெம்மைவாழ்கலேம்
மெலியவாவிவிடுக்குமற்றென்மரும்

இ - ள். குலிகம் செப்பு என்ன— இங்குலிகம் பூசிய செப்பைப்போல கொம்மைவருமுலை— திரண்டுவருந் தனங்கள், எம்மை நலியும் என்பார்— எம்மைவருத்துமென்பாரும், வலியவாங்கிநல்லகண்களால்எம்மை எய்தாள்— நிரம் பவலித்துஅழகியகண்ணாகிய அம்பால் எம்மை யெய்தனள், வாழ்கலேம் மெல்லிய ஆவிவிடுக்கும் என்மரும்—அதனாலுயிர்வாழேம் தேய்ந்த உயிர்போமென்று கூறுவோரும்.

(ந - ரை.) 'முலை எம்மை வருத்தும், இனி வாழ்கலேமென்பாரும்; நிர

ம்பவலித்துக்கண்ணுகிய அம்பாலே யெம்மை யெய்தாள், அதனூற்றேய்ந்த வாலிபோ மென்பாருமெனக.

மெலியதொகுத்தல். என்மர் மகரவிடைநிலை எதிர்காலத்தில் வந்தது.

ஊட்டியன்னவுருக்கரக்காரடி
நீட்டிமென்மலர்மேல்வந்துநின்னலங்
காட்டியெம்மைக்கொன்றுயெனக்கைதொழு
தோட்டைநெஞ்சினராயுழல்வார்களும்.

இ - ள். உருக்கு அரக்கு ஊட்டியது அன்ன — (இயல்பானசெவப் பால்) உருக்கிய அரக்கினை யூட்டியதொத்த, ஆர் அடி நீட்டி — நிறம்பொருந் திய காலைப் பொருதென்றறிந்தும் நீட்டி, மெல்மலர் மேல்வந்து — மெல் லிய மலரின்மேல்வந்து, நின் நலம் காட்டி எம்மை கொன்றுய் என்னகை தொழுது — உனது அழகைக் காட்டி யெம்மை வருத்தினுயென்று கைகூ ப்பி, ஒட்டை நெஞ்சினா ஆய் உழல்வார்களும்—அறைபோனமனமுடையவ ராய் வருந்துவார்களும்.

(ந - ரை.) இயல்பானசெவப்பாலஅரககூட்டியன்ன நிறத்தோடுபொரு ந்திய அடிநீட்டப்பொருதநனை நீட்டிவந்து நலத்தைககாட்டி வருத்தினுயெ ன்றுகூறித் தொழுது அறைபோய நெஞ்சினராய் வருந்துவாாகளும் என்க.

ஊட்டியன்ன தொகுத்தல்விகாரம் இது முற்றுவமம். (கூ௰)

அறுசீர்நாலடித்தரவுகொச்சகம்.

திங்கள்மதிமுகத்தசேலும்பவளமுஞ்சிலையுமுத்தும் [ம்
கொங்குண்குழலாண்மெல்லாகத்த கோங்கருமபுநகொழிப்பில்பொன்னு
அங்கைகுழியாவரக்கீந்தசெந்தளிர்நெய்தோய்த்தபோலும்
மங்கைமலரடியுந்தாமரையேயாமறியேமணங்கேயென்பார்.

இ - ள். திங்கள் மதிமுகத்த—பிறையுதித்த சந்திரனையொத்த முகத்தி லுள்ள கண்ணும்வாயும் புருவமும் பல்லும், சேலும்பவளமும் சிலையும் முத் தும்போலும்—சேலையும்பவளத்தையும் வில்லையும்முத்தையுமொக்கும், கொங் குஉண் குழலாள்மெல் ஆகத்த— மகரந்தம்பொருந்திய கூந்தலையுடைய தத் தையினது மெல்லிய மார்பிலுள்ள தனமுந் தேமலும், கோங்கு அரும்பும் கொழிப்பு இல் பொன்னும்போலும்—கோங்கரும்பினையும் ஓட்டற்ற பொன் னையுமொக்கும், அங்கை குழியா அரக்கு ஈந்த செந்தளிர் நெய்தோய்த்தபோ லும்— அகங்கைகள் குழியாவாய் அரக்கீன்ற செவந்த தளிரினை நெய்யில் தோய்த்தனவற்றையொக்கும், மங்கை அடியும் தாமரைமலரே போலும்— அத்தத்தையினதுபாதமுமதாமரைமலரையொக்கும், அணங்கேயாம் அறியே ம்என்பார்—இவை வருத்தும் வருத்தமொன்றுமே இத்தன்மைத் தென்றுநா மறியாதிருக்கின்றேமென்பாரும்.

(ந - ரை.) குழலாளது முகத்தினிடத்தனவாகிய கண்ணும் புருவமும் வாயும், எயிறும் சேல்முதலியவற்றையொக்கும்; ஆகத்திடத்தனவாகிய முலை யுஞ் சுணங்கும் அமபையும் ஒட்டற்ற பொன்னையுமொக்கும்; அகங்கை குழி

யாவாய்த்தளிர் செய்தோய்த்தவற்றை யொக்கும்; மங்கையடியுக் தாமரைமல ரையொக்கும்; இவை வருத்தும் வருத்த மொன்றுமே இத்தன்மைத்தென்று யாம் அறியாதிருக்கின்றே மென்பாருமென்க.

இவ்வுறுப்புகளில் நம்மை வருத்துகின்றது இது வென்று யாமறியேமெ ன்றுமாம். திங்கள் மதிக்குமுகத்த என்றுமாம. ஏகாரம்தேற்றம். குழியாமுற் றெச்சம். முகத்த வினைமுற்றுப்பெயர். போலும் இடைநிலைத் தீவகவணி. திங்கள் மதிமுகததில் பொருளுவமையணி. கொழிப்பு ஓட்டு. (கஙக)

பொன்மகரம்வாய்போழ்ந்தமுத்தநூறோள்யாப்பிற்பொலிந்தவாறும்
மின்மகரங்கூத்தாடிவில்லிட்டிருங்குழைகீழ்விளங்குமாறும்
மன்மகரவெல்கொடியான்மால்கொள்ளக்கால்கொண்டமுலையினாளை
யென்னரம்பையென்னுவாறென்பா ரிமைக்குங்கணிவையோவென்பார்.

இ - ள். மன்மகரம் வெல்கொடியான்மால் கொள்ளகால்கொண்டமு லையினாளை— பெருமைபொருந்திய மகரக்கொடியையுடைய மன்மதன் மயக் கங்கொள்ள அடிபரந்த முலையையுடைய தத்தையை, அரம்பை என்னுஆறு- அரம்பையென்னுதபடி, பொன்மகரம் வாய்போழ்ந்த முத்தநூல்— அழகியம கரம் தன்வாயங்காத்தலால் தோன்றிய முத்துவடம், தோள்யாப்பில் பொலி ந்த ஆறு உம்—தோட்கட்டிற் பொலிந்த வகையும், இருங்குழை மின்மகரம் கூத்தாடி வில் இட்டு—பெரிய குணடலம விளங்குமகரம் அசைதலால் ஒளி வீசி, கீழ்விளங்கும் ஆறும்—காதில்விளஙகும வகையும், என்என்பார்—என் னவென்று கூறுகின்றவரும், இமைக்குங்கண் இவையோஎன்பார் — கண் ணிமைக்குமென்பார்க்கு மானிட மகளிர்கணகளோ இந்தக் கண்களென்ப வரும்.

(ந - ரை.) முலையினாளை அரம்பையென்னுதபடி மாறுபட்டு இம்முத்து வடம் தோட்கட்டிற்பொலிந்தவாறும், இக்குழைகாதிலிலங்குமாறுமென் னெ ன்பாரும், கண்ணிமைக்கு மென்பார்கரு இம்மானிட மகளிர்கண்களோ இக் கண்களென்பாருமென்க.

முத்துவடமும் குழையும் தெய்வமல்ல என்று தெரிவித்தன என்பார் அரம்பை யென்னுவாறு எனவும், மானிட மகளிர கண்கள்போல அல்லவெ ன்பார் எதிர்மறைப்பொருள்பட இவையோவெனவுங்கூறினர். (கஙஉ)

கோள்வயிரநீளருவிக்குன்றிவர்ந்தசெஞ்சுடர்போற்கொலைவேன்மன்னர்
நீள்வயிரவெண்மருப்பினீலக்களிற்றின்மேனிரைத்தார்பொங்கத்
தோள்வயிரந்தோன்றத்தொழுவாரழுதகைவார்தொக்கோர்சோடி
வாள்வயிரம்விற்குமடநோக்கியார்கொலோபெறுவாரென்பார்.

இ - ள். கோள்வயிரம் நீள் அருவி குன்று இவர்ந்த செஞ்சுடர்போல்- வலிய வயிரங்களையும் பரந்த அருவிததிரளையுமுடைய மலையிலிருந்த சூரிய னைப்போல, கொலைவேல் மன்னர் — கொல்லுந்தொழிலையுடைய வேலினை யேந்திய அரசர்கள், நீள்வயிரம் வெள்மருப்பின்நீலம் களிற்றின்மேல்—நீண் டவயிரம்வாய்ந்த வெள்ளிய மருப்பினையுமுடைய கரிய யானைமேலிருந்து,

அழுது தொழுவார்ஙவார்—அழுது தொழுதுவருந்துவோராய், தொக்கு ஓ கோடி—நெருங்கியோர் கோடியாயிருந்தவரில், நிரைதார்பொங்க தோள்வயிரம் தோன்ற—யாழில் வென்று மாலைசூடுதலால் விளங்கவும் தோளின்வலிமையுலகெங்கும் பரக்கவும், வாள்வயிரம்விற்கும் மடநோக்கி — வாள்தனது வலிமையைவிடுதற்குக்காரணமான மடமைவாய்ந்த பார்வையையுடைய தத்தையை, பெறுவார் யார்கொல் ஓ என்பார்—பெறவிருக்கின்ற நல்வினையையுடையவர்யாரோ வென்பாரும்.

(ந - ரை.) மன்னர் குன்றிலே தொழுவார்க்கிவர்ந்த சுடர்போலே இருந்து அழுது நைவாராய்த் தொக்கு ஓர்கோடியாயிருந்தவர்களி லிம்மடநோக்கியைத் தார்பொங்கத்தோள்வயிரந் தோன்றப்பெறவிருக்கின்ற நல்வினையுடையார் யாரென்பாரும் என்க.

அழுது, நைவார் மெய்ப்பாடு அவலம். பெறுவோன் ஒருவனாகப் பெறுவார் எனப் பன்மை கூறியது துணிவுபிறவாமையின். (கஙரு)

பைம்பொனிமிர்கொடிபாவைவனப்பென்னுந்தளிரையீன்று
செம்பொன்மலர்ந்திளையார்கண்ணென்னுஞ்சீர்மணிவண்டுழலச்சில்லென்
றம்பொற்சிலம்பரற்றவன்னம்போன்மெல்லவேயொதுங்கியம்பூஞ்
செம்பொற்புரிசையடைந்தாள்செந்தாமரைமேற்றிருவையொப்பாள்.

இ - ள். வனப்பு என்னும் தளிரை ஈன்று செம்பொன்மலர்ந்து— அழகென்னுந்தளிரையீன்று பொன்னைப் பூத்து, இளையார்கண் என்னும் சீர்மணி வண்டு உழல—காளையாகண்களென்னும் சிறப்புவாய்ந்த கரியவண்டுகளுழலும்படி, பைம்பொன் நிமிர்கொடி — பசிய பொன்னாய் வளர்ந்தகொடியையும், பாவை—பாவையையும், செந்தாமரைமேல்திருவை ஒப்பாள்—செவந்த தாமரையில் வசிக்கு மிலக்குமியையு மொத்ததத்தை, சில்லென்று அம்பொன் சிலம்பு அரற்ற — சில்லென்னு மொலிக்குறிப்போடு சிலம்புகளொலிக்க, அன்னம்போல் மெல்ல ஒதுங்கி— அன்னம்போல மெல்லநடந்துசென்று, அம்பூம் செம்பொன் புரிசை அடைந்தாள் — அழகிய பொலிவுவாய்ந்த செவந்த பொன்னாலமைந்த மதிலைச்சேர்ந்தனள்.

(ந - ரை.) அலர்தார்மன்னர் அங்ஙனங்கூறிப்பின்பு, அவரும்ஒழிந்தோரும்என்மரும் உழல்வார்களும் என்பாருமாய்நிற்ப; கொடியையும்பாவையையுந் திருவையுமொப்பாள் சிலம்பரற்ற அன்னம்போலநடந்துசென்று புரிசையைச்சேர்ந்தாளென்க.

ஒடுஎண்ணெனும். வனப்பென்னுந் தளிரையீன்று செம்பொன் மலர்ந்திளையார் கண்ணென்னுஞ் சீர்மணிவண்டுழலப் பைம்பொனிமிர்கொடி. இல்பொருளுவமையணி. (கஙச)

பட்டியன்றகண்டத்திரைவளைத்துப்பன்மலர்நன்மாலைநாற்றி
விட்டகலாச்சாந்தினிலமெழுகிமென்மலர்கள்சிதறித்தூபம்
இட்டிளையரோத்தவிளையார்மடமகள்போலிருந்தாள்யாழ் [தே.
தொட்டெழீஇப்பண்ணெறிந்தாள்கின்னரருமெய்ம்மறந்துசோர்ந்தாரன்

இ - ள். பட்டுஇயன்றகண்டம் திரைவளைத்து—பட்டாற்செய்த பலவ ண்ணமாகிய திரைகளைவளைத்து, பல்மலர்நன்மாலைநாற்றி—பலமலராற்றொடுத் தமலர் மாலைகளைத் தொங்கவிட்டு, அகலாத சாந்தின் நிலம்மெழுகி—வாசம்வி ட்டுநீங்காத சாந்தினுனிலத்தைமெழுகி, மெல்மலர்கள்சிதறி—மெல்லியமலர் களைச்சிந்தி, தூபம்இட்டு—அகிலைப்புகைத்து, இளையர்ஏந்த—இளைஞர் துதியா நிற்க, இமையார் மடமகள்போல்இருந்து— தெய்வப் பெண்போலவிருந்து, நல்யாழ்தொட்டு பண்எழீ இ பண்எறிந்தாள்—யாழையெடுத்துப் பண்ணெழு ப்பி நரம்பைத்தெறித்தாள், கின்னரரும் மெய்மறந்துசோர்ந்தார்—கின்னரர் களுங்தே கமறந்து அவசமாயினுர்கள்.

(ந - ரை.) பல் வண்ணத்திரையைவளைத்து நாற்றிமெழுகிச்சிதறி அகி லைப்புகைத்து இளையரேத்தாநிற்ச; இமையார் மடமகள்போலிருந்து யாழை யெடுத்துப் பண்ணையெழுப்பி நரம்பைத்தெறித்தாள், அப்பொழுதுகின்னர ருஞ்சோர்ந்தாரென்க.

கண்டத்திரை கண்டம திரையில் ஒருவகையாதலால் சிறப்புப்பெயர் பொதுப்பெயரை விசேடித்துவந்த இருபெயரொட்டுப்பண்புத்தொகை. தூம ம்அகில்மேல்நிற்றலால் தானியாகுபெயர். (கருரு)

ஒருபொருள்மேல் மூன்றடுக்கி நாற்சீரால்வந்த
ஒருபோதுகோச்சகம்.

புன்காஞ்சித்தாதுதன்புறம்புதையக்கிளியெனக்கண்
டன்புகொண்மடப்பெடையலமவந்தாங்ககல்வதனை
என்புருகுகுரலழைஇயிருஞ்சிறகர்குலைத்துதிர்த்துத்
தன்பெடையைக்குயிறழுவத்தலைவந்தஇளவேனில்.

இ - ள். புன்காஞ்சிதாது—புல்லியகாஞ்சி மலரின்றூதில், தன்புறம்பு தைய—தன்முதுகுபுதைதலால், அன்புகொள் மடமைப்பெடை—அன்புகூ ர்ந்த மடமைவாய்ந்த பெண்குயில், கிளிஎன்னகண்டு அலம்வந்துஆங்கு அகல் வதனை—கிளியென்றுபார்த்துச் சுழன்றுஅவ்விடத்துநின்றும் போகின்ற அப் பெடையை, என்புஉருகுகுரல் அழையி — எலும்புநெக்கு விட்டுருகித்தன் குரலாலழைத்து, இருஞ்சிறகர்குலைத்து உதிரத்து—பெரியசிறகினையசைத்து மகரந்தத்தையுதிர்த்து, தன்பெடையை குயில்தழுவ — தனதுபேட்டினைச் சேவல்தழுவ, இளவேனில் தலைவந்தது—இளவேனிற்காலம் அவ்விடத்தே வந்தது,

(ந- ரை.) தாதிலேதன்புறம் புதைதலால்பெடை அதனைக்கண்டு கிளியெ ன்றலம்வந்து அவ்விடத்துநின்றும் போந்தவதனைத்தன் குரலாலேயழைத்து ச்சிறகையசைத்துச் தாதையுதிர்த்துக், குயில்பெடையைத் தழுவும்படி இள வேனிலவ் விடத்தேவந்ததென்க.

புதைய காரணப் பொருள்மேல்நிற்றலால் இறந்தகாலவினையெச்சம். அழையிஎன்னும் இறந்தகாலவினையெச்சச்சொல் இசைநிறைக்கத் தன்னீறு தோன்ற நின்றளபெடுத்தழையால் அழைஇசொல்லிசை நிறைத்தலில்வந்த வு

யிளபெடை. பெய்மொச்சத்திலும் "மடப்பெடை யசைஇய" இவ்வளபெ டைவரும். சிறகு சிறகர் இறுதிநிலைப்போலி. (கஙசு)

தண்காஞ்சித்தாதாடித்தன்னிறங்கரந்ததனைக்
கண்டாளுமடப்பெடைகிளியெனப்போய்க்கையகல
நுண்டூவியிளஞ்சேவனோக்கொடுவிளிபயிற்றித்
தன்சிறகாற்பெடைதழுவத்தலைவந்தகிளவேனில்.

இ - ள். தணகாஞ்சிதாது ஆடி—தண்ணியகாஞ்சிமலரின் மகரந்தத்தி லளைந்து, தன்நிறம்கரந்ததனை — தன்னிறமொழிந்த சேவற்குயிலை, ஆறு தமடப்பெடைகண்டு—பிரிவமையாத இளமைவாய்ந்த பெண்குயில்கண்டு, கிளிஎன்னகைஅகல—கிளியென்று கருதிகைவிட்டு நீங்குதலால், நுண்தூவி இளஞ்சேவல்— நுண்ணியதூவியையுடைய இளமைவாய்ந்த சேவற்குயில், நோக்கு ஒடுவிளிபயிற்றி—இங்கிதப்பார்வையோடு பலதரம்கூவி, தன்சிறகு ஆல்பெடைதழுவ இளவேனில்தலைவந்தது—தனதுசிறகால்பெடையைத் தழு வஇளவேனில்வந்தது.

(ந - ரை.) தாதையளைந்து தன்னிறங்கரந்த சேவலைக்கண்டு அமையாத பெடை கிளியெனக்கருதிக்கைவிட்டு நீங்குதலால், சேவல்இங்கித மானநோ க்கோடே யழைத்தலைப்பல் காளிகழ்த்திப் பெடையைச்சிற காற்றழுவும்ப டியிளவேனி லவ்விடத்தேவந்ததென்க. (கஙஎ)

குறுத்தாட்குயிறசேவல்கொழுங்காஞ்சித்தாதாடி
வெறுத்தாங்கேமடப்பெடைவிழைவகன்றுநடப்பதனை
மறுத்தாங்கேசிறகுளர்ந்துமகிழ்வாளுக்கொளத்தேற்றி
யுறுப்பிணுலடிபணியவிறுத்தந்தகிளவேனில்.

இ - ள். குறுதாள் குயில்சேவல் — சிறியகாலையுடைய சேவற்குயில், கொழுங்காஞ்சிதாதுஆடி —கொழுவியகாஞ்சிமலரின் மகரந்தத்தில்படிதலா ல், ஆங்குமடப்பெடைவெறுத்து—அப்பொழுதே பெண்குயில்வெறுத்து, வி ழைவு அகன்றுநடப்பதனை—வெறுத்து நடக்கும்அக்குயிலை, ஆங்குமறுத்துசி றகுஉளர்ந்து—அவ்விடத்தில் போக்கைத் தவிர்த்துச்சிறகினையுளர்ந்து, ஆறு மகிழ்வுகொளதேற்றி—நீங்காத மகிழ்ச்சிகொள்ளத்தேற்றி, உறுப்பிணுல்அடி பணிய—தன்தலையால் பாதத்தைவணங்க, இளவேனில்இறுத்தந்தது—இள வேனிற்காலம் அவ்விடத்தேவந்தது.

(ந - ரை.) சேவல்தாதையாடுதலாலே பெடைகிளியென்று அப்பொழு தேவெறுத்து வேட்கைநீங்கிப்போகின்றதனைப்போக்கைத்தவிர்த்துஉளர்ந்து தேற்றித்தலையால் வணங்கும்படி வேனில்அவ்விடத்தேவந்ததென்க.

பங்குனியிலுஞ் சிறிதுவேனில் தோன்றுதலால் இதுகூறினர். குறுத் தாள்வலித்தல்விகாரம். இறுத்தந்தது ஒருசொல். (கஙஅ)

ஐஞ்சீரால்வந்த நாலடித்தரவுகோச்சகம்.

தனையவிழ்கோதைபாடித்தாணமர்ந்திருப்பத்தோழி
விளைமதுக்கண்ணிவீணைபதியெனும்பேடிவேற்கண்

*ணிளையவள்பாடவீரரொழால்வகைதொடங்கலன்றேன்*
*வளையவளொழாலின்மைந்தர்பாடுகவல்லையென்றாள்.*

இ - ள். தளைஅவிழ்கோதைபாடி தான்அமர்ந்திருப்ப— கட்டவிழ்ந்த மாலையையணிந்த தத்தைபாடியாழ் வாசித்தற்குச்சமைந்திருக்க, தோழிமது விலைகண்ணி வீணாபதியென்னும்பேடி— அவள்தோழியாகிய தேன்விளையு மலர்மாலையையணிந்த வீணாபதியென்னும் பேடியானவள், வேல்கண் இளையவள்பாட—வேல்போன்றகண்களையுடைய தத்தைபாட, வீரர்எழால் வகை தொடங்கல்—வீரரெல்லாரும் அதற்கேற்பயாழின் கூறுபாட்டையெல்லாம் வாசிக்கத்தொடங்குக, அன்றெனில்—அதற்கு இயையீரானால், வளையவள்ள ழாலின்—வளையலையணிந்த அத்தத்தையின் யாழ்வாசினைபோல, மைந்தர்வ ல்லைபாடுக என்றாள் — மைந்தர்கள்விரைவாய்ப்பாடககடவீரென்றாள்.

(ந - ரா.) கோதைஅவைப்பரிசாரத்தைப்பாடி யாழ்வாசித்தற்குச் சமைந்திராநிற்க; அவள்தோழியாகிய வீணாபதியென்னும்பேடி இளையவள் பாடவீரரெல்லாரு மதற்கேற்ப, யாழின்கூறுபாட்டை யெல்லாம் வாசிக்கத்தொடங்குக; அதற்கியையீராயின், வாளையவளது யாழ்வாசினைபோலே மைந்தர்விரையப்பாடு வீராகவென்றாளென்க.

அவைப்பரிசாரம் பாடத்தொடங்குமுன்சபையில் முன்னர்த்தேவபாணி யெடுத்துப்பாடுதல், அதறகு "அவையடக்கம்" என்றாறபோல அவைப்பரிசாரம் எனவழஙகும். தொடங்கல் வியங்கோள் வினைமுற்று. இதன்பொது மையை நீக்கவீரா என்னுஞ் சிறப்புப்பெயர்தந்தார். யாழ்வாசினை வீணையினரம்பினைத்தடவுதல். (சருகூ)

ஈற்றடிமிக்கு வேறுபட்டுவந்த கொச்சகம்.

*வேயெதிரண்மென்றோள்வில்லேகொடும்புருவம்*
*வாயேவளர்பவளமாந்தளிரோமாமேனி*
*நோயேமுலைசுமப்பதென்றார்க்கருகிருந்தார*
*ஏயேயிவளொருத்திபேடியோவென்றார்*
*எரிமணிப்பூண்மேகலையாள்பேடியோவென்றார.*

இ - ள். திரள்மென் தோள்வேயே—திரண்டமெல்லிய தோளமூங்கிலே, கொடும்புருவம் வில்லே—வளைந்தபுருவம்வில்லே, வாய்வளர்பவளமே— வாய்வளரும்பவளமே, மாமேனிமாந்தளிரே—பெருமையமைந்த மேனிமாந் தளிரோ (இவை யித்தன்மையனவாகவும்) முலைசுமப்பது நோயேஎன்றார்க்கு— (முலைகாணுமையால்) இவள்முலைசுமத்தல் நோயோவென்றையங்கொண்டு வினவினாக்கு, அருகுஇருந்தார்—பக்கத்திலிருந்தவாகளும, ஏ ஏ இவள் ஒருத்திபேடியோ என்றா—என்னே என்னே இவளொருத்திபேடியோவென்றை யங்கொண்டார்—எரிமணிபூண்மேகலை யாள்பேடி ஓ என்றார் — (அதுகேட்டுச்சிலர்) தீப்பொறியையொத்த மாணிக்கங்குயின்ற மேகலாபரணத்தையுடைய தத்தையோடுவந்தாளென்றயாங்கேட்டிருந்தபேடியிவளோவென்றார்.

(ந - ரா.) தோள்வேயே; புருவம்வில்லே; வாய்பவளமே; மேனிதளிரே; இவைஇத்தன்மையாகவும் முலைகண்டிலேம்; இவட்குமுலைசுமத்தல் நோ

யோவென்றையுற்று வினையினோர்க்கு அருகிருந்தவரு முலைகாணுமையால் என்னேஎன்னேஇவளொருத்திபேடியோவென்றையுற்றார்; அதுகேட்டுச்சிலர்தத்தையுடன் வந்தாள்என்று யாங்கேட்டிருந்த பேடியிவளோ வென்றாரென்க.

ஏகாரம்பிரிநிலைப் பொருளன. இவ்விடத்து நகையாடுதலையுட் கொண்டிருத்தலால் மறைப்பிறையணி. (கக௦)

பலிகொண்டுபோராதபாசமிவள்கண்
ஒலிகொண்டுயிருண்ணுங்கூற்றமென்றெல்லே
கலிகொண்டுதேவா முலைகரந்துவைத்தார்
இலைகொண்டபூணினீரொன்றெழினிசேர்ந்தாள்
இலங்குபொற்கிண்கிணியாணக்கெழினிசேர்ந்தாள்.

இ - ள். இலைகொண்டபூணினீர (அவள்அதுகேட்டு) தகட்டுவடிவுசெறிந்த ஆபரணத்தையுடையீர, தேவர்—பிரமனா, இவள்கண் பலிகொண்டு போராதபாசம்— (படைக்கின்றபொழுதே) இவள்கண் உயிர்ப்பலிகொள்ளுதலாலே தன்கொலைத்தொழிலின் மீளாதகாலபாசமாம்; எல்லே ஒலிகொண்டு உயிர்உண்ணும் கூற்றம்என்று—இவள்பகற்பொழுதே தழைத்து உயிரினையுண்ணுமியமனென்று, முலைகரந்துவைத்தார் என்று— தனத்தைமறைத்துவைத்தாரொன்றுகூறி, எழினிசேர்ந்தாள்—போய்த்திரையைச்சேர்ந்தாள், கலிகொண்டு—அவ்வாரவாரத்தையுட்கொண்டு, இலங்குபொன்கிண்கிணியாள்நக்கு எழினிசேர்ந்தாள்—விளங்கும்பொன்னுலாகிய சதங்கையையுடைய தத்தையும் சிரித்து அங்குநின்றெழுந்து திரையைச்சோந்தாள்.

(ந - ரை) அவள் அதுகேட்டுப் பூணினீர், பிரமனுர்படைக்கின்றபொழுதே இவள்கண் உயிர்ப்பலிகொள்ளுதலால் தன்கொலைத்தொழிலில் மீளாத காலபாசம், இவள்தான் எல்லேசென்று யிருண்ணுங் கூற்றமென்னுங்கருதி எனக்கு முலையை மறைத்துவைத்தாரொன்று கூறிப்போய்த் திரையைச்சேர்ந்தாள்; அக்கலியையுட்கொண்டு தத்தையும் நக்கு இருந்த விடத்தினின்றும் வந்து திரையைச்சேர்ந்தாளென்க.

வீணாபதி பிறளைக்கூறுதல்போலத்தன்னை இவள் என்றாள். பலிகொண்டு என்பதில்வந்த எச்சம் செயவெனெச்சத்திரிபாதலால்பலிகொள்ள எனக் காரணப்பொருளில் நின்றதெனக்கொள்க. (ககக)

நாற்சீர் நாலடித்தரவு கொச்சகம்.

நுண்டுகிலகலல்குனெரிசித்தவெம்முலை
உண்டிவணுசுப்பெனவுரைப்பினல்லது
கண்டறிகிலாவிடைக்காமவல்லியாழ்
கொண்டவர்குழாத்திடைக்கொடியினெல்கினாள்.

இ - ள். நுண் துகில் அகல் அல்குல்—நுண்ணிய ஆடையை யணிந்த அகன்ற அல்குலும், நொசித்த வெம்முலை—பார்ப்போர் மனத்தை வருத்தும் விருப்பந்தருமுலையும், இவள் நுசுப்பு உண்டு என்ன உரைப்பின் அல்லது—இவளுக்கு இடையுண்டென்றுகூறுவதல்லாது, கண்டு அறிகிலாத இடைகாமவல்லி—பிறர் கட்புலனாற் காணலரிய இடையையுடைய கற்பகத்திற்படர்ந்த

கொடிபோன்ற தத்தை, யாழ்கொண்டு—வீணையையெடுத்து, அவர் குழாத்து இடைகொடியின் ஒல்கினாள்—தோழிமார்கூட்டத்தினிடையில் கொடியைப் போல வொதுங்கினின்றனள்.

(ந - ரை) அல்குலு முலையு மிவட்கு இடையுண்டெனக்கூறும் அது ஒழிந்து கட்புலனாகாத இடையையுடைய தத்தை யாழையெடுத்துத் தோழியர்குழாத்திடையே கொடியைப்போல ஒதுங்கினாளென்க

நொசித்த இறந்தகாலப்பெயரெச்சம் நொசி பகுதி　　　　　　　　(கசுஉ)

பளிக்கொளி மணிச்சுவரொழினிபையவே
கிளிச்சொலினினியவாநீக்கக்கிண்கிணி
ஒளிக்குமின்றாடவருயிர்களென்னநொந்
தளித்தவையிரங்கச்சென்றணையினேறினாள்

இ - ள். கிளிசொலின் இனியவர்—கிளியின்சொல்லினுமினியசொல்லினையுடையதோழியர், பளிங்கு ஒளிமணி—ஒளிவாய்ந்த பளிங்குமணியாற் செய்த, சுவர் எழினிபையநீக்க—சுவரைமறைய வீழ்த்ததிரையைமெள்ளநீக்க, கிண்கிணி இன்று ஆடவர் உயிர்கள் ஒளிக்கும்என்னநொந்து—காற்சதங்கை புருடர்களுயிரையெல்லாம் கொள்ளைகொள்ளுமென்றுவருந்தி, அளித்து—அருள்கூர்ந்து, அவைஇரங்கசென்று — அச்சதங்கைகளிரங்கப்போய், அணையின் ஏறினாள்—தத்தை மலர்மெத்தையிலேறினாள்.

(ந - ரை) அவள், கிளிச்சொல்லிற் காட்டி லினிய சொல்லையுடையார் பளிங்காகிய ஒளிமணியாற்செய்த சுவரை மறையவீழ்ந்ததிரையைப் பையவே நீக்காநிற்க, கிண்கிணி இன்று ஆடவருயிரெல்லாம்போமென்றுநொந்து அருள் பண்ணி, அவையிரங்க நடந்துசென்று அணையிலேயேறினாளென்க.

ஆடவர் என்னும் பாற்பொதுப்பெயர் உயிர் ஒளிக்கும் என்னும் குறிப்பால் பெண்பாலையொழித்து ஆண்பாலைக் காட்டியது, ஆண்பாலில் ஆடவன் எனவும் வருதலால். இன் உருபு உயர்வுகுறித்தலில்வந்த எல்லைப்பொருட்டு. பளிங்கு நவமணிகளி னுட்கிடையினொன்றாதலால் அதனைமணியென்றார் ()

உறைகழித்திலங்குவாளுடற்றுங்கண்ணினாள்
மறைஒளிமணிச்சுவரிடையிட்டித்தலை
இறைவளையாழ்தழீஇயிருப்பவித்தலைக்
கறைகெழுவேலினார்கண்ணிநீந்தவே.

இ - ள். உறைகழித்து இலங்குவாள் உடற்றும்கண்ணினாள்—உறையினின்றுங்கழித்துவிளங்கும் வாளோடுபோர்செய்யுங் கண்களையுடையதத்தை, மறை ஒளி மணிசுவர் இடையிட்டு—தன்னைமறைத்தற்குச்சமைந்த ஒளிவாய்ந்த பளிக்குச்சுவரை நடுவேயிட்டு, இறைவளை யாழ்தழீஇ இதலை இருப்ப—கையில்வளைந்த வீணையைத்தழுவி யிப்பாலிருக்க, கறைகெழுவேலினார் கண்ணிநீந்த — பகைவருதிரந்தோய்ந்த வேலினையேந்திய அரசரது மாலைகள் காமத்தீயால்தீந்தன.

(ந - ரை) கண்ணினாள் தன்னைமறைத்தற்குச் சமைந்த பளிக்குச்சுவரை

நடுவேயிட்டு வளைந்தயாழைக் கையாலேதழீஇ உள்ளேயிருப்ப, அவளைக்கண்டு புறத்திருந்தவேலினார்கண்ணி காமத்தீயாற் றீந்தனவென்க.

பளிங்கிற்கு இரண்டுபுறத்தி லிருப்பவரும் தோன்று வாராதலால் இடையிட்டு என்றார். தீந்த அகரச்சாரியை பெறாதுவந்த பலவின்பாற்படர்க்கையிறந்தகாலவினைமுற்று. தீ பகுதி. (கசுச)

சிலைத்தொழிற்சிறுநுதறெய்வப்பாவைபோற்
கலைத்தொழில்படவெழீஇப்பாடினாள்கனிந்
திலைப்பொழில்குரங்கினவீன்றதூண்டளிர
நிலத்திடைப்பறவைமெய்ம்மறந்துவீழ்ந்தவே.

இ - ள். சிலைதொழில் சிறு நுதல் — அம்பேறிட்ட விற்போன்ற சிறிய நெற்றியையுடைய தத்தை, தெய்வம் பாவைபோல—தெய்வத்தாற் சமைந்த கொல்லியம்பாவைபோலவிருந்து, கலைத்தொழில்பட எழீஇபாடினாள்—கலைத்தொழிலாகிய பண்ணல் முதலிய எட்டுமமைய யாழினைவாசித்துப் பாடினள், இலைபொழில்கனிந்து குரங்கின—இலைகளையுடைய சோலை யுருகிவளைந்தன, தூண் தளிர் ஈன்ற—தூண்கள்தளிரையீன்றன, நிலத்து இடை பறவை மெய் மறந்துவீழ்ந்த—நிலவுலகில் கின்னரமிதுனங்கள் சரீரமறந்துவிழுந்தன.

(ந - ரை.) சிறுநுதல்பாவைபோலிருந்து யாழைவாசித்து அதற்கேற்பப் பாடினளாக; பொழில் உருகிவளைந்தன; தூண தளிரையீன்றன; கின்னரமிதுனங்கள் மெய்ம்மறந்து வீழ்ந்தனவென்க.

கலைத்தொழில்களாவன பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ, குறும்போக்கு. பண்ணல் ஆவது பாடநினைத்த பண்ணுக்கு இணை, கிளை, பகை, நட்பானநரம்புகள் பெயருந் தன்மை மாத்திரையறிந்துவீக்குதல். பரிவட்டணை அவ்வீக்கின நரம்பை அகவிரலாலும் புறவிரலாலுங் கரணஞ்செய்து தடவிப்பார்த்தல். ஆராய்தல் ஆரோகண அவரோகணவகையா லிசையைத்தெரிவது. தைவரல் சுருதியேற்றுதல். செலவு ஆளத்தியிலே நிரம்பப்பாடுதல். விளையாட்டு பாடநினைத்த வண்ணத்தில் சந்தத்தைவிடுத்தல். கையூழ் வண்ணத்திற்செய்த பாடலெல்லாம் இன்பமாகப்பாடுதல். குறும்போக்கு குடகச்செலவுந் துள்ளற்செலவும் பாடுதல். (கசுரு)

அறுசீர்நாலடித்தரவு கொச்சகம்.

கருங்கொடிப்புருவமேறாகயனெடுங்கண்ணுமாடா
அருங்கடிமிடறும்விம்மாதணிமணியெயிறுந்தோன்றா
இருங்கடற்பவளச்செவ்வாய்திறந்திவள்பாடினாளோ
நரம்பொடுவீணைநாவினவின்றதோவென்றுநைந்தார்.

இ - ள். கருங்கொடி புருவம் ஏறா—கரிய ஒழுங்காயுள்ள புருவம் நெற்றியிலேறா, கயல்நெடுங் கண்ணும் ஆடா—கயல்போன்ற நெடியகண்களும் இமைகொட்டா, அருங்கடி மிடறும் விம்மாது—அரியவிளக்கம்வாய்ந்த கண்டமும் வீங்காது, அணிமணி எயிறும் தோன்றா—வரிசையாயுள்ள முத்தினையொத்த பற்களுந்தோன்றா, இருங்கடல் பவளம்செவ்வாய்திறந்து இவள்பாடி

ளுன் ஓ—பெரியகடலிற்றோன்றிய பவளம்போன்ற செவந்தவாயைத்திறந்து இவள்பாடினுளோ, வீணைநரம்பு ஒடு—அன்றியாழ்தான் தனக்குரியநரம்போ டு, நாவின்நவின்றது ஓ என்றுரைந்தார்—சாரீரவீணைக்குரியநாவாலும் பாடிய தோவென்று அரசர்முதலாயினோர் வருந்தினர்.

(ந - ரை.) அரசர்முதலாயினோர் புருவமும்; கண்ணுமாடா; மிடறும்வீங் காது; எயிறுந்தோன்ரு; ஆதலான் இவள்வாய்திறந்து பாடினுளோ! அன்றி யாழ்தான் தனக்குரிய நரம்போடே சாரீரவீணைக்குரிய நாவாலும் பாடிற்றே வென்று வருந்தினரென்க.

இது உள்ளாளப்பாட்டு "கண்ணிமையா கண்டந் துடியா கொடிறசை யா—பண்ணளவும் வாய்தோன்ரு பற்றெரியா - வெண்ணிலிவை—கள்ளார் நறுந்தெரியற் கைதவனேகாந்தருவர்—உள்ளாளப்பாடலுணர்." (கசுசு)

நாற்சீர் நாலடித்தரவு கொச்சகம்.

இசைத்திறத்தநங்கனேயனையநீர்மையார்
வசைத்திறமிலாதவர்வான்பொன்யாழெழீஇ
விசைத்தவர்பாடலின்வெருவிப்புள்ளெலாம்
அசிப்பபோன்றிருவிசும்படைந்தவென்பவே

இ - ள். இசைதிறத்து அநங்கனே அனையநீர்மையார்—இசையின்கூறு பாட்டையுடைய மன்மதனையொத்த தன்மையராகிய, வசைதிறம் இல்லாத வர்—குற்றத்தின் பகுப்பில்லாதவர், வான் பொன்யாழ் எழீஇ—பெரியபொன் ஞலமைந்த வீணையைவாசித்து, விசைத்து பாடலின் — உச்சத்தேபாடுத வால், அவர்புள் எல்லாம் வெருவி அசிப்ப போன்று— அவரை (அவசமாய்வி ழுந்த) பறவைகளெல்லாம் அஞ்சிச்சிரிப்பனபோல, இருவிசும்பு அடைந்த— பெரிய ஆகாயத்தைச்சேர்ந்தன.

(ந - ரை.) முன்மெய்ம்மறந்து வீழ்ந்த புள்ளெல்லாம் காமனையொத்த நீரராகிய வசையிலாதோர்யாழைவாசித்துஉச்சத்தேபாடுதலின், அதற்குவெ ருவி அவரைச்சிரிப்பனபோல விசும்பைச்சேர்ந்தனவென்க.

போன்று செயவெனெச்சத்திரிபு. அசிப்ப வடசொல்லடியாகப் பிறந்த வினைமுற்றுப்பெயர் அசி (அவமதிச்சிரிப்பு) பகுதி. (கசுஎ)

மாதர்யாழ்தடவரவந்தமைந்தர்கைக்
கீதத்தான்மீண்டனகேள்விக்கின்னரம்
போதரப்பாடினுள்புகுந்தபோயின
தாதலர்தாரினுர்தாங்கள்பாடவே.

இ - ள். மாதர்யாழ் தடவரவந்த கேள்விக்கின்னரம்—தத்தைவீணைவா சிக்கவந்த அறிவையுடையகின்னரங்கள், மைந்தர்கை கீதத்தால்மீண்டன— மைந்தர்கள்கையிலேலத்திய வீணைவாசினையினுல் திரும்பிப்போயின, போதர பாடினுள் புகுந்த— அவைகள்வரும்படி கண்டத்தாற்பாடினுள் அப்போதுவந் தன, தாது அலர் தாரினுர் தாங்கள் பாடபோயின—மகரந்தத்தோடு மலர்ந்த மாலையினையுடைய மைந்தர்கள்பாட அவைகள்திரும்பிப்போயின.

(ந - ளா.) மாதர் யாழைவாசித்தலாலேவந்த அறிவையுடையகின்னரம் மைந்தர் யாழ்வாசினையினாலே மீண்டுபோயின; அவை உள்ளேவந்துபுகுதும் படி கண்டத்தாற்பாடினாள், அப்பொழுது புகுந்தன; தாரினார்தாம் கண்டத் தாற்பாடமீண்டும் அவைபோயினவென்க. (கசுஅ)

சுரும்பெழுந்திருந்துணுந்தொங்கல்வார்குழல்
அரும்பெறலவட்கிசையரசர்தோற்றபின்
நரம்புறுதெள்விளிநவின்றநான்மறை
வரம்பெறுநெறியவர்மலைதன்மேயினார்.

இ - ள். சுரும்பு எழுந்திருந்து உண்ணும்—வண்டுகள் எழுந்திருந்து தா துண்டேதும், தொங்கல்வார்குழல்—மாலையையணிந்த நீளட கூந்தலையுடைய, அரும்பெறலவட்கு அரசர் இசைதோற்றபின்—பெறுதற்கரிய தத்தைக்கு அர சர்களிசையிற்றோற்றபின்பு, நரம்பு உறு தெள்விளி நவின்ற—நரம்போடு சேர்ந்தபாட்டிற் பயின்ற, நான்மறைவரயபெறு நெறியவர்—நான்குவேதங்க ளுள் வேண்டுவனவற்றைப்பெற்றஅந்தணர்கள், மலைதல்மேயினார்—வாசித்த லைத்தொடங்கினார்.

(ந - ளா) குழலையுடைய பெறுதற்கரியவட்கு அரசரிசையைத் தோற்ற பின்பு, நரம்போடுசேர்ந்த பாட்டிலேபயின்ற அந்தணர்வாசித்தலைப் பொருந்தி னாரென்க.

சுரும்பெறிந்திருந்து என்றும் பாடம். (கசுகூ)

அறுசீர் நாலடித்தரவு கோச்சகம்.

திருமலர்க்கமலததங்கட்டேனினமுரல்வதொப்ப
விரிமலர்க்கோதைபாடவெழால்வகைவீராதோற்றார்
எரிமலர்ப்பவளச்செவ்வாயின்னரம்புளரமைந்தர்
புரிநரம்பிசைகொள்பாடலுடைந்தனாபொன்னனாட்கே.

இ - ள். விரிமலர்கோதை—விரிந்தமலராற்றொடுத்த மாலையையணிந்த தத்தை, திருமலர்கமலத்து அங்கண்—அழகியதாமரைமலரில், தேன் இனம் முரல்வது ஒப்ப — வண்டின்கூட்டங்கள் பாடுந்தன்மையையொப்ப, பாட— கண்டத்தாற்பாட, வீரா எழால்வகை தோற்றார்—அந்தணர்கள் யாழ்வாசித்த லிற்றோற்றார்கள், எரிமலர்பவளம்செவ்வாய் இன் நரம்பு உளர—முருக்கமல ரையும் பவளத்தையுமொத்த செவந்தவாயினையுடைய தத்தை நரம்பினைத் தட்ட, மைந்தர்—அவ்வந்தணர்கள், புரிநரம்பு இசை கொள் பாடல் பொன் அன்னாட்கு உடைந்தனா—அந்நரம்பினிசையைக் கொண்ட கண்டப்பாட லில் அத் தத்தைக்குத்தோற்றனா.

"அந்தணாளர்க் கரசுவரையின்றே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத் தால் அந்தணரை வீரர் என்றார். (கஎ௦)

வாலரக்கெறிந்தகாந்தண்மணியரும்பனையவாகிக்
கோல்பொரச்செவந்தகோலக்குவிவிரன்மடந்தைவீணை
நூல்பொரப்புகுந்தநுண்ணூல்வணிகருந்தொலைந்துமாதோ
கால்பொரக்கரிந்தகாமர்ப்பங்கயப்பழனமொத்தார்.

இ - ள். கோல்பொர—நரம்பைத்தடவுதலால், வால்அரக்குஎறிக்தகாந் தள்மணி அரும்பு அனைய ஆகி—களங்கமில்லாத செவப்பூட்டியகாந்தளினது அழகிய அரும்பினையொத்தனவாகி, செவந்தகோலம் குவிவிரல் மடந்தை—செவந்தபொலிவுவாய்ந்த குவிந்தவிரலையுடைய தத்தைக்கு, வீணைநூல்பொர புகுந்த நுண் நூல் வணிகரும் தொலைந்து — வீணையை இசைநூலோடு பொருந்த வாசிக்கத்தொடங்கிய நுண்ணிய பூணுநூலையுடைய வணிகருந்தோற்று, கால்பொரகரிந்த காமர்பங்கயம் பழனம் ஒத்தார்—சாற்றுமோதக்கருகிய அழகிய தாமரைமலரையுடைய வயலையொத்தனர்.

(ந - ரை) நரம்பைத் தடவுதலாலே யரத்தமூட்டின அரும்பையனையவாகிச் செவந்த விரலையுடைய மடந்தைக்கு யாழை இசைநூலோடே வாசிக்கத் தொடங்கின பூணுநூலையுடைய வணிகருந்தோற்றுக் கரிந்த தாமரைப்பழனத்தையொத்தார் என்க.

பொர என்னும் வினையெச்சமூன்றனுள் நடுவினுள்ளவினையெச்சம் நிகழ்காலத்திலும் மற்றை இரண்டும் இறந்தகாலத்திலும்வந்தன. பொர பொரு பகுதி, உகரக்கேடு சந்தி, அ எச்சவிகுதி. (௧௭௧)

தேனுயாமகரவீணைத்தீஞ்சுவையிவளைவெல்வான்
வானுயாமதுகைவாட்டும்வாரிலையனங்கனாகும்
ஊனுயர்நுதிகொள்வேலீரொழிமினீங்கில்லையென்றான்
கானுயரலங்கன்மாலைக்கட்டியங்காரனன்றே.

இ - ள். கான்உயர் அலங்கல்மாலைகட்டியங்காரன்—வாசனையால்மிக்க மாலையையணிந்த கட்டியங்காரனென்பவன், ஊன்உயர் நுதிகொள்வேலீர்—பகைவர்தசைமிக்க முனைபொருந்தியவேலையுடையீர், தேன்உயர்மகர வீணை தீம்சுவை—இனிமைமிக்க மகரவீணையின் இனிமையால், இவளைவெல்வான்—இவளைவெல்ல, வான்உயாமதுகைவாட்டும் வார்சிலை அனங்கன் ஆகும்—விண்ணுலகிலுள்ளதேவரது மிக்கவலியைக்கெடுக்கும்நீண்டவில்லினையேந்திய மன்மதனாகும். ஈங்குஇல்லை ஒழிமின்என்றான்—(ஆதலால்) இவ்வுலகிலில்லை இனிவாசினையை யொழிவதாகவென்றுகூறினான்.

(ந - ரை.) கட்டியங்காரன் இவளைத்தசைமிக்க முனைகொண்டவேலினீர், மகரயாழின் இனிமையை வெல்வான் வானிலுள்ளாரது அறிவைக்கெடுக்கும் காமனுயிருக்கும், இவ்வுலகினில்லையல்லவோ, ஆதலினிவ் யாழ்வாசினையொழிவதாக வென்றானென்க. (௧௭௨)

மறுமுயற்கிவர்ந்தவேகமாசுணமடையப்பட்ட
நிறைமதிபோன்றுமன்னனொளிகுறைந்துருகினைய
அறுபகல்கழிந்தபின்றையந்நகர்க்காதிநாய்கன்
சிறுவனோர்சிங்கவேற்றைச்சீவகசாமியென்பாள்.

இ - ள். முயற்கு மறுஇவர்ந்த நிறைமதி—தன்னிடத்துள்ள முயலைக் காத்தற்பொருட்டு மறுப்பரந்த ஒளிநிறைந்தசந்திரன், அடையப்பட்டமாசுணவேகம் போன்று—தன்னையடையப்பட்ட இராகுவின்வேகத்தால் ஒளிகு

றைதலையொத்து, மன்னர்ஒளிகுறைந்து உருகினைய—அரசர்களொளிகுறைந்துமனமுருகிவருந்தாநிற்க, அறுபகல்கழிந்தபின்றை—ஆறுதினங்கழிந்தபின்பு, அகனர்க்கு ஆதிநாய்கன்சிறுவன்—அந்தஇராசமாபுரத்திற்கு முதல்வனாகிய வணிகனுயுள்ள கந்துக்கடனது புத்திரனும், ஓரசிங்க ஏற்றைசீவகசாமிஎன்பான்—ஒருசிம்மேற்றையொத்த சீவகசாமியென்னும் பெயரையுடையவனுமாயுள்ளவன்.

(ந - ரை.) முயலைக்காத்தற் பொருட்டாகத் தன்னிடத்தேமறுப்பரந்த நிறைமதிதன்னை யடைப்பட்ட மாசுணத்தினது வேகத்தாலேயொளி குறையுமாறுபோன்று மன்னர் ஒளிகுறைந்துநையாநிற்க ஆறுநாள்சென்றபின்பு, நாய்கன்சிறுவன் ஏற்றைச்சீவகசாமியென்பான்.

இதுவும் அடியில்வருஞ் செய்யுளும் ஒருதொடர். "ஏறும்ஏற்றையும்" என்றனல் ஏற்றை ஏறு. ஏற்றையையொத்த எனவிரிதலால் வருமொழிமுதல் வல்லெழுத்துமிக்கது. (கஎங)

தம்பியுந்தோழன் மாருந்தானுமற்றெண்ணிச்சூழ்ந்து
வெம்பியவீணைப்போருட்செல்குவம்யாமுமின்னே
தம்பறப்புத்திசேனசொல்லிதுகுரவற்கென்னக்
கந்துகற்கவனுஞ்சொன்னனவனிதுவிளம்பினனே.

இ - ள். தானும்தம்பியும் தோழன்மாரும—அச்சீவகனும் தம்பியுந்தோழன் மாருமாகவிருந்து, சூழ்ந்துவெம்பிய வீணைபோர்உள்—அரசர்கள்சூழ்ந்து தம்முள் மாறுபட்ட வீணைப்போரில், யாமும்இன்னே செல்குவம்எண்ணி-யாமுமிப்பொழுதே யதநிரள் குலைவதற்குமுன்னே செல்வோமென்றெண்ணி, புத்திசேனதம்பு அறஇதுகுரவற்கு சொல்என்ன—புத்திசேனனே துகளறவிக் காரியத்தைத் தந்தைக்குச் சொல்லாயென்றுகூற, கந்துகற்கு அவனும்சொன்னன்— கந்துகனுக்கு அந்தப்புத்திசேனனுஞ்சென்று சொன்னன், அவன்இதுவிளம்பினன்—அந்தக்கந்துக் கடனிதனைக்கூறுகின்றான்.

(ந - ரை.) அவன்றானுந் தம்பியுநதோழன் மாருமாகவிருந்து அரசர்முதலாயினர் சூழ்ந்துமாறுபட்ட யாழ்ப்போரிலே இத்திரள்குலைவதற்கு முன்னேயாமுஞ் செல்வேமென்றெண்ணி இக்காரியத்தைப்புத்திசேனனே, நீசென்றுகன்னியிடத்து வேட்கையாற் செல்கின்றானல்லன்; கல்விதோற்றுவித்தற்குச் செல்கின்றானென்று கொள்ளும்படி குரவற்குக் கூறென்றுகூற, கந்துகனுக்குப்புத்தி சேனனுங்கூறினனாக, கந்துகன் இவ்வார்த்தையைக் கூறினனாகவென்க.

தம்பிமார் நபுலன், விபுலன். தோழன்மார் சீதத்தன், புத்திசேனன், பதுமுகன், தேவதத்தன். இவரொழிந்தஅகப்பரிவாரமகளிர் புத்திரர் ஐஞ்ஞூற்றுவர். (கஎச)

ஐயனுக்கமைந்தகீராரறுபத்துநால்வரம்பொன்
வையகத்தமிர்தமன்னார்வாக்கமைபாவையொப்பார்
எய்தியவிளமைமிக்காரியைந்தனரொன்றுபின்னும்
மையமைசிலையினற்குக்கந்துகனிதுவுங்கூறும்.

இ - ள். அம்பொன்வையகத்து அமிர்தம் அன்னார்—(இன்பத்தால்) அழகிய பொன்னுலகத்திலுள்ள அமிர்தத்தையொத்தவராய், வார்க்கு அமை பாவைஒப்பார்—(நீங்கலாகாமையால்)சொல்லமைந்தகொல்லியம்பாவையை யொத்தவராய், எய்திய இளமைமிக்கார் — பொருந்திய இளமைப் பருவமு டையவராய், ஐயனுக்கு அமைந்தநீரார் அறுபத்துநால்வர் இயைந்தனர் என்று—சீவகனுக்கு அமைந்ததன்மையையுடையவ ரறுபத்துநால்வர்முன்பேயி யைந்தனர் (அதனாற்போதற்குக் குறையில்லையென்று)பின்னும் கந்துகன்இது வும்கூறும்—மீளவுங்கந்துகன் இதுவுஞ்சொல்லுகின்றான்.

(ந - ரை.) இன்பத்தால் அமுதன்னாராய் நீங்கலாகாமையிற் கொல்லி யம்பாவையன்னாராய் மூப்பிலாதாரா யமைந்த நீராரறுபத்துநால்வர் ஐய னுக்கு முன்னேயியைந்தார் ஆதலால் யாழ்வாசிக்கச் சேறற்குக்குறையில்லை யென்று விளம்பினனென்க.

அறுபத்து நால்வர் என்றது அறுபத்துநான்குகலைகளை. கையமை சிலையி னாற்கு அடியில்வருஞ் செய்யுளோடு முடிதலால் இதுவும் பின்வருஞ்செய்யு ளும் ஒருதொடர். (௧௭௫)

மறைவல்லாற்குரைக்கும்போழ்திற்கோயிலுணின்றுமாலைப்
பிறைவெல்லுநுதலினாளோர்பெண்கொடிவந்துகூந்தல்
உறைசெலநீக்கிப்பைந்தாளொண்மணிக்குவளைநீட்ட
நறைவெல்லுநாகமாலைநோக்கொடுபூக்கொண்டானே.

இ - ள். கை அமை சிலையினாற்கு மறைவல்லாற்கு உரைக்கும் போழ் தில்—கையிலமைந்த வில்லினையுடைய சீவகனுக்குச் சிறிது குறையுண்டெ ன்று புத்திசேனனுக்குச் சொல்லுங்காலத்தில், மாலைபிறைவெல்லு நுதலினா ளோர் பெண் கொடிவந்து—மாலைப்பொழுதில் தோன்றிய இளஞ்சந்திரனை வென்ற நெற்றியை யுடைய ஒருபெண்கொடி வந்து, கூந்தல் உறைசெல நீக்கி—கூந்தலாகிய உறையை யகலநீக்கி, பைந்தாள் ஒள்மணி குவளைநீட்ட- பசிய தண்டினையுடைநீலமணிபோன்ற குவளையைநீட்ட, நறைவெல்லும்நா கமாலை நோக்கு ஒடு—வாசத்தால் பிறரைவென்ற நாகமாலையின்குறிப்பால் (ஒருகாரியமுண்டென்றுகருதி) பூக்கொண்டான் — (கூந்தலில்வைத்தாளெ ன்றிகழாமல்) அம்மலரைக்கொண்டான்.

(ந - ரை.) விளம்பிப் பின்னுங்கந்துகன் சிலையினானுக்கு ஆண்டுச்சேறற் கு உலகங்கூறுமிகுதியால் சிறிதுகுறையுண்டென்றுமறைவல்லாற்குக்கூறுகி ன்றகாலத்தே கோயிலினின்றும் ஒருபெண்கொடிவந்து கூந்தலாகிய வுறை யை யகலநீக்கித் தாளினையுடைய மணிபோலுங்குவளையை நீட்ட, அதனைம யிரிலே வைத்த பூவென்றிகழாதே இவளைவரவிட்ட நாகமாலைகுறிப்பாலே ஒ ருகாரியமுண்டென்றுகருதிப் பூவைக்கைக் கொண்டானென்க.

ஒடு உருபு ஏதுப்பொருளில்வந்தது. நாகமாலைசச்சந்தன் அகப்பரிவா ரப்பெண்களிலொருத்தி. (௧௭௬)

நல்லவனேக்காய்கண்டேர்ந்துபூங்குவளைப்போதின்
அல்லியுட்கிடந்தவோலைதாளதுசலாகையாதல்

சொல்லுமென்றுய்ந்துகொண்டுதுகிலிகைக்கணக்குநோக்கி
வல்லிதிற்சலாகைசுற்றியோலையைவாசிக்கின்றான்.

இ - ள். நாய்கன்நல்லவள் நோக்கம்தேர்ந்து—கந்துக்கடன் நாகமாலையின்குறிப்பறிந்து, பூங்குவளைபோதின் தாள்அல்லிஉள்கிடந்த ஓலை—பூங்குவளைமலரினது தண்டேதனது அகவிதழுட்கிடந்த வோலையை, அதுசலாகை ஆதல்சொல்லும்என்று—அத்தாளேவாசித்தற்குச் சலாகை யாதலைச் சொல்லாநின்றதென்று, ஆய்ந்துகொண்டு— முன்புதெரிந்துகொண்டு, துகிலிகைகணக்குநோக்கி—எழுதுகோலின் கணக்காகிய எழுத்தைப்பார்த்து, வல்லிதின்சலாகைசுற்றி— விரைந்துஅத்தாளாகிய சலாகையினுல் வரிகள்குறைபடாமல்சுற்றி, ஓலையைவாசிகின்றான்—ஓலையைவாசிக்குங் கந்துக்கடன்.

(ந - ரை) அப்பூவைவாங்கின நாய்கன்நாகமாலை குறிப்பைவிசாரித்துப் பின்பு குவளைப்போதினது தாள்தானே தனதல்லியுட்கிடந்த ஓலையைச்சுற்றிவாசித்தற்குச் சலாகையாதலைச்சொல்லா நின்றது என்றுராய்ந்துகொண்டு துகிலிகைக் கணக்காலெழுதின வெழுத்தைப்பாாத்துத் தாளாகிய சலாகையினுலே வரியேற்றிழிவுபடாதபடி சுற்றியோலையை வாசிக்கின்றவன்.

சலாகைகம்பி துகிலிகை எழுதுகோல். இதுமுதல் மூன்றுசெய்யுளும்ஒருதொடர் (கஎஎ)

நம்பனைநகரினீக்கிச்சேமத்தால்வைக்கநியுட்
செம்பொன்போற்பெரிதஞ்சேந்துசெருத்திடலுற்றுநின்றான்
வெம்பினன்காரியுண்டிக்கடவுளிற்கனன்றுவேந்தன்
இம்பரின்றெனக்குச்சொன்னனிதுபட்டதடிகளென்றாள்.

இ - ள். வேந்தன்—கட்டியங்காரன், தீஉள் செம்பொன்போல் பெரிதும்சேந்து வெம்பினன்—தீயில்வைத்துருககிய செம்பொன்னைப்போல மிகவுங்கண்கள் செவந்துகொதித்தான், காரிஉண்டிகடவுளில்கனன்று—(கொதித்து) விஷத்தையுணவாகவுடைய உருத்திரமூர்த்தியைப் போலக்கொதித்து, செருத்திடலுற்றுநின்றான்— கொல்லச்சமைந்துநின்றான், இம்பர்இன்றுஎனக்குசொன்னன்— இங்கிலவுலகிலிப்பொழுது எனக்குச்சொன்னன், இதுபட்டது— இதுதான்நிகழ்ந்தசெய்தி, நம்பனைநகரின்நீக்கி சேமத்தால்வைக்க—(ஆதலால்) சீவகனைநகரினின்றும் போக்கி யொருகாவலமைந்த இடத்தில்வைக்கவென்றுவாசித்தான்.

அடிகள் என்றாள் என்றதனைப்பின்வரும் செய்யுளோடுமுடிக்க. சேமத்தால்உருபுமயக்கம் (கஎஅ)

ஓலையையவட்குநீட்டியொண்மணிக்குழையுமுத்தும்
மாலையும்படுசொலொற்றிவம்மெனமறையநல்கி
வேலைநெய்பெய்தகிங்கள்விரவியபெயரினுற்கு
மேலைநாட்பட்டதொன்றுவிளம்புவல்கேளிதென்றான்.

இ - ள். மேலைநாள்பட்டது ஒன்றுவிளம்புவல் அடிகள்என்றாள்—(வாசித்துஅவனைநோக்க) முன்னளில் நடந்தசெயல் ஒன்றுள்ளது அதனைச்சொல்லுகின்றேன் சுவாமிகளே கேளுமென்றுகூறினுள், அவட்குஓலையைநீட்டி-

அவளுக்குக்கொண்டுவந்த ஓலையைக்கொடுத்து, படுசொல் ஒற்றிவம் மென்ன— அங்குநிகழுஞ்சொல்லைமறைந்து நின்றறிந்துவாவென்று, ஒள்மணிகுழையும் முத்தும்மாலையும் மறையநல்கி—ஒள்ளியஇரத்தினமிழைத்த குண்டலத்தையும் முத்துமாலையையும் பொன்னரிமாலையையும மறையநின்றுகொடுத்து, வேலைநெய்பெய்ததிங்கள்விரவியபெயரினுற்கு—கடல்போலநெய்சொரிந்து ஓமம்பண்ணின புத்திசேனனைநோக்கி, இதுகேள்என்றான் — இவள்கூறுமிச்செய்தியைக்கேளென்று கந்துகன்கூறினான்.

திங்கள்விரவியபெயரினுன், வேங்கைமரத்தைக்குறித்தற்கு "தீத்தீண்டுகையார்" என்றதுபோலப் புத்திசேனனைக்குறித்தற்குக் குறிப்பால்வந்தது. இவன்அந்தணன் ஆதல்வேண்டும் அதனால்வேலைநெய்பெய்த என்றார். விளம்புவல்தன்மை யொருமையெதிர்காலவினைமுற்று. விளம்புபகுதி, வகரமெய்இடைநிலை, அல்தன்மை யொருமைவிகுதி. கு உருபுமயக்கம். அடிகள், அண்மைவிளி. வம்மென வாபகுதிமுதல் குறுகல்விகாரம், மகரமெய்விரித்தல், மகரமெய்சந்தி, என என்என்னும் இடைச்சொல்லடியாகப்பிறந்தவினையெச்சம். (கஎகூ)

> கடியரங்கணிந்துமூதூர்க்கடல்கிளர்ந்தனையதொப்ப
> நடையறிபுலவரீண்டிநாடகநயந்துகாணபான்
> குடையுடையவனேடெண்ணிச்சீவகற்கொணர்மினென்ன
> தொடையல்சூழ்வேலினுலுந்தோழருங்காணச்சென்றார்.

இ - ள். மூதூஊர்நடைஅறிபுலவா—தொன்றுதொட்டுள்ள இராசமாபுரத்திலுள்ள இசையிலக்கணத்தினையுணர்ந்த புலவர்கள், கடல்கிளாந்தால் அனையதுஒப்பாண்டி--கடல்புடைபெயர்ந்தாலொப்பத்தொக்குநெருங்கி,நாடகம்நயந்துகாண்பான்--நாடகத்தைவிருமபிக்காணுதற்கு, கடி அரங்குஅணிந்து-விளக்கமமைந்த நாடகசாலையை யலங்கரித்து, குடை உடையவனேடெண்ணி—வெண்கொற்றக்குடையையுடைய கட்டியங்காரனே டெண்ணுதலால், சீவகன்கொணர்மின்என்ன—சீவகனைக்கொண்டுவாருங்களென்றுகூற, தொடையல்சூழ்வேலினுனும் தோழரும காணசென்றா — மாலைசூழ்ந்த வேலையேந்திய சீவகனும்தோழரும்காணப்போயினர் (என்றுஓலைகொண்டுவந்தவள் புத்திசேனனுக்குக்கூறினள்.)

(ந - ரை.) மூதூரில் நடையறிபுலவர்கடல் கிளர்ந்தனையதொப்ப ஈண்டி நாடகங்காண்டற்குஅரங்கையணிந்து அரசனேடெண்ணுதலாலே சீவகற்கொணர்மினென்ன, வேலினுனுந்தோழருங் காணச்சென்றாரொன்று ஓலைகொண்டுவந்தவள் புத்திசேனனுக்குச்செய்தி கூறுகின்றாளென்க.

விளக்கம்என்றது ஏழுகோலகலத்தினையும், எண்கோல்நீளத்தினையும், ஒருகோல்குறட்டுயரத்தினையும் வாய்தலிரண்டினையும் அரங்குடைத்தாதலை. அணிந்துஎன்றதுபார்ப்பனப்பூதமுதலிய நால்வகைப் பூதங்களையுஞ்செய்திருந்தலை. நடையறிபுலவர்என்றது இயலாசிரியன், ஆடலாசிரியன், யாழாசிரியன், இசையாசிரியன், குழலோன், தண்ணுமைமுதல்வன் முதலாயினோர். நாடகம்என்றதுசாந்திக்கூத்து, விநோதக்கூத்து என்னுமிருவகைக்கூத்தின்

விகற்பமாகியசொக்கம், மெய், அவிநயம், நாடகம் என்னுநான்கனுள்கதை தழுவிவருங்கூத்தினை. (கஅ०)

நிலமறிந்தணிகவையன்சீவகநெறியினென்ன
நலநுதற்பட்டங்கட்டிநகைமுடிக்கோதைசூட்டி
அலர்முலைக்குருதிச்சாந்துமாரமும்பூணுஞ்சேர்த்திக்
குலவியகுருதிப்பட்டிற்கலைநலங்கொளுத்தியிட்டான்.

இ-ள். ஐயன்சீவகன்நெறியின்—ஐயனாகிய சீவகன்முறைப்படி, நிலம் அறிந்து அணிக என்ன—இடமறிந்த லங்கரிக்கக்கடவாயென்று புலவர்கூற, நல்லநுதல் பட்டம்கட்டி—நல்லநெற்றியிற் பட்டத்தைக்கட்டி, நகைமுடி கோதைசூட்டி—விளங்குந்தலையில் மாலையைச்சூட்டி, அலர்முலை—அடிபரந்தமுலையில், குருதிசாந்தும் ஆரமும்பூணும்சேர்த்தி—குங்குமக்குழம்பையுமுத்தாரத்தையு மாபரணத்தையும்பூட்டி குலவியகுருதிபட்டில்—விளங்காநின்றசெம்பட்டின்மேல், கலைநலம் கொளுத்தியிட்டான்—மேகலையின் பொலிவைப்பொருத்தியிட்டான்.

(ந - ரை.) நடையறிபுலவர் ஐயனாகியசீவகன், நூனெறியால் அணிவாயாகவெனக்கூற; அவனுங்கட்டிச்சூட்டிச் செம்பட்டோடே கலையினலத்தைப் பொருத்தியிட்டா னென்க.

வளர்கின்றமுலையெனவே பன்னிரண்டாண்டுடையாள் என்பதுபோதரும். கொளுத்திகொள்ளச்செய்து என்னும்பொருள்மேல்நிற்றலால் பிறவினைவினையெச்சம் கொளுத்துபிறவினைப்பகுதி. (சஅக)

திருவிலேசொரிந்துமின்னுங்குண்டலஞ்செம்பொன்னோலை
உருவுகொண்மதியமன்னவொளிமுகஞ்சுடரவாக்கிப்
பரியகஞ்சிலம்புசெம்பொற்கிண்கிணிபாதஞ்சேர்த்தி
அரிவையையரம்பைநாணவணிந்தனனநங்கனன்னான்.

இ - ள். அநங்கன் அன்னான்—மன்மதனையொத்த சீவகன், திருவிலை சொரிந்து மின்னும்குண்டலம் செம்பொன்ஓலை— அழகியபிரகாசத்தையே வீசிவிளங்காநின்ற குண்டலத்தையும் செவந்தபொன்னாற்செய்த ஓலையையும், உருவுகொள்மதியம்அன்ன ஒளிமுகம்சுடர ஆக்கி—நிறைந்தசந்திரனையொத்த வொளிவாய்ந்த முகம்விளங்கும்படியணிவித்து, பரியகம்சிலம்புசெம்பொன் கிண்கிணிபாதம்சேர்த்தி—காற்சரியையுஞ் சிலம்பையும்பொன்னாற்செய்த சதங்கையையும் காலிலணிவித்து, அரம்பைநாண அரிவையை அணிந்தனன்—அரம்பைநாணும்படிஅகங்கமாலையையலங்கரித்தான்.

(ந - ரை.) அநங்கனன் னான்குண்டலத்தையு மேகலையையும் நிறைமதிபோலு முகம்விளங்கும்படியாக்கி, காற்சரிமுதலியவற்றைப் பாதத்தேசேர்த்தி, அரம்பைநாண அரிவையையணிந்தானென்க.

காற்சரியாவது பலமுத்துவடங்களைப் பின்னலோடு பெருவிரல்மோதிரத்திற் பூட்டிச்சிலம்பின் புறத்தில் சூழப்பூணுவது "பொன்னிதழ்பொதிந்த பன்னிறமணிவடம்—பின்னியதொடரிற் பெருவிரன்மோதிரம்— தன்னொடு தொடக்கித் தமனியச்சிலம்பின்—புறவாய்சூழ்ந்து புணரவைப்பதுவே. ()

தோற்பொலிமுழவும்யாழுந்தொளைபயில்குழலுமேங்கக்
காற்கொசிகொம்புபோலப்போந்துகைத்தலங்கள்காட்டி
மேற்படவெருவிநோக்கித்தானையைவிட்டிட்டொல்கித்
தோற்றினாண்முகஞ்செய்கோலந்துளக்கினாண்மனத்தையெல்லாம்.

இ - ள். தோல்பொலிமுழவும் — தோற்கருவியாய் விளங்கும் மத்தளமும், யாழும் தொளைபயில் குழலும் ஏங்க—வீணையும் தொளையமைந்த குழலும் ஒலிக்க, காற்கு ஒசி கொம்புபோல — காற்றிற்குத் துவளுங் கொம்புபோல, போந்து—வலக்கால் முன்மிதித்தேறி வலத்தூணைச்சேர்ந்து, தானையைவிட்டிட்டு—கரந்து வரலெழினியைவிட்டு, கைத்தலங்கள் காட்டி—கமலவர்த்தனைகாட்டி, மேற்பட வெருவிநோக்கி—மேலே யெழ வெருவிப்பார்த்து, ஒல்கி—துவண்டு, முகம் செய்கோலம் தோற்றினாள்—கூத்திற்குமுகமாகிய தோற்றத்தைப் புலப்படுத்தி, மனத்தை எல்லாம் துளக்கினாள்—பார்ப்பவர்மனத்தையெல்லாம் நிலைகலங்கச்செய்தாள்.

(ந - ரை.) முழவு முதலியன வேங்க கொம்புபோலப் போந்து விட்டிட்டுக்காட்டி நோக்கி யொல்கிக்கோலத்தே தோற்றினாள்; அப்பொழுதே பார்ப்பவர் மனத்தை யெல்லாந் துளக்கினாளென்க.

இவை மூன்றுங்கூடியிசைத்தல் ஆமந்திரிகையாதலால் முறையேகூறினார். திரை ஒருமுகவெழினி, பொருமுகவெழினி, கரந்துவரலெழினி யெனமூவகைப்படும். ஒருமுகவெழினி இராசதானியிலிடுவது. பொருமுகவெழினி அரங்கிலிடுவது கரந்துவரலெழினி கோலமறைத்து வருமிடத்திலிடுவது. மேற்படவெருவிநோக்கல் தெய்வத்தைநோக்குதலின்மேலே யெழவெருவிப்பார்த்தல். (கஅரு)

தெண்மட்டுத்துவலைமாலைதேனொடுதுளிப்பத்திங்கள்
உண்ணட்டகுவளைபோலுமுருவக்கண்வெருவியாட
விண்விட்டுக்கடவுள்வீழநுடங்கினபுருவநெஞ்சம்
பண்விட்டதிருந்துகாணும்பன்மணிகழலினார்க்கே.

இ - ள். மாலைதெள்மட்டுதுவலைதேனொடுதுளிப்ப—(ஆடும்விசையால்) மலர்மாலைதெள்ளிய மதுத்துளியைவண்டுகளோடுதுளிக்க, திங்கள்உள்நட்ட குவளைபோலும் உருவக்கண்—சந்திரனோடு நட்புச்செய்தகுவளைபோலு முருவமைந்தகண்கள், வெருவி ஆட — நடனத்துக்கேற்பப் பிறழ்ந்தாடவும், கடவுள்விண்விட்டு வீழ—தேவர்கள்பொன்னுலகைவிட்டு மண்ணுலகில் வரவிரும்பவும், புருவம்நுடங்கின—புருவமசைந்தன, இருந்துகாணும் பல்மணிகழலினார்க்கு—இருந்துபார்க்கும் பலஇரத்தினங்களையிழைத்த வீரகண்டையையுடைய அரசர்களுக்கு, நெஞ்சம்பண்விட்டது—மனம்நிலைகுலைந்தது.

(ந - ரை.) துளிப்பக்கண்கடிப்பிற்கேற்பப் பிறழ்ந்தாட அதற்கேற்பப்புருவமசைந்தன; அப்பொழுது இருந்துகாண்பார்க்கு நெஞ்சுநிலைகுலைந்ததென்க.

திங்கள்முகத்தை இலக்கணையாகக் காட்டலால் உருவகவுயர்வுநவிற்சியணி. உள்உருபுமயக்கம். (கஅசு)

செங்கதிர்ச்சிலம்புசெம்பொற்கிண்கிணிசிலம்பக்கோதை
பொங்கப்பொன்னோலைவட்டம்பொழிந்துமின்னுகுப்பப்போர்த்த
குங்குமச்சாந்துவேய்ந்துகுண்டலந்திருவில்வீச
அங்கதிராரமின்னவரிவைகூத்தாடுகின்றாள்.

இ - ள். செங்கதிர்சிலம்பு செம்பொன்கிண்கிணிசிலம்ப—செவந்தகிரணம்வாய்ந்த சிலம்பும்செவந்த பொன்னாற்செய்த சதங்கையு மொலிப்ப, கோதைபொங்க — மாலைவிளங்க, பொன்ஓலைவட்டம் மின்பொழிந்து உகுப்ப—பொன்னாற்செய்த ஓலைவட்டமாக ஒளியைவீசிச்சிந்த, குண்டலம்போர்த்த குங்குமச்சாந்துவேய்ந்து திருவில்வீச — குண்டலமானது மேனியை மறைத்தகுங்குமக்குழம்பைத் தீண்டியழகிய வொளியைவீச, அம்கதிர்ஆரம் மின்ன—அழகியஒளிவாய்ந்த முத்துமாலைவிளங்க, அரிவைகூத்தாடுகின்றாள்—அநங்கமாலைகூத்தாடாநின்றாள்.

(ந - ரை.) அரிவைசிலம்பு முதலியன சிலம்ப, கோதை விசையாலெழுந்துநிற்ப, ஓலைமின்னைவட்டமாகசசொரிந்துசிந்தக், குண்டலமேனியைமறைத்தசாந்தைத் தீண்டிவீச, ஆரமின்ன, ஆடாநின்றாள்.

சிலம்ப, பொங்க, உகுப்ப, வீச, மின்ன எனவேறு பலவடுக்கிய நிகழ்காலவினையெச்சங்கள் தனித்தனி ஆடுகின்றாள் என்னும்வினைமுற்றின் முதனிலையைக்கொண்டன. (கஅரு)

மருங்குலுமொன்றுதாய்க்குமொருமகளாதலோர்ந்தும
இரும்பினலியன்றநெஞ்சத்திவர்களோவிருந்துகாண்க
அரங்கின்மேலிவளைத்தந்ததாய்கொலோகயத்தியன்றேற்
சுரும்புசூழ்கண்ணிசூட்டியவாகொலோகயவாசொல்லீர்.

இ - ள். மருங்குலும்ஒன்று—இடையுமொன்றேவேறில்லை, தாய்க்கும் ஒருமகள்—(இதுமுரிந்தால்)தாய்க்குமொருபிள்ளையேவேறில்லை, ஆதல்ஓர்ந்தும்—ஆதலையறிந்திருந்தும், இரும்பினல்இயன்ற நெஞ்சத்துஇவர்கள் ஓ இருந்துகாண்க—(அருளில்லாது) இரும்பாற்செய்தாலொத்த மனத்தையுடையஇக்கொடியர்களோ விருந்துகாணக்கடவா, அரங்கின்மேல் இவளைதந்ததாய் கொலோகயத்தி— நாடகசாலையிலாடவிட்ட இவளைப்பெற்ற தாய்கொடியளோ, அன்றேல்—அன்றாயில், சுரும்பு சூழ்கண்ணி சூட்டியவர் கயவர் கொலோ—வண்டுகள்சூழ்ந்த மாலைசூட்டினவர்கொடியவரோ, சொல்லீர்—இருவரினுங் கொடியவரைச் சொல்லிக்காணீரொன்பாரும்.

(ந - ரை.) இடையுமொன்றே வேறுசேம விடையுமில்லை; இதுமுரிந்தாற்றாய்க்கு மொருபிள்ளையுமே வேறில்லை, அதனையறிந்தும் அருளின்றாக இரும்பாற்செய்த நெஞ்சினையுடைய இக்கொடியோரிருந்துகாண்க; இவர்இதுமுடிவுபோகக்காண்டலறிந்தும் அரங்கின்மேல் இவளையாடவிட்ட தாய் கொடியளோ? அன்றாயிற் கண்ணி சூட்டியவர் கொடியரோ? இருவரினுங் கொடியவரைக் கூறிக்காணீரொன்பாருமென்க.

ஓஇரக்கக்குறிப்பு. (கஅகு)

## இதுவும் அது

அகிலார்புகையலாற்சாந்தணியாள்பூச்சாரச்செல்லாள்செல்லிற்
பகலேபகைவளர்த்தபாவைசிறுநுசுப்பொன்றுண்டேபாவம்
இகலேந்திளமுலைமேற்சாந்தெழுதிமுத்தணிந்துபூவுஞ்சூட்ட
முகிலேந்துமின்மருங்குன்மொய்குழற்றாயிதுகண்டுமுள்ளேபாவம்.

இ-ள். அகில் ஆர் புகை அல்லால் சாந்து அணியாள்—இவள் அகிற் கட்டையில் நிறைந்தபுகையன்றிச் சாந்தினையணியாள், பூசாரச் செல்லாள்—பூவினருகுஞ்செல்லாள், செல்லில்—சென்றாளாகுல், பகைபகலேவளர்த்த—முலையாகியபகையைவெளியேவளர்த்த, சிறுநுசுப்பு ஒன்று பாவை உண்டு ஏ—சிறிய இடைபாவைக்கு இல்லை, பாவம்—இஃதொருபாவம், முகில் ஏந்துமின் மருங்குல் மொய்குழல்தாய்—மேகத்திறபொருந்திய மின்னலையொத்த இடையையும் நெருங்கியகூந்தலையுமுடைய இவள்தாய், (அவள்மென்மைத்தன்மையைத்தெரிந்தும்) இகல் ஏந்து இளமுலைமேல்—இடையொடு மாறுபட்ட இவளது இளமைவாய்ந்த தனத்தின்மேல், சாந்து எழுதி முத்து அணிந்து பூவும் சூட்ட—சந்தனக்குழம்பெழுதி முத்தமாலையையணிந்து பூவினையுஞ் சூட்ட, இதுகண்டும் உளள்—இதனைக்கண்டுமுயிருடனேயிருந்தாள், பாவம் — இஃதொருபாவம் (இருந்தபடியென்ன )

(ந - ரை) இவள் அகிறபுகையணிதலின்றிச் சந்தனமுமணியாள், பூவினருகுஞ்செல்லாள், சென்றாளாயின் அதனைத்தாங்குதற்கு முலையாகிய பகையை வெளியாகச்சுமந்துவளர்த்த நுசுப்பென்பதொன்று பாவைக்கில்லை; இத்தன்மையறிந்தும் இவள் தாயானவள் இடையுடனே மாறுபடுதலை மேற்கொண்ட முலைமேலேயெழுதி அணிந்துசூட்ட இதனைக்கண்டும் உயிருடனேயிருந்தாள்; என்னே! ஈதொருபாவமிருந்தபடி என்னென்பாரும் என்க.

ஏகாரம் எதிர்மறைப்பொருட்டு. (கஅஎ)

தேந்தாமஞ்செம்பவளத்தாமஞ்செம்பொனெரிதாமமின்னுத்திரடாமங்கள்
தாந்தாமெனநதாழ்ந்தபொன்மேகலைத்தாமவரங்கின்மேற்றாதார்முல்லைப்
பூந்தாமக்கொம்பாடக்கண்டாரெல்லாம்புனமயிலேயன்னமேபொன்னங்கொம்
ஆந்தாமரைமகளேயல்லளாயினமரர்மகளென்பாருமாயினரோ. [பே

இ-ள். தேம் தாமம்தாம் செம்பவளத்தாமம் தாம் செம்பொன் எரிதாமம்தாம்—தேன்கமழு மாலைதாம்செவந்தபவளமாலைதாம் செவந்தபொன்னாலெரிந்துசெய்தமாலைதாம், மின்னுதிரள்தாமங்கள் தாம்—மின்னுத்திரளையுடைய மணிமாலைதாம், என்ன தாழ்ந்த—என்று கண்டோர்கூறும்படி அவ்விடத்திற் பொருந்திய, பொன் மேகலை தாமம் — பொன்னாற்சமைந்த மேகலையையுடைய மாலையென்று — அரங்கின்மேல் (தோரியமகளிர்க்குத் தன்னையுணர்த்தி) அவர்களை யுடைய நாடகசாலையின்மேல், தாது ஆர் முல்லை பூந்தாமம் கொம்புஆட—மகரந்தநிறைந்தமுல்லைமலராலாகியமாலையையணிந்தபூங்கொம்புபோல் வாளாட, கண்டார் எல்லாம் — பார்த்தவர்களெல்லாம், புனமயிலே அன்னமே பொன்னங் கொம்பே — புனத்திலுள்ளமயிலே அன்னமே

பொற்கொம்பே, தாமரைமகளே ஆம்—திருமகளேயாம், அல்லள் ஆயின் அமரர்மகள் என்பாரும் ஆயினர்—அல்லளாஞல் தேவமகளிரரமென்பவருமாஞர்கள்.

(ந - ரை) மயிலேயாம், அன்னமேயாம், பொன்னங்கொம்பேயாம், அல்லளாகில் தேவர்மகளேயாமென்பாருமென்க.

இவ்வாறன்றி மாலைகளென்றுகண்டார் வியக்கத்தேந்தாம முதலிய மாலைகள்தங்கிய தாமவரங்கில் மேகலையு முல்லைத்தாமமு முடையகொம்பு ஆடவெனப் பொருள்கொள்ளுதலும ஒன்று. தோரியமகளிர் ஒத்தறுத்துப் பாடும் பெண்கள். அன்றி ஆடிமுதிர்ந்த பெண்களெனினுமமையும். தாம் தாம் தேம் தாமமுதலியவற்ருேடு சென்றியைதலாலும், ஆம் புனமயிலே முதலியவற்ருேடும் சென்றியைதலாலும் கடைநிலைத் தீவகவணிகள். (கஅஅ)

கொடியார்குளிர்முத்தஞ்சூட்டிவைத்தார் கொல்வானேகுங்குமச்சேருட்டிஞர்கள், அடிசார்ந்துவாழ்வாரை யம்முலைகடாமே யழித்திடுமேற்ருமேயழித்திடுகவென், ருெடியாத மாத்திரையாலுண் டேநுசுப்பிருந்து காண்பாருமுளரோசெங்கண், நெடியான்மகன்சிலையுமம்பும்வைத்த திங்கள் மதியோவாண்முகமோநோக்கிக்காணீர.

இ - ள். கொல்வான் ஏ — நம்மைக் கொல்லுதற்பொருட்டே, குளிர் முத்தம்சூட்டிவைத்தார் குஙகுமச்சேறு ஆட்டிஞர்கள்—குளிர்ந்த முத்தமாலையைச்சூட்டிஞர்கள் குங்குமக்குழம்பைத் திமிர்ந்தார்கள், கொடியார்—ஆதலாற்கொடியரா யிருந்தார், அடிசார்ந்து வாழ்வாரை—தங்காற்கீ ழொதுங்கி வாழ்கின்றவரை, அழித்திடுமேல்—உலகம் அழிககுமாஞல், அ முலைகள் தாமே அழித்திடுக என்று—அம்முலைகளுந் தாமே நம்மையழிக்க வமையுமென்று கருதி, ஒடியாதமாத்திரையால் நுசுப்பு உண்டே—தான்முறியாத அளவாலிடையுண்டென்னு மளவாயிருந்தது, இருந்து காண்பாரும் உளர்—இருந்து காண்பவரு மிருக்கின்ருரென்பவரும், செங்கண்நெடியான்மகன்சிலையும் அம்பும்வைத்த திங்கள் மதியோ—(இது) செவந்தகண்களையுடைய திருமால்மகஞகிய மன்மதனது வில்லும் அம்பும்வைத்ததொரு சந்திரஞே, வாள்முகம் ஓ—ஒள்ளியமுகமோ, நோக்கிகாணீர்—பார்த்துக்காண்பீர் என்பாரும்.

(ந - ரை) நம்மைக் கொல்லுவதற்கே சூட்டுவதுஞ்செய்தார், ஆட்டுவதுஞ்செய்தார் ஆதலாற்கொடியராயிருந்தார்; என்றுந்தங்காற்கீழ்வாழவார் சிலரை உலகந்தாமேயழிக்குமாயின் அம்முலைகளுந்தாமே நம்மையழிக்கவமையுமென்றுகருதித் தான்முறியாதமாத்திரையாலே இடையுமுண்டென்னு மளவாயிருந்தது, இப்பாதகத்தைக் கண்டுவைத்தும் இருந்துகாண்பாரு முளராயிருந்தாரொன்பாரும், காமனது வில்லும் அம்பும்வைத்த தொருமதியோ ! முகமோ ! நோக்கிக்காணீரொன்பாரும் என்க.

இடைமுறியாதிருத்தல் நம்மை முலைவருத்தாது என்று கருதியிருத்தலொக்குமென்று அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. வாள்மதியோ முகமோ ஐயவணி. இவ்வணிகள்கலந்துநிற்றலால் கலவையணி. (கஅக)

நெய்பருகிநீண்டவிருட்கற்றைபோலுங் குழற்கற்றைகண்டு நிறைகலங்குவார், மைபருகிநீண்டுமதர்த்தவுண்கண்வாளேறுபெற்றுளைவார் மாநாகத்தின், பைபருகுமல்குலிலயம்பற்றிப்பதனமைத்தபாவைநிருத்தநோக்கி, மெய்யுருகிக் கண்ணுருகிநெஞ்சுருகிக் காமவெயில் வெண்ணெய்ப்பாவைபோன் மெலிகின்றுரோ.

இ - ள். நெய்பருகிநீண்ட இருள்கற்றைபோலும்—நெய்பூசிநீண்ட இருளின்பாரத்தையொத்த, குழல்கற்றை கண்டு நிறைகலங்குவார்—அளகபாரத்தைநோக்கித்தமதுமனநிலைகலங்குவாரும், மைபருகிநீண்டுமதர்த்த உண்கண்—மையெழுதப்பட்டுக் காதளவுநீண்டு மதாப்படைந்த வெற்றிவாய்ந்த கண்களாகிய, வாள் ஏறுபெற்றுளைவார்—வாள் பிளத்தலைப்பெற்று வருந்துகின்றவர்களும், மாநாகத்தின்பைபருகும் அல்குல் பாவை—பெரிய பாம்பின்படத்தை வென்ற அல்குலையுடைய பாவைபோல்வாளது, இலயம் பற்றி—தாளவறுதியைத்தொடங்கி, பதன் அமைத்த நிருத்தம்நோக்கி—காலமைத்த கூத்திளைப் பார்த்து, மெய் உருகி கண் உருகி நெஞ்சு உருகி— உடம்பிளகிக்கண்ணீர்விட்டுமனமுருகி, காமம் வெயில்வெண்ணெய் பாவைபோல் மெலிகின்றுர்—காமமாகியவெயிலால் வெண்ணெயாற்செய்த பதுமைபோல உடம்பு நுணுகினவராயினர்.

நிறை என்றது ஆடூஉக்குணம நான்கனுள் ஒன்று. அவை அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி, நிறை தன்னிலையினிற்றல். (௧௧௦)

இதுவும் அது.

ஆடவர்மனங்கௗென்னுமரங்கின்மேலநங்கமாலை
ஆடினுண்முறுவலென்னுந்தோழியையையன்காண
ஓடரிநெடுங்கணென்னுமோலையையெழுதிவிட்டாள்
வாடியவாறுநோயுமுரைத்துவார்கொடியனுளே.

இ - ள். வார்கொடி அன்னுள் அநங்கமாலை—நீண்ட பூங்கொடியையொத்த அநங்கமாலையென்னும் பரத்தை, ஆடவர் மனங்கள் என்னும் அரங்கின்மேல் ஆடினுள்—புருடர்கள் மனங்கௗென்னு நாடகசாலையிலாடினுள், வாடிய ஆறும்நோயும் உரைத்து — தன்மேனி வாடியவகையும் நோயுங்கூறி, அரி ஓடு நெடுங்கண் என்னும ஓலையை எழுதி—செவ்வரிபடர்ந்தநெடியகண்களென்னு மோலையையெழுதி, முறுவல் என்னும் தோழியை—அதனை முறுவலென்னுந் தோழிகையிற் கொடுத்து, ஐயன் காணவிட்டாள்—சீவகனைக் காணப்போகவிட்டாள்.

(ந - ரை) அநங்கமாலை மனமென்னு மரங்கின்மேலேயாடினுள்; ஆடியவள் தன்மேனிவாடியவாறும் நோயுமுரைத்துக் கண்ணென்னும் ஓலையையெழுதி, அதனை முறுவலென்னுந் தோழிகையிலேகொடுத்துச் சீவகனைக்காணப் போகவிட்டாள் என்க.

தன்மேலவனுக்கு விருப்பமுண்டாயிற்றுவென்று அவள் நோக்கும் நோக்கு, அவன்கொள்கின்றுனே வென்பதை யறிதற்காதலால் அதனை யோலையாகவாகவகஞ்செய்தார். (௧௧௧)

வளமலரணியப்பெற்றேன்வால்வளை திருத்தப்பெற்றேன்
களனெனக்கலையுமல்குல்கையினாற்றீண்டப்பெற்றேன்
இளமுலைசுமந்துபெற்றவருத்தமுமின்றுதீர்ந்தேன்
உளமெலிமகளிரெய்துமின்பமுமின்றுபெற்றேன்.

இ - ள். வளம் மலர் அணியபெற்றேன்—(அவன் தன்னைவிரும்பாமை யால் அவன்மாலைசூட்டுதலின்) அன்றலர்ந்த மலரினை யணியப்பெற்றனன், வால்வளை திருத்தபெற்றேன்—வெள்ளிய வளையலைத் திருத்தப்பெற்றனன், களன் என்னகலையும் அல்குல்கையினால் தீண்டபெற்றேன் — (பட்டாடை மேல் மேகலைபூட்டுதலால்) களனென்று ஒலிக்கும் அல்குலினைக்கைகளால் தீண்டப்பெற்றனன், இளமுலை சுமந்துபெற்றவருத்தமும்இன்றுதீர்ந்தேன்— (குங்குமமுதலியவற்றைத் திமிர்தலால்) இளமைபொருந்தியமுலையைப் பொறுத்தடைந்த வருத்தத்தையு மின்று நீங்கினேன், உளம்மெலிமகளிர் எய்தும் இன்பமும் இன்றுபெற்றேன் (பரியகமுதலியவற்றை யென்காலிற்சேர்த்த லால் தான்விரும்பி யூடற்காலத்தில் கால் தீண்டி யூடுதல்தீர்த்தலால்) ஊடலால் மனமெலிந்த பெண்களடையு மின்பத்தையும் பெற்றேன் (இனிப்பெறுததேது.)

(ந - ரை) தன்னை அவன்விரும்பாமை யுணர்த்தலிற்றுன் இவையெல்லாம் இவன்நிகழ்த்தப்பெற்றேன்; இனிப்பெறுததேது.

பதமொழிந்தபொருளெல்லாம இசையெச்சம். களனென ஒலிக்குறிப்பு. இதுவும் பின்வருஞ்செய்யுளும் ஒருதொடர். (கசுஉ)

என்றவளரசன்றன்னைநோக்கலளிவன்கணார்வம்
சென்றமைகுறிப்பிற்றேறிக்கூத்தெலாமிறந்தபின்றை
நின்றதுமனத்திற்செற்றநீங்கித்தன்கோயில்புக்கான்
மன்றலர்மடந்தைதன்னைவலிதிற்கொண்டொலிகொடாரான்.

இ - ள். என்று அவள் அரசன் தன்னைநோக்கலள்—என்று தன்மனத்தைத்தேற்றி யவ்வநங்கமாலை கட்டியங்காரனைப்பாராளாயினாள், இவன்கண் ஆர்வம் சென்றமை குறிப்பின் தேறி—இச்சீவகனிடத்தில் விருப்பம் நிகழ்ந்ததை யவள்குறிப்பினால்தெளிந்து, கூத்து எல்லாம் இறந்தபின்றை—கூத்தெல்லாமுடிந்தபின், ஒலிகொள் தாரான்—வண்டின்ஒலியமைந்த மாலையையுடையகட்டியங்காரன், மன்றல் அலர் மடந்தைதன்னை வலிதின்கொண்டுநீங்கி—வாசமமைந்த மலரையணிந்த அநங்கமாலையை வலிந்துகொண்டு நீங்கி, தன் கோயில் புக்கான்—தனதுகோயிலிற் புகுந்தபின், மனத்தில் செற்றம் நின்றது—அவன்மனத்தில் சீவகனைக் கொல்லவேண்டுமென்னுங் கோபநின்றது.

(ந - ரை) என்றுட்கொண்டு தன்மனத்தைத்தேற்றிப் பின்பும் அவள் அரசன்றன்னை நோக்காளாயினாள்; ஆதலால் கட்டியங்காரன் கூத்தெல்லா முடிந்தபின்னை இவனிடத்து அவட்கு ஆர்வநிகழ்ந்தமையை அவடன்குறிப்பாற்றெளிந்து, அம்மடந்தையை வலிதிற் கொண்டு நீங்கித் தன்கோயிலிலே புக்கான்; புக்கபின் அவன் மனத்தே யிவனைக்கொல்லவேண்டுஞ் செற்றநின்றது என்க.

சென்றமை இறந்தகால இடைநிலைபெற்றுவந்த தொழிற்பெயர். நிகழ் காலத்திற் செல்லுகின்றமையெனவரும். (௧௧௩)

தேனுடைந்தொழுகுஞ்செவ்வித்தாமரைபோதுபுல்லி
ஊனுடையுருவக்காக்கையிதழுகக்குடைந்திட்டாங்குக்
கானுடைமாலைதன்னைக்கட்டியங்காரன்சூழ்ந்து
தானுடைமுல்லையெல்லாந்தாதுகப்பறித்திட்டானே.

இ - ள். கான்உடையமாலைதன்னைகட்டியங்காரன்சூழ்ந்து—வாசனையுடைய அநங்கமாலையைக்கட்டியங்காரன் தடுத்து, ஊன் உடை உருவக்காக்கை—ஊன்கெட்டபிணத்தின்மேலுள்ள காக்கை, உடைந்துதேன் ஒழுகும் செவ்விதாமரைபோது புல்லி—முகையவிழ்ந்துதேன்சிந்துந் தாமரைப்போதினைப்பொருந்தி, இதழ் உககுடைந்திட்டால் ஆங்கு — இதழ்சிந்தக் குடைந்தாற்போல, தான் உடைய முல்லை எல்லாம்— அவ்வநங்கமாலையுடைய முல்லைமாலையையெல்லாம், தாது உகபறித்திட்டான் — மகரந்தஞ் சிந்தப்பறித்தனன்.

(ந - ரை.) அங்ஙனஞ் செற்ற நிகழா நிற்கக் கட்டியங்காரன் மாலையைப்போகாமற்றடுத்துப்பிணத்திலிருக்குங் காக்கை போதைப்புல்லிக் குடைந்தாற்போலத் தானுடையமுல்லையெல்லாம் பறித்தானென்க.

போது கிண்கிணிவாய்க்கொள்ளுமலர். முல்லைகற்பு. தானுடை எழுவாய்த்தொகாநிலைத்தொடர். உடைய என்னும் பெயரெச்சத்தினீறு தொக்கது. (௧௧௪)

கலையினிற்கன்னிநீக்கித்தாமரைக்கண்கடம்மால்
முலையினிலெழுதிச்செவ்வாய்பயந்ததேன்பருகிமூழ்கும்
சிலைவலாய்புல்லுநம்பிசீவகசாமியோவென்
றலைகடற்புலம்பினோவாதரற்றுமாலணங்கினன்னாள்.

இ - ள், அணங்கின் அன்னாள் — தெய்வப்பெண்ணையொத்த அநங்கமாலை, கலையினில் கன்னிநீக்கி—எனது மேகலையினிடத்தி லழிவில்லாமையைநீக்கி, தாமரைக்கண்கள் தம் ஆல்—தாமரை மலர்போன்ற கண்களால், முலையினில் எழுதி—எனது முலைமேலெழுதி, செவ்வாய் பயந்த தேன்பருகி மூழ்கும்-செவ்வாய்பயந்த தேனைப்பருகி மூழ்காநின்ற,சிலைவல்லாய்-வில்லின் வல்லாய், நம்பி சீவகசாமி புல்லு என்று — நம்பியே சீவகசாமியே தழுவுவாயென்று, அலைகடல் புலம்பின் ஓவாது — அலைக்குங் கடலினோசைபோல, ஓ ஓவாது அரற்றும்—ஓவென்று நீங்காமற் கதறுவாள்.

(ந - ரை.) அவனங்ஙனம் புணர்ந்த வளவிலே அணங்கினன்னாள் மேகலையிடத்து அழிவின்மை நீக்கிக் கண்ணால் முலையிலே யெழுதிப்பருகி, இங்ஙனமுறையறிந்து மூழ்குஞ் சிலைவலாய், நம்பி, சாமி, நீவந்து புல்லுவாயாகவென்று கடலொலிபோல அரற்றுநிற்குமென்க.

உருவெளித்தோற்றத்தைக்கண்டு கூறினளாதலாற் புல்லு என்றாள். ()

பிறைநலமரற்றக்கேட்டும்பிடிஞெற்கனிந்தகாம
நறுமலரணிந்தமாலைகாற்றத்தோர்நான்குகாதம்

உறநடந்தறிதலில்லாஞெண்டொடிக்குருகிப்பின்னும்
திறனலதமர்க்குச்செப்புந்தீயுமிழ்ந்திலங்கும்வேலான்.

இ - ள். தீ உமிழ்ந்து இலங்கும்வேலான்— கோபத்தீயையுமிழ்ந்துவிளங்கும் வேலினையுடைய கட்டியங்காரன், பீடிஞல்கனிந்த காமம் நறுமலர் அணிந்தமாலை — பெருக்கத்தால் முதிர்ந்த காமமாகிய நறுமணங்கமழுமலரா லே புனைந்தமாலையினது, நாற்றத்து ஓர் நான்குகாதம் உறநடந்து அறிதலில்லான்—மணத்தினுக்கு ஒரு நான்குகாத வழியளவும் பொருந்த வந்தறியாத அக்கட்டியங்காரன், பிறன்நலம் அரற்றகேட்டும்—(தான் அருகிருந்தும்) பிறஞெருவனலத்தைக்கருதிக் கதறக்கேட்டும், ஒண்டொடிக்கு பின்னும் உருகி- ஒள்ளிய வளையலையணிந்த தத்தைக்குப் பின்னுமனமுருகி, தமர்க்குதிறன்அல்லசெப்பும் — தன்னமைச்சர்க்கு முறையல்லாத சொற்களைச் சில கூறுகின்றான்.

(ந- ரை) வேலான் பீடிஞற்கனிந்த காமமாகிய நறுமலராலே பண்ணினபெண்ணுகிய மாலையினது நாற்றத்திற்கு ஒருநாற்காத வழியளவும் அணுக வந்தறியாதவன், ஒண்டொடி தன்னருகேயிருந்து வேறெருவ னன்மையையங்ஙனங்கூறக்கேட்டும் பின்னு மவட்குருகித் தன்னமைச்சர்க்கு நெறியல்லா மொழிகளைக்கூறுகிற்கும்.

அநங்கமாலையினின்பம்நுகர்தற்குத் தகுதியில்லான் என்பது தோன்றக் கனிந்தகாமநறுமலரணிந்த மாலை நாற்றத்தோர் நான்குகாதம் உற நடந்தறிதலில்லான் என்றது குறிப்பணி. (கசுசு)

ஐஞ்சீரால்வந்த நான்கடித்தரவுகொச்சகம்.

விலங்கலன்னவேகவேழநான்கும்வெல்லுமாற்றலான்
கலங்கலந்திலங்குமார்பிற்கந்துகன்மகனென
நலங்கலந்துரைக்குமாலிந்நன்னகர்க்குமன்னஞே
உலங்கலந்ததோளினீருரைமினீவிரென்னவே.

இ - ள். உலம் கலந்த தோளினீர் — திரண்ட கல்லையொத்த தோளையுடையீர், கலம்கலந்து இலங்கும் மார்பின் கந்துகன்மகன்— ஆபரணம் பின்னிவிளங்கு மார்பினை யுடைய கந்துகன் மகஞகிய சீவகனென்பவன், விலங்கல் அன்னவேகம் வேழம்நான்கும் வெல்லும் ஆற்றலான் என்ன—மலையையொத்தவேகத்தையுடையநான்குயானைகளைவென்றவன்மையையுடையவனென்று, நலம்கலந்து உரைக்கும்— அவனது நலத்தை யிவ்வுலகு பாராட்டிப்புகழாநிற்கும், இநல் நகர்க்கு மன்னஞே—அவனிந்த நல்ல நகர்க்கு அரசஞே, நீவிர் உரைமின் என்ன — நீங்கள் கூறுங்களென்று அமைச்சரை நோக்கி வினவ.

(ந - ரை.) தோளினீர், கந்துகன்மகன் ஆற்றலனென்று உலகமெல்லாங்கூடி, அவனலத்தைக் கூறுகிற்கும், இந்நகர்க்கு இவஞே பெருமான், நீங்கள் கூறுவீராகவென்ஞுகிற்கவென்க.

மார்பின் மகன் எனக்கூட்டுக. வேழநான்கும் வெல்லுமாற்றலான் என்பதைப்பின்னர்க்காண்க. (கசுஎ)

மட்டவிழ்ந்ததாரினனிம்மாநகர்க்குளாயிரர்
தொட்டெடுக்கலாவுலம்மொர்தோளினேந்தியாடினன்
ஒட்டிநாகமோரிரண்டெடுக்கலாதகல்லினை
விட்டலர்ந்தபோதுபோலவேந்தலேந்திநீக்கினன்.

இ - ள். மட்டு அவிழ்ந்த தாரினன்—வாசனையொடுமலர்ந்த மலர்மாலையையணிந்தசீவகன், இ மாநகர்க்கு உள் ஆயிரர்தொட்டு எடுக்கலாத உலம்—இந்தப் பெரியநகரத்திலாயிரர் கைகளாலொருசேரப்பரிசித்து எடுக்க அமையாத திரண்டகல்லினை, ஓர்தோளின் ஏந்தி ஆடினன்—ஒருதோளிலேந்தியாடினன், நாகம் ஒட்டி எடுக்கல — யானைநெருங்கியெடுக்கஅமையாத, இரண்டு கல்லினை — இரண்டுகல்லுகளை, விட்டு அலர்ந்த போதுபோல ஏந்தல் ஏந்தி நீக்கினன்—முறுக்கவிழ்ந்தலர்ந்த போதையொக்க அச்சீவகனேந்தி யந்தயானையின் வலிமையைவென்றனன்.

(ந - ரை) தாரினன் உலமேந்தியாடினன்; பின் அந்தவேந்தல் யானையாலெடுத்தாற்ருத ஓரிரண்டுகல்லினையும் இரண்டுகையிலும் போதுபோலேந்தி நீக்கினனென்க.

ஒட்டி வஞ்சினங்கூறியெனப் பொருள்கொள்ளுதலுமொன்று. ஏந்தல் தொழிலாகுபெயர். (௧௬௮)

வெஞ்சிலையின்வேடர்வெள்ளமப்புமாரிதூவலின்
எஞ்சலின்றிநம்படையிருமுறையுடைந்தபின்
மஞ்சுசூழ்கணைமழைபொழிந்துமாநிரைபெயர்த்
தஞ்சிலோதியார்புனைந்தசெஞ்சொன்மாலைசூடினன்.

இ - ள். வேடர் வெம்சிலையின்—வேடர்கள் கொடியவில்லினல், வெள்ளம் அப்புமாரி எஞ்சல் இன்றி தூ[illegible]ன்—வெள்ளமாம்படி பாணமழையைப்பொழியாதுதூவுதலால், நம்படை இருமுறை உடைந்தபின்—நமது சேனையிரண்டுதரம் முதுகுகாட்டிச்சென்றபின், மஞ்சுசூழ்கணை மழைபொழிந்து—மஞ்சுசூழ்தல்போலப் பாணமழையைப்பொழிந்து, ஆநிரை பெயர்த்து—பசுக்கூட்டத்தை யவ்வேடரிடத்துநின்றுநீக்கி, அஞ்சில்ஓதியார் புனைந்தசெஞ்சொல்மாலை சூடினன்—அழகியவட்டத் தகட்டணியையணிந்த கூந்தலையுடையபெண்கள் தொடுத்தகீர்த்தியென்னு மாலையைச்சூடினன்.

(ந - ரை) வேடர்சிலையாலேவெள்ளமாம்படி அப்புமாரியையொழிவின்றுகத்தூவுதலின் நம்படையிருகாலுடைந்தபின், மஞ்சுசூழ்மழைபோலக் கணையைப்பொழிந்து நிரையைப்பெயர்த்துப் புகழ்மாலையைச் சூடினனென்க.

உம்மை அசைநிலை. செஞ்சொல் புகழ். (௧௬௯)

தீம்பயறியன்றசோறுசெப்பினுயிரம்மிடா
நீங்கலாநறுநெய்வெள்ளங்கன்னலாயிரங்குடம்
ஏத்துவித்துநாமிசையவந்துதந்துநீக்கினன்
ஆங்குநாம்பசித்தசைந்தகாலையன்றவண்ணலே.

இ - ள். அன்று அ அண்ணல்—அப்பொழுது அச்சீவகன், ஆங்குநாம்

**பசித்து அசைந்தகாலை**—அவ்வேடர்போரில் நாம் பசித்திளைத்தகாலத்தில், **செப்பின்**—சொல்லுமிடத்து, தீம்பயறு இயன்றசோறு ஆயிரம் மிடா—இனியபருப்போடு கூட்டிச்சமைத்தசோறு ஆயிரமிடாவும், நீங்கலாதநறுநெய் வெள்ளம் கன்னல் ஆயிரம்குடம் ஏந்துவித்து—நீங்காத நறுமணங்கமழுநெய் வெள்ளமும் கருப்பம்பாகும் ஆயிரமாயிரங் குடமும் பணியாட்களேந்திவரச் செய்து, நாம் மிசையவந்து தந்துநீக்கினான்—நாமுண்ணும்படி வந்துகொடுத் துப்பசியைப்போக்கினான்

(ந - ரை) சொல்லின் அவ்வண்ணல் அன்று அவ்விடத்தே நாம்பசித்தி ளைத்தபொழுதிலே பருப்புச்சோறாயிரமிடாவும் நீங்கலாத நறுநெய்வெள்ள முங் கன்னலுமாயிரமாயிரங்குடமும் ஏந்துவித்துவந்துநாமுண்ணும்படிதந்து பசியைப்போக்கினானென்க. (உ00)

> இன்னனென்னவின்புறானி ழந்தனன்னரசென
> என்னைவவ்வும்வாயிறானென்னுஞ்சூழ்ச்சிதன்னுளான்
> அன்னதாலரிறபவறிந்துகூத்திகூறினாள்
> இன்னதாற்படையமைத்தெழுமினென்றியம்பினான்

இ - ள். இன்னன் என்ன — அவன்வலியனும் நமக்குதவிசெய்தவனு மாயுள்ளவனென்று அமைச்சர்கள்கூற, இன்பு உறான் — அதற்கு மகிழாது, அரசு இழந்தனன் என்ன—நாமரசியலு மிழந்தேமென்று கருதி, வவ்வும்வா யில் தான் என்னை என்னும் சூழ்ச்சிதன் உள்ளான்—இவனைக்கொல்லும் வழி தானெவ்வாறென்று கருதும் ஆலோசனையினின்றான், அன்னது ஆதல் அரி ல்தபஅறிந்து கூத்தி கூறினாள்— அக்கட்டியங்காரன்கருத்து அப்படியாதலை ஐயமறவறிந்து நாகமாலைகூறினாள், இன்னது ஆல்— இனிக்காரியமிப்படியி ருத்தலால், படை அமைத்து எழுமின் என்று இயம்பினான் — சேனையைய மைத்துப் போவீராகவென்று கந்துகன் கூறினான்.

(ந - ரை.) அவன் வலியனுமாய் நமக் குதவியுஞ் செய்தானென்றவர் கூற; அதற்கு மகிழானாய் இவர்கருத்தாலும் அவன் வலியாலும் இனி அரசு மிழந்தேனல்லனோவென்றுட்கொண்டு இவனைக் கொல்லும் வழிதானெங்ஙன மேயென்னுஞ் சூழ்ச்சி தன்னிடத்தேநின்றானென்க.

ஆதல் ஆல் தொகுத்தல் விகாரம். இன்புறான் முற்றெச்சம். அரில்ஐயம்.

அறுசீராலடிந்தநாலடித்தரவுகோச்சகம்.

> தாதைதானுரைத்தவெல்லாந்தன்னுயிர்த்தோழன்கூறக்
> கோதைமுத்தணிந்தமார்பன்கூரெயிறிலங்கநக்காங்
> கேதமொன்றில்லைசேறுமென்றலுமிலங்குவாட்கைப்
> போதுலாங்கண்ணிமைந்தர்போர்ப்புலிக்குழாத்திற்சூழ்ந்தார்.

இ - ள். தாதைதான் உரைத்தஎல்லாம்—கந்துகன்சொன்ன காரியங்க ளையும் பாங்கிசொல்லியவற்றையும், தன்உயிர்தோழன்கூற—தனதுஉயிர்போ ன்ற தோழனாகியபுத்திசேனன்கூற, முத்துகோதை அணிந்தமார்பன்—முத் தமாலையயணிந்த மார்பினையுடையசீவகன், கூர் எயிறு இலங்குநக்கு—கூரி

யபற்கள் தோன்றமுறுவலித்து, ஆங்குஏதம் ஒன்றுஇல்லை சேறும்என்றலும்-அவ்விடத்தில் நமக்குவருவதோர் கெடுதிசிறிதுமில்லை நாம்செல்வோமென்ற அளவில், இலங்குவாள்கைபோது உலாம்கண்ணிமைந்தர்— விளங்கும்வாளை யேந்தியகையையும் மலர்சுழலும் மாலையையுமுடைய தோழர்கள், போர்புலிகுழாத்தில்சூழ்ந்தார்—போர்த்தொழிலையுடைய புலித்திரள்போலச் சீவகனைச்சூழ்ந்தனர்.

(ந - ரை.) மார்பன்கந்துகன் கூறிய காரியங்களையுஞ்சேடி கூறியவற்றையுந் தோழன்கூறககேட்டு, நக்குஅவ்விடத்து நமக்குவருவதோர் தீங்குசிறிதுமில்லை சேறுமென்றவளவிலே, தோழரதற் குடன்பட்டுப் புலித்திரள் போலச் சூழ்ந்தாரென்க.

நக்குஎன்றதை நாகமாலைவார்த்தைக்கு நக்கான்எனவும், ஏதமொன்றில்லைஎன்றதைக் கந்துகன்வார்த்தைக்குஏதமொன்றில்லையென்றுனெனவுங்கொள்க. சேறும் தன்மைப்பன்மை யெதிர்கால வினைமுற்று செல்பகுதி, றும்விகுதி, பகுதிமுதனீளல் விகாரம், லகரக்கேடுசந்தி. (௨0௨)

கண்ணுதற்கடவுள்சீறக்கனலெரிகுளித்தகாமன்
மணமிசைத்தோன்றியன்னவகைநலமுடையகாளை
தெண்மணியாரமார்பன்றிருநுதன்மகளிர்நெஞ்சத்
துண்ணிறைபருகும்வண்டாருருவமைதிருவின்மிக்கான்.

இ - ள். கண்ணுதல்கடவுள்சீற கனல் எரி குளித்தகாமன் — சிவபெருமான்கோபித்தலால் நெருப்பில்முழுகிய மன்மதன், மண்மிசைதோன்றி அன்னவகைநலமஉடையகாளை—மீண்டும்நிலவுலகின்மேற்பிறந்தாலொத்த அவையவப்பொலிவுவாய்ந்த காளைப்பருவமுடையான், தெள்மணி ஆரமார்பன்—தெள்ளிய முத்தாரத்தையணிந்த மார்பினையுடையவனும், திருநுதல் மகளிர் நெஞ்சத்து உள்நிறை பருகும்வண்தார்— அழகிய நெற்றியையுடைய பெண்களது மனத்தில்நிறைந்த கற்பினைக்கொள்ளைகொள்ளும் வளவியமாலையையுடைய, உரு அமைதிருவில்மிக்கான்—வடிவமைந்த பொலிவில் மிகுந்தவனுமாகியசீவகன்.

(ந - ரை.) கடவுள் சீறுதலின் எரியில் மூழ்கியகாமன் மீண்டுந்தோன்றினுலொத்த அவையவழகையுடையகாளை, தாரினையுமாரத்தையு முடைய மார்பன்குரிசில்.

இது ஒருபொருள்மேல்வந்த பலபெயராதலால் காளை, மார்பன், மிக்கான்என்றுர். (௨0௩)

கருநெறிபயின்றகுஞ்சிகாரகில்கமழவூட்டி
வரிநிறவண்ணமாலைவலம்படமிலைச்சிவாளார்
திருநிறமுகத்திற்கேற்பச்செம்பொனேரோலைசேர்த்தி
எரிநிறக்குழையோர்காதிற்கிருளறச்சுடரவைத்தான்.

இ - ள். கருநெறிபயின்றகுஞ்சி—கரியநெளிந்தசிகையில், கார்அகில்கமழஊட்டி—கரியஅகிற்புகைநறுமணம்வீசவூட்டி, வரிநிறம்வண்ணம்மாலைவலம் படமிலைச்சி—வண்டினதுபாட்டின்றிறமமைந்த நிறம்வாய்ந்த மாலையைஅச்

சிகையிடத்துப் பொருந்தச்சூட்டி, வாள்ஆர் திருநிறம்முகத்திற்குஏற்ப செம்பொன் ஓர் ஓலை சேர்த்தி—அழகியவிளக்கம்வாய்ந்த முகத்திற்குப்பொருந்தச் செம்பொன்னாலாகிய ஓரோலையையொருகாதிற் சேர்த்தி, எரிநிறம் குழைஓர் காதிற்கு—நெருப்புப்போலுஞ் செந்நிறம்வாய்ந்த மாணிக்கக்குண்டலத்தினை யொருகாதினுக்கு, இருள்அறசுடரவைத்தான்— இரு ணீங்கும்படி விளங்க வொருகாதினுக்கு இட்டனன்.

(ந - ரை.) அவன்குஞ்சியிலே புனைபூட்டி மாலையைமிலைச்சிமுகத்திற் கேற்ப ஓரோலையொருகாதிற்குச் சேர்த்தியொரு குழையைக்காதிற்கிட்டான்.

குஞ்சிகாரகில் இரண்டாம்வேற்றுமைக்கும் மூன்றாம்வேற்றுமைக்கும் புறனடைகூறினமையால் ஏழாம்வேற்றுமையில் வருமொழிவல்லெழுத்தியல் பாதல் "இற்கிதுமுடிபு" என்னும்அதிகாரப்புறனடைச்சூத்திரத்தாற்கொள்க.

தென்வரைப்பொதியிறந்தசந்தனத்தேய்வைதேங்கொண்
மன்வரையகலத்தப்பிவலம்புரியாரந்தாங்கி
மின்விரித்தனையதொத்துவிலைவரம்பறியலாகா
இன்னுரைக்கலிங்கமேற்பமருங்குலுக்கெழுதிவைத்தான்.

இ - ள். தென்வரை பொதியில்தந்த—தெற்கிலுள்ள மலைகளுக்கு எல்லையாகிய பொதியமலைபெற்ற, சந்தனம்தேய்வை— சந்தனக்குழம்பினை, தேம்கொள் மன்வரைஅகலத்துஅப்பி—வாசங்கொண்ட நிலைபெற்ற மலைபோன் றமார்பிலப்பி, வலம்புரிஆரம்தாங்கி—வலம்புரிச்சங்கீன்ற முத்தமாலையையணிந்து, மின்விரித்தது அனையதுஒத்து—மின்னையகலவிரித்த தன்மையையொத்து, விலைவரம்பு அறியலாகாத—விலையினளவையறிதற்கரிய, இன்நுரைகலிங்கம்ஏற்ப மருங்குலுக்குஎழுதிவைத்தான்—இனியநுரைபோலும் மென்மைவாய்ந்த ஆடையைப்பொருந்தஇடையில் எழுதியதுபோலவுடுத்தனன்.

(ந - ரை.) இட்டுக் குழம்பையகலத்தேயப்பித் தாங்கிக்கலிங்கத்தை யெழுதினாற்போலவுடுத்தான்.

பொதியிறந்த எழுவாய்த்தொடராதலால் தகரந்திரிந்தவிடத்து லகரங் கெட்டதெனக்கொள். (௨0௫)

இரும்பறக்கழுவியெஃகினிருளறவடிக்கப்பட்ட
அரும்பெறற்சுரிகையம்பூங்கச்சிடைக்கோத்துவாங்கிப்
பெருந்தகைக்குரிசில்கொண்டுபெருவலஞ்சுடரவீக்கித்
திருந்திழைமகளிர்வெஃகுந்தேவிளங்குமரனொத்தான்.

இ - ள். இரும்பு அறகழுவி— இரும்பினையழுக்கற வட்டாகவுருக்கி, எஃகின் இருள்அறவடிக்கப்பட்ட—அந்தஎஃகினால் இருளறப்பண்ணப்பட்ட, பெறல்அரும்சுரிகை—பெறுதற்கரிய வுடைவாளினை, பெருந்தகைகுரிசில்கொண்டு அம்பூங்கச்சுஇடைகோத்துவாங்கி—பெருந்தன்மையையுடைய சீவகன் கையிற்கொண்டு அழகிய கச்சையிடையிற்கோத்துவாங்கி, பெருவலம்சுடர வீக்கி—வெற்றிவிளங்கக்கட்டி, திருந்திழைமகளிர்வெஃகும் தேஇளங்குமரன்ஒத்தான்—திருந்திய ஆபரணத்தையணிந்த பெண்கள் விரும்பும் (செயற்கையழகுபொருந்துதலால்) கடவுளாகிய முருகக்கடவுளையொத்தான்.

(ந - ரை.) உடுத்துச்சுரிகையை வீக்கி மகளிர்நெஞ்சினிறையை வாங்குதற்குக்காரணமான செயற்கையழகு பொருந்தின இச்செல்வத்தான் மிக்கான்; அப்பொழுது முருகனையொத்தானென்க.

இரும்பெலைகாதலால் அதனுல்என்முர். வெலைகும் நிகழ்காலத்தில்வந்தபெயரொச்சம் வெலைகுபகுதி. (உ0௬)

வரைவிழித்திமைப்பதொக்கும்வாலொளியாரமார்பின்
விரைவழித்திளையரெல்லாம்விரிமணிக்கலங்கடாங்கி
நுரைகிழித்தனையநொய்ம்மைநுண்டுகின்மருங்குசேர்த்தி
உரைகிழித்துணருமொப்பிளுேவியப்பாவையொத்தார்.

இ - ள். இளையர்எல்லாம்—இளையோர்யாவரும், வரைவிழித்து இமைப்பதொக்கும்—மலைவிழித்து அசைவின்கட்பாடஞ்செய்தலையொக்கும், வால் ஒளிஆரம்மார்பின் விரைவழித்து—வெள்ளியஒளிவாய்ந்த வயிரவடத்தையணிந்த மார்பில்விரையைப்பூசி, விரிமணிகலங்கள்தாங்கி—ஒளிவீசு மிரத்திகாபரணங்களைச் சுமந்து, நுரைகிழித்தால் அனையநொய்மை நுண்துகில் மருங்குசேர்த்தி—நுரையைக்கிழித்தமைத்தாலொத்த மெல்லியஆடையையிடையிற்புனைந்து, உரைகிழித்து—வாக்காற்புகழ்தலரிதாய், உணரும்ஒப்பின் ஓவியப்பாவைஒத்தார்—மனத்தாலுணரு மொப்பால் சித்திரப்பதுமைகளையொத்தவராயினர்.

(ந - ரை.) இளையரெல்லா மார்பிலேவிரையைப்பூசிக் கலங்களையணிந்து துகிலையுடுத்து வாக்காற் புகழ்தலரிதாய்மனத்தாலுணரு மொப்பாற் பாவையையொத்தாரென்க.

வரைவிழித்தி மைப்பதொக்கும் வாலொளியாரம் இல்பொருளுவமையணி. பாவைசாதியொருமையாதலால் ஒத்தாரென்முர். (உ0எ)

அரக்குநீரொறியப்பட்டவஞ்சனக்குன்றமன்ன
திருக்கிளரோடைசூழ்ந்தசெம்புகர்நெற்றித்தாகி
உருக்கியூனுண்ணும்வேகத்துறுபுலியனையநாகம்
அருக்கனோர்குன்றஞ்சேர்ந்தாங்கண்ணலுேனறினுனே.

இ - ள். திருகிளர் ஓடைசூழ்ந்த செம்புகர்நெற்றித்துஆகி—பொலிவால்விளங்கும்பட்டஞ்சூழ்ந்த செவந்தபுள்ளிவாய்ந்த நெற்றியையுடையதாதலால், அரக்குநீர்எறியப்பட்ட அஞ்சனக்குன்றம் அன்னநாகம்—உருக்கிய அரக்கினீர்வீசப்பட்ட அஞ்சனமலையையொத்த யானையின்மேல், அருக்கன்ஓர்குன்றம் சேர்ந்தால்ஆங்கு—சூரிய னொருமலையி லுதயஞ்செய்தாற்போல, ஊன் உருக்கிஉண்ணும்—ஊனையுருக்கியுண்ணும், வேகத்து உறுபுலி அனையஅண்ணல்ஏறினுன்—வேகமிக்கபுலியையொத்த சீவகனேறினுன்.

(ந - ரை.) செம்புகர்நெற்றித்தாதலின், அரக்குநீரொறியப்பட்ட குன்றமன்னநாகத்தை, அருக்கன் ஒருமலையைச்சேர்ந்தாற்போலப் புலியன்ன அண்ணலுேனறினுன். (உ0அ)

விடுகணைவிசையின்வெய்யவிளங்கொளியிவுளித்திண்டேர்
கடுநடைக்கவரிநெற்றிக்காலியற்புரவிகாய்ந்து

வடிநுனையொளிறுமாலைவாட்படைமறவர்சூழ
அடுதிரைச்சங்கமார்ப்பவணிநகர்முன்னினானே.

இ - ள். விடுகணைவிசையின்இவுளி—எய்தஅம்பினையொத்த விசையினையுடையகுதிரைபூட்டிய, வெய்யவிளங்கு ஒளிதிண்தேர்— வேகமிக்கவிளங்கும் ஒளியையுடைய திண்ணியதேரும், கடுநடைகவரிநெற்றி—விரைந்துநடக்கும் நடையினையும் கவரிகட்டிய நெற்றியையுமுடைய, கால்இயல்புரவி-காற்றைப்போல வேகம்வாய்ந்தகுதிரையும், காய்ந்துவடிநுனை ஒளிறுமாலை வாள்படைமறவர்சூழ—உலையிற்காய்ச்சிவடித்த நுதியையும் விளங்கும் வெற்றிமாலையையயணிந்த வாளையுமேந்திய பதாதிவீரருஞ் சூழ்ந்துவரவும், அடுதிரைசங்கம்ஆர்ப்ப—கரையோடுமோதும்அலையையுடையசங்குகளொலிக்கவும், அணிநகர்முன்னினான்—அழகியநகரையடைந்தான்

(ந - ரை.) தேர்முதலியனசூழ ஆர்ப்பச்சென்றுயாழ் மண்டபத்தையணுகினனென்க. (௨0௧)

தோற்றனண்மடந்தைநல்யாழ்தோன்றலுக்கென்றுநிற்பார்
நோற்றனணங்கைமைந்தனிளநலநுகர்தற்கென்பார்
கோற்றொடிமகளிர்செம்பொற்கோதையுங்குழையுமின்ன
வேற்றனசொல்லிநிற்பாரெங்கணுமாயினாரே.

இ - ள். கோல்தொடிமகளிர் செம்பொன்குழையும் கோதையுமின்ன-கோல்போலத்திரண்ட வளையலையணிந்த செம்பொன்னாலமைந்த குண்டலமுமாலையும் விளங்க, மடந்தைநல்யாழ் தோன்றலுக்குதோற்றனள் என்றுநிற்பார்—தத்தைநல்லயாழ்வாசினையில் சீவகனுக்குத் தோல்வியடைந்தாளென்று நிற்பவரும், நங்கைமைந்தன் இளமைநலம்நுகர்தற்கு நோற்றனள்என்பார்—தத்தைசீவகனது இளமை நலத்தைத்திளைத்தற்குத் தவஞ்செய்தன ளென்பவருமாக, ஏற்றனசொல்லிநிற்பார் எங்கணும்ஆயினர் — தத்தமக்குஏற்பனவற்றைச் சொல்லிநிற்பவ ரெவ்விடத்துமாயினார்கள்.

(ந - ரை.) மகளிர்கோதையுங் குழையுமின்னநிற்க, மடந்தைதோன்றலுக்கு யாழைத்தோற்றாளென்பார்; நங்கைமைந்தனல நுகர்தறகு நோற்றாளென்பார்; தம்மனத்துக்கேற்றனசொல்லிநிற்பாராயினா ரெவ்விடத்துமென்க.

வாசினை நரம்பைத்தடவல். இவன்கல்வியையுணர்ந்தோராதலால் தோற்றனள்என இறந்தகாலத்தாற் கூறியது தெளிவுபற்றிவந்தகாலவழுவமைதி.

ஐஞ்சீரான்வந்தநாலடித்தரவுகோச்சகம்.

சுறுநீறக்கொடுங்குழைசுழன்றெருத்தலைதர
அறுமலர்த்தெரியலானழன்றுநோக்கியையெனப்
பொறுமனப்பொலிவெனுமணிக்கைமத்திகையினால்
அறுவிவந்துதோன்றினனங்கனன்னவண்ணலே.

இ - ள். அறுதமலர்தெரியலான் — கோபநீங்காத மலர்மாலையணிந்த கட்டியங்காரன், நிறம்சுறுகொடுங்குழை சுழன்று எருத்து அலைதர—ஒளிவாய்ந்த வளைந்த மகரகுண்டலம் அசைந்து கழுத்தில்விழ, அழன்று நோக்கிஐ

யென—கோபித்துப்பார்த்து வியக்க, பொருதமனம்—அவனது பொருதமனத்தை, பொலிவு என்னு மணிகைமத்திகையினல்— தனது பொலிவென்னும் அழகிய கையிலேந்திய சம்மட்டியால், அரங்கன் அன்ன அண்ணல் அருவிவந்துதோன்றினன்— மன்மதனையொத்த சீவகன் அடித்துவந்துதோன்றினன்.

(ந - ள.) செற்றமருதகட்டியங்காரன் தனது மகரக்குழையசைந்து கழுத்திலேவிழும்படி எரிந்துபார்த்து வியவாநிற்க, அவனது பொருதமனத்தை அண்ணல் தனது பொலிவென்கிற மத்திகையினு லடித்துவந்து தோன்றினனென்க.

எனவே சீவகன் விளக்கம் கட்டியங்காரன் மனத்தைக் கேடுசெய்ததென்க. மத்திகை என்றதனுல் கையென அடை தந்துகூறினர். மனப்பொலிவு வலித்தல்விகாரம். அராவி அருவி எனவந்தது. (உகக)

குனிகொள்பாகவெண்மதிக்கூரிரும்புதானுறீஇப்
பனிகொண்மால்வரையெனப்படுமதக்களிறிரீஇ
இனிதிழிந்திளையரோத்தவின்னகிற்கொழும்புகை
முனியவுண்டகுஞ்சியான்முரண்கொண்மாடமுன்னினன்.

இ - ள். கொழுமைஇன்அகில்புகைமுனியஉண்டகுஞ்சியான்—கொழுவிய இனிய அகிற்புகையைவெறுக்கவுண்டசிகையையுடையசீவகன், குனிவுகொள்வெண்மதிப்பாகம்கூரிரும்புதான் உறுவி-வளைந்தஅர்த்தசந்திரனையொத்தகூரியஅங்குசத்தாலழுத்தி, பனிகொள்மால்வரைஎன்ன— பனிமூடியபெரியமலைபோல, மதம்படு களிறு இருவி — மதஞ்சிந்தும் யானையையிருத்தி, இனிது இளையர்ஏத்தஇழிந்து—இனிதாகவிளைஞர்வாழ்த்தஇறங்கி, முரண்கொள்மாடம் முன்னினன்—யாழால் மாறுபட்ட மண்டபத்திற் சேர்ந்தான்.

(ந - ள.) குஞ்சியான் வளைவுகொண்ட வெண்மதிப் பாகம்போலுந் தோட்டியையழுத்திக் களிற்றை யிருத்தி யிளைய ரினிதாகவேத்த இழிந்து யாழான் மாறுபாடுகொண்ட மாடத்தே சேர்ந்தானென்க.

குனி தொகுத்தல்விகாரம். பனி மதத்திற்கும் வரையானையின் தோற்றத்திற்கும் உவமையாகக் கூறியதால் ஒப்புமைக்கூட்ட வுவமையணியாகக் கொள்க. உறீஇ, இரீஇ, சொல்லிசை நிறைத்தலில் வந்த வுயிரளபெடை.

புதிதினிட்டபூந்தவிசினுச்சிமேனடந்தவட்
புதிதினிட்டமெல்லணைப்பொலிந்தவண்ணம்போகுயர்
மதியமேறிவெஞ்சுடர்வெம்மைநீங்கமன்னிய
உதயமென்னுமால்வரையுவந்திருந்ததொத்ததே.

இ - ள். அவண் புதிதின் இட்டதவிசின் உச்சிமேல்நடந்து— அவ்விடத்தில் புதிதாக இட்ட மெத்தையின் உச்சிமேல் நடந்துபோய், புதிதின் இட்டமெல் அணைபொலிந்த வண்ணம் — புதிதாக விட்டமெல்லிய வட்ட அணைமேல் விளங்கிய தன்மை, வெஞ்சுடர் போகு உயர்மதியம் மன்னிய வெம்மை நீங்கஏறி—சூரியன் உயர்ந்த சந்திரமண்டலத்தில் நிலைபெற்ற வெம்

மைநீங்கும்படியேறி, உதயம் என்னும் மால்வரை உவந்து இருந்தது ஒத்தது—உதயமென்னும் பெரிய மலையில் மகிழ்கூர்ந்திருந்த தன்மையையொத்திருந்தது.

(ந - ரை.) அவ்விடத்துப்புதிதாக விட்ட தவிசின்மேலே நடந்து சென்று புதிதாகவிட்ட வட்டவணைமேற் பொலிவுபெற்றிருந்த தன்மை வெஞ்சுடர் மதியத்தையேறித் தன்னிடத்துமன்னிய வெம்மை நீங்கும்படி உதயவரையிலே யுவந்திருந்த தன்மையையொத்ததென்க.

போகுயர் மதி உயர்ந்தமதி. மலைமண்டபமாகவும் மதியம் அணையாகவும் சூரியன் சீவகனுகவும் உவமைகூறியவதனல் ஒப்புமைக் கூட்டவுவமையணி. (உகரு)

முருகுவிம்முகோதையார்மொய்யலங்கல்வண்டுபோற்
பருகுவானிவனலம்பாரித்திட்டவிந்நகர்
உருகுமைங்கணையொழித்துருவினையகாமனுர்
கருதிவந்ததென்றுதங்கண்கள்கொண்டுநோக்கினர்.

இ - ள் உருவின் ஐயகாமனுர்—உருவினல் வியப்பையுடைய மன்மதர், பாரித்திட்ட இநகர்—நலம்பரந்த இந்த நகரத்தில், இவண்நலம் பருகுவான்—தத்தையினலத்தைப்பருக, மொய் அலங்கல் வண்டுபோல்— மலர்நெருங்கிய மாலையில் மதுவை வண்டுகள்பருகும்வகைபோல, உருகும் ஐங்கணை ஒழித்து—உருகுதற்குக் காரணமாகிய இரண்டுவகையாயுள்ள ஐந்துபாணங்களையு மொழித்து, கருதிவந்தது என்று—அவர்கருதிவந்ததொரு தன்மையென்று, முருகுவிம்முகோதையார் — வாசமிக்க மாலையையணிந்த பெண்கள், தம்கண்கள் கொண்டுநோக்கினர்—தமது கண்களைக்கொண்டு அச்சீவகனைப் பார்த்தார்.

(ந - ரை.) உருவினல் வியப்பையுடைய காமனர் இவணலம் பரந்த இந்நகர்க்கண்ணே இவனலத்தை அலங்கலைவண்டுபெருகுமாறுபோலப் பருகுவான் கருதி ஐங்கணையை யொழித்துவந்ததொரு தன்மையென்று நினைத்துக் கோதையார் தங்கண்களைக்கொண்டு அவனை நோக்கினரென்க.

இருவகைப்பாணமாதலால் உருகுமைங்கணையென்றார். இருவகைப்பாணமாவன திரவியபாணம், பாவபாணம். திரவியபாணம் "அந்தணரவிந்தமாம் பூவசோகப்பூ—பைந்தளிர்முல்லைபனிநீலம்-ஐந்துமே—வீரவேண்மைமந்தனையும் வேனெடுங்கண்மாதனையும் — மாரவேளெய்யு மலர். பாவபாணம் இங்கிதம், மதநம், வசீகரணம், மோகநம், சந்தாபம். சீவகன் வந்ததை மன்மதன் வந்ததாக அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. இதனை வடநூலார் உத்பரேக்ஷாலங்காரம் என்பார். அத்தியவசயித்தலாவதுஒருபொருளில் மற்றொருபொருளினபேதத்தை யையத்துடனறிதல். (உகச)

முனைத்திறத்துமிக்கசீரமுனைவர்தம்முனைவனுர்
வனப்புமிக்கவர்களின்வனப்புமிக்கினியனு
நினைத்திருந்தியற்றியதிருமிதமகனிவன்
கனைத்துவண்டுளர்ந்ததார்க்காளைச்சீவகன்னரோ.

இ - ள். முனைதிறந்து மிக்கசீர—தவக்கூற்றில்மேம்பட்ட சிறப்பினை யுடைய, முனைவர்தம் முனைவனார்—இருடிகளுக்கு இருடிகளாகிய பிரமர், வனப்புமிக்கவர்களின்—அழகுமிகுந்தவரெல்லாரிலும், வனப்புமிக்கு இனிய வன் ஆக—அழகுமிகுந்து கட்புலங்களுக்கு இனியவனாக, நினைத்து இருந்து-(ஒருவனைப்படைக்கவேண்டுமென்று) நெடுநாள் நினைத்திருந்து, இயற்றிய நிருமிதமகன்—நிருமிதத்தால் நிருமித்த புருடன், வண்டுகளைத்து உளர்ந்த தார்காளை சீவகன் இவன்—வண்டுகள் களைத்து மகரந்தத்தைச் சிதறியமாலை யையணிந்த காளையாகிய இச்சீவகன்.

(ந - ரை.) அயன் தான் படைத்த வனப்புமிக்கவ ரெல்லாரிலும் வனப் புமிக்குக்கட்கினியனாக ஒருவனையான் படைக்கவேண்டுமென்று நெடுநாணி னைத்திருந்துநிருமிதத்தாலியற்றிய இச்சீவகன்.

உளர்தல் சிதறுதல். எல்லாவற்றிற்குந்தவமுற்பட்டதாதலால் தவத்தை முனையென்றார். இதுமுதல் இனைய என்பதுகாறும் ஒருதொடர். ஒருவனைப் படைக்கவேண்டுமென்று இசையெச்சம். சீவகனை நிருமித்தது இவ்வாறு மென்று யூகித்தலால் உய்த்துணர்வைப்பணி. இதனை வடநூலார் சம்பாவனா லங்காரம் என்பார். மிக்கநீர எனவும் பாடமுண்டு, அதற்கு மிக்கதன்மை யையுடைய எனப்பொருள்கொள்க. சீர குறிப்புவினைப்பெயரெச்சம். ()

பொன்னைவிட்டசாயலாள்புணர்முலைத்தடத்தினான்
மின்னைவிட்டிலங்குபூண்விரைசெய்மார்பமோலையா
வென்னபட்டவாறரோவெழுதிநங்கையாட்கொள்வான்
மன்னுமவந்துபட்டனன்மணிசெய்வீணைவாரியே.

இ - ள். மின்னைவிட்டு இலங்குபூண்விரைசெய்மார்பம் ஓலை ஆக—(அச்சீவகனது) ஒளியை வீசிவிளங்கும் ஆபரணத்தையணிந்த வாசம் வீசும் மார்பமோலையாகக்கொண்டு, பொன்னைவிட்ட சாயலாள்நங்கை—இலக்குமி யைவென்றமென்மைத்தன்மையையுடைய தத்தை, புணர்முலைதடத்தினால்-தனது நெருங்கிய முலையாகிய வுயர்ந்த விடத்தால், எழுதி ஆட்கொள்வான்-எழுதியாட்கொள்ளும்படி, மணிசெய்வீணைவாரி—பொலிவுசெய்யும் வீணையா கிய வாரியில், மன்னும் வந்துபட்டனன்—தப்பாமல்வந்து அகப்பட்டனன், பட்ட ஆறு என்னை—ஈதொருநல்வினையுண்டாகியவகை யென்னவென்று.

(ந - ரை.) இவன்விரைசெய்மார்ப மோலையாகக்கொண்டு சாயலாளா கிய நங்கை தன்முலைத்தடத்தினலெழுதி யடிமைகொள்ளும்படி வீணைவாரி யிலே வந்து தப்பாமலகப்பட்டான்; ஈதொரு நல்வினையுண்டாயவாறெங்ஙனை மிருந்ததென்று.

வாரி அகப்படுத்துமிடம். என்று சொல்லெச்சம். (௨௧௬)

இனையகூறிமற்றவடோழிமாருமின்புற
வனையலாம்படித்தலாவடிவிற்கெல்லையாகிய
கனைவண்டோதிகைதொழுங்கடவுள்கண்ணிற்கண்டவர்
எனையதென்னையதெய்தினாரனையதனையதாயினார்.

இ-ள். இனையகூறி — இத்தன்மையவான சொற்களைக்கூறி, அவள் தோழிமாரும் இன்பு உற—அவள்தோழிமாரு மகிழாநிற்க, வனையலாம்படித்து அல்லாத வடிவிற்கு எல்லையாகிய—எழுதலாந் தன்மையுடையதல்லாத வடிவிற்கோரெல்லையாயுள்ள, வண்டுகளை ஓதி அவள்தோழிமாரும் இன்புஉற-வண்டுகளொலிக்குந் தத்தையவள் தோழிமாருமகிழாநிற்க, கைதொழுங்கடவுள் கண்ணில்கண்டவர் எனையது எனையது எய்தினார்— (ஒழிந்தோரும்) வணங்குங் காமனைப்பார்த்தோர் எவ்வளவெவ்வளவாகிய இன்பத்தை யுற்றாரோ, அனையது அனையது ஆயினார் — அவ்வளவவ்வளவாகிய இன்பத்தின் வடிவுதாமாயினார்.

(ந-ரை) இத்தன்மையவாகிய மொழிகளைக்கூறி அவடோழிமாருமின்புறாநிற்க, ஒழிந்தோருங்காமனைக்கண்ணாற்கண்டவர்எவ்வள வெவ்வளவாகிய இன்பத்தையுற்றார்,அவ்வளவவ்வளவாகியவின்பத்தின்வடிவுதாமாயினாரென்க.

ஒழிந்தோர் சொல்லெச்சம். (உகஎ)

அறுசீரால்வந்தநாலடித்தரவுகொச்சகம்.

குட்டநீர்க்குவளையெல்லாங்கூடிமுன்னிற்றலாற்றாக்
கட்டழகுடையகண்ணாணிறையெனுஞ்சிறையைக்கைபோய்
இட்டநாண்வேலியுந்திக்கடலெனவெழுந்தவேட்கை
விட்டெரிகொளுவநின்றாளெரியுறுமெழுகினின்றாள்.

இ-ள். குட்டம் நீர்குவளை எல்லாம் கூடிமுன் நிற்றல் ஆற்றாத—ஆழமாகிய நீரிலுள்ள குவளைகளெல்லா மொருசேரக் கூடித் தன்முன்னேபோர்க்கு நிற்றலாகாத, கட்டு அழகுஉடையகண்ணாள்—மிக்க அழகு வாய்ந்த கண்களையுடைய் தத்தை, நிறை என்னும் சிறையை கைபோய்—நிறையென்னுஞ் சிறையைக் கைகடந்து, இட்ட நாண்வேலி உந்தி— அந்நிறைக்குக் காவலாக இட்ட நாணென்னும் வேலியைப்பறித்து, கடல் என்ன எழுந்தவேட்கை விட்டு எரிகொளுவ நின்றாள்—கடலைப்போல அலைவீசியெழுந்த காமமென்னுங் கொழுந்துவிட்டெரியும் தீகொளுவநின்றவளாய்த் தீயிற்பொருந்திய மெழுகைப்போ லாறதாது நின்றனள்.

நின்றாள் முற்றெச்சம். இதுகைமிகலென்னு மெய்ப்பாடு இது முதல் கழித்த வேலேறுபேற்ற என்பதுகாறுமொருதொடர். (உகஅ)

நலத்தைமத்தாகநாட்டிநல்வலியிளமைவாராக்
குலபபிறப்பென்னுங்கையாற்கோலப்பாசங்கொளுத்திக்
கலக்கியின்காமம்பொங்கக்கடைந்திடுகின்றகாளை
இலைப்பொலியலங்கன்மார்பமியைவதென்றாருங்கொல்லோ.

இ-ள். நலத்தைமத்து ஆகநாட்டி—தனதுஅழகை மத்தாகநாட்டி, நல்வலிஇளமைவார் ஆக—நல்ல வலிமையுமிளமையுமம்மத்தினிரண்டுதலையிலும் பூட்டும் வாரார்க்கொண்டு, கோலம்பாசம்கொளுத்தி — தனதுசெயற்கையழகாகிய கடைக்கயிற்றையம்மத்திலேபூட்டி, குலம்பிறப்புஎன்னும் கையால் தாய்குலமுந்தந்தைகுலமுமென்கிற, கையினால், இன்காமம் பொங்க கலக்கிடைந்திருக்கின்றகாளை—இனியகாமமென்னுங்கடல்பொங்கும்படி கலக்கிக்க

டைகின்ற காளையினது, இலைபொலி அலங்கல் மார்பம்பொங்க—இலைபோல த்தகட்டுவடிவமாகப்பொன்னாற்செய்து விளங்குமாலையையணிந்தமார்பத்தை, இயைவதுஎன்று ஆகும்கொல்—சேருநல்வினைஎந் நாளிலுண்டாவ தென்றை யமுற்று.

(ந - ரை.) தனதுவடிவழகை மத்தாகநாட்டிவலியு மிளமையும் அம்மத் தினது இரண்டு தலையினும் பூட்டும் வாராகக் கொண்டு, ஒப்பனை யழகாகிய கடைகயிற்றையும் மத்திகையிலேபூட்டித், தாய்குலனுந்தந்தை குலனுமெ ன்கின்ற கைகளாலே, காமமென்கிற கடலைப்பொங்குமபடி கலக்கிக்கடைந்தி டுகின்ற காளையதுமாாப மியையு நல்வினை எந்நாளிலேயுண்டாவதென்றைய முற்று மற்றைநாளில் விடியற்காலத்தே யியையுமென்பதனைத் தனதுஞான த்தாலுணர்ந்தாளென்க.

என்றாகும் என்றது விரைவென்னு மெய்ப்பாடு. இதுமுற்றுருவகவணி.

தீங்கரும்பெருத்திற்றூங்கியீயின்றியிருந்ததீந்தேன்
நாங்கணாற்பருகியிட்டுநலனுணப்பட்டநம்பி
பூங்குழைமகளிர்முன்னர்ப்புலம்பனீநெஞ்சேயென்றாள்
வீங்கியகாமம்வென்றார்விளைத்தவின்பத்தோடொப்பாள்.

இ - ள். வீங்கியகாமம்வென்றார் விளைத்த இன்பத்தோடொப்பாள்—மி க்ககாமம்வென்ற பெரியோர்நுகர்ந்தசுவர்க்கவின்பத்தையொத்ததத்தை, தீங்க ரும்பு எருத்தில்தூங்கி—இனியகரும்பின் பிடரில்தொங்கியசைந்து, ஈ இன்றி இருந்ததீந்தேன்—ஈ மொய்க்காமலிருந்த இனியதேனை, நாம் கண்ணால் நலன் பருகியிட்டு உண்ணப்பட்டநம்பி—நாங்கண்ணாலே நலத்தையுள்ளடக்கி நுகர ப்பட்டநம்பியிவன், நெஞ்சே—மனமே, பூங்குழைமகளிர்முன்னர் நீபுலம்பல்- பொலிவுமிக்க குண்டலத்தையணிந்த பெண்கள்முன்னே நீபுலம்பாதேயெ ன்றுதேற்றி.

கரும்பெருத்திற்றூங்கி என்றது தனக்கு எளிதிற்கிடைப்பதுநோக்கி. ஈயி ன்றியிருந்த தீந்தேன்என்றது ஒருபெண்களு மிவனின்பத்தை முன்னர்நுக ராதிருந்த பிரமசரியத்தை. இதனால்சிதைவுபிறர்க்கு இன்மையென்னுமெ ய்ப்பாடு தோன்றுதல் காண்க. சிதைவுபிறர்க்கின்மையாவது தனதுநிறை யழிவு புறத்தார்க்குப்புலப்படாமல் தன்மனத்தைநிறுத்தல். (உஉ0)

கண்ணெனும்வலையிலுள்ளான்கையகப்பட்டிருந்தான்
பெண்ணெனுமுழலைபாயும்பெருவனப்புடையநம்பி
எண்ணின்மற்றியாவனுங்கொலென்னிதிற்படுத்தவேந்தல்
ஒண்ணிறையுருவச்செந்தீயுருவுகொண்டனையவேலான்.

இ - ள். என்இதில் படுத்தவேந்தல் — என்னைவருத்தத்திலே யகப்படு த்தின பெருமையிற்சிறந்து நின்றவனாகிய, ஒள்நிறைஉருவம் செந்தீஉருவு கொண்டால் அனையவேலான்—ஒளிநிறைந்த உருவத்தையுடைய செவந்ததீ யானது ஒருருவுகொண்டாலொத்த வேலையுடையஇக்காளை, கண்என்னும்வ லையின்உள்ளான்—தனதுஞானக்கண்ணென்கிற வலையினைவீசி நமதுகுலமு தலியவற்றைநோக்கும்படி யவ்வலையிலிருக்கின்றான், கைஅகப்பட்டிருந்தா

(அஞ்ஞானத்தாலெல்லாம் நோக்குதலால்) சிறுமையிலகப்பட்டுநிற்கின்றான், பெண்ணென்னும் உழலைபாயும் பெருவனப்புஉடையநம்பி— (தன்மேல் விருப்பமில்லாமையால்) நமதுபெண்தன்மையென்னும் சுழற்சிபாயாநிற்கும் மிக்க அழகையுடையநம்பி, எண்ணில்—ஆலோசிக்கில், யாவன்ஆம்கொல்— இவன்தேவனோ; மகனோ; யாம்அறியோம்.

ஞானம் அறிவு. அஞ்ஞானம் அவள் குலமுதலியவற்றை யறியாமை. கைசிறுமை. அதாவது அறியாமையாகிய சிறுமை. "கைக்குடை, கை வாய்க்கால்" என்றதுபோல. பெண்மைஎன்றது பெண்ணென்றது குணத்தைக்குணியாகக்கூறு மரபுவழுவமைதி. யாழால்வென்றபின்னல்லது அவனுக்கு இவள்மேல்விருப்பஞ்செல்லாதாதலால் பெண்ணெனுமுழலைபாயுமென்றாள். எண்ணின்மற்றியாவனாங் கொல்என்பது ஐயமென்னுமெய்ப்பாடு.

யாவனேயானுமாகவருநிறைக்கதவநீக்கிக்
காவலென்னெஞ்சமென்னுங்கன்னிமாடம்புகுந்து
நோவவென்னுள்ளம்யாத்தாய்நின்னையுமாலையாலே
தேவரிற்செறியயாப்பன்சிறிதிடைப்படுகவென்றாள்.

இ - ள். யாவனேஆயினும்ஆக—தேவனாயினுமாக மகனாயினுமாக, காவல் அருநிறைகதவம்நீக்கி—காவலாகிய பெறுதற்கரிய நிறைக்கதவினைத்திறந்து, நெஞ்சம்என்னும் கன்னிமாடம்புகுந்து—தனதுமனமென்னுங் கன்னிகாமாடத்திற்குடியேறி, என்உள்ளம் நோவயாத்தாய்—என்மனம் வருந்தப்பிணித்தாய், நின்னைஉம்மாலையால்— உன்னையும்எனதியல்பால் (மேற்சூட்டுமாலையால்) தேவரில் செறியயாப்பன்—தேவரைப்போல இமைகொட்டாது நிற்க நான்பிணிப்பேன், சிறிதுஇடைபடுகஎன்றான்—இனிச்சிறிதுபொழுது கழிகவென்றுகூறினள்.

யாவனேயானுமாகவென்றது ஆராய்ச்சியென்னும் மெய்ப்பாடு. நிறை என்றது கற்பினை. தாங்கூடிவாழும்போது நிலைபெறுதலின் நீட்டித்திருத்தலைஎதிரதுபோற்றலால்முன்னர்க்கூறினார், காட்சியில் "திருவளர்தாமரை" என்னுந்திருக்கோவையுள் "அனநடைவாய்ந்து" என்றாற்போல. ஆயின் இடைக்குறை. யாத்தாய்என்றது என்றதுஎதிர்பெய்து பரிதலென்னுமெய்ப்பாடு. (௨௨௨)

கழித்தவேலேறுபெற்றகடத்திடைப்பிணையின்மாழ்கி
விழித்துவெய்துயிர்த்துமெல்லநடுங்கித்தன்றோழிகூந்தல்
இழுக்கிவண்டிரியச்சேர்ந்தோர்கொடிபுல்லுங்கொடியிற்புல்லி
எழிற்றகைமார்பற்கின்யாழிதுவுய்த்துக்கொடுமோவென்றாள்.

இ - ள். கழித்தவேல் ஏறுபெற்ற—உறையினின்றுங்கழித்தவேலேறுதலைப்பெற்ற, கடத்துஇடைபிணையின்மாழ்கி—காட்டினிடத்துள்ளமான்போலமயங்கி, விழித்துவெய்துயிர்த்துமெல்லநடுங்கி—விழித்துப்பெருமூச்செறிந்து மெல்லநடுக்கமுற்று, தன்தோழிகூந்தல் வண்டுஇழுக்கிஇரியசேர்ந்து — தனது தோழியாகிய வீணாபதியின் கூந்தலிலுள்ள வண்டுகள்கெடும்படி சேர்ந்து,

ஓர்கொடிபுல்லும் கொடியில்புல்லி—ஒருபூங்கொடியைத்தழுவுங் கொடியைப்போலத்தழுவிநோக்கி, எழில்தகைமார்பற்கு—தோற்றத்தின்பொலிவையமைந்த மார்பையுடைய இக்காளைக்கு, இன்யாழ்இது உய்த்துகொடு என்றான்- (அவன்கல்வியறிதற்குப் பலயாழையுஞ்செலுத்திப்பின்பு) இந்தஇனியயாழினைக்கொடுவென்றுதத்தைகூறினாள்.

மெல்லவழுக்கி எனப்பாடமாயின் மெல்ல அங்குநின்றும் நீங்கியெனப்பொருள்கொள்க. மாழ்கிவிழிதது உயிர்த்து என்றது இடுக்கண்மெய்ப்பாடு. ஏறுமுதனிலைத்தொழிற்பெயர், கொடி இரண்டாமவேற்றுமைத் தொகையாதலால் "இயல்பின்விகாரமும்" என்றபுறனடைச் சூத்திரத்தால், வருமொழிவல்லெழுத்துஇயல்பாயிற்று மாழ்கிஇறநதகாலவினையெச்சம் மாழ்குபகுதி. மோமுன்னிலையசை. (உஉ௩)

ஐஞ்சீரால்வந்தநாலடித்தரவுகொச்சகம்.

தடங்கணாள்பணியினாற்றான்வீணையொன்றினை
நெடுங்கணாளெழினியைநீக்கியுய்த்துநீட்டினாள்
மடங்கலன்னமொய்ம்பினான்வருகவென்றுகொண்டுதன்
கிடந்தஞானத்தெல்லையைக்கிளக்கலுற்றுநோக்கினான்.

இ - ள். தடகண்ணாள் பணியின் ஆற்றான்—பரந்தகணகளையுடைய தத்தையினே வலின்வகையால், அ வீணைஒன்றினை— முன்பு அவள்பணித்த வீணையொன்றை, நெடுங்கண்ணாள் எழினியைநீககி உய்த்துநீட்டினாள்—நீண்டகண்களையுடைய தத்தை உறையைநீக்கிச்செலுத்திககொடுத்தாள், மடங்கல்அன்னமொய்ம்பினான்—சிம்மேற்றையொத்த வலிமையையுடையசீவகன், வருகஎன்றுகொண்டு— இங்குவருகவென்றுகொண்டு, தன்கிடந்த ஞானத்து எல்லையை—தனதுபரந்துகிடந்த ஞானத்தினளவை, கிளக்கலுற்றுநோக்கினான்—அறிவிக்கத்தொடங்கிப்பார்த்தான்.

(ந - ரை.) தத்தைய தேவலாலே அவ்வீணுபதிதான் அவ்வெழினியையுடைய வீணையொன்றினையும்நீக்கிவைத்து ஒழிந்தவீணைகளைச் செலுத்திக்கொடுத்தாள்; அப்பொழுது மொய்ம்பினானும் இங்ஙனேவருகவென்றுகூறி; அவற்றைக்கைக்கொண்டுதனதுபரந்துகிடந்த ஞானத்தினளவையறிவிக்கலுற்றுநோக்கினான். (உஉ௪)

அறுசீரான்வந்தநாலடித்தரவுகொச்சகம்.

சுரந்துவானஞ்சூன்முதிர்ந்துமெய்நொந்தீன்றதுளியேபோற்
பரந்தகேள்வித்துறைபோயபைந்தார்மார்பன்பசும்பொன்யாழ்
நரம்புதேனார்த்தெனத்தீண்டிநல்லாள்வீணைபொல்லாமை
இருந்தமுலையாணின்றானைநோக்கியிசையினிதுசொன்னான்.

இ - ள். வானம்சூல்முதிர்ந்து மெய்நொந்துசுரந்துஈன்றதுளியேபோல்- மேகஞ்சூல்முதிர்ந்து உடம்புவருந்திச்சுரந்து பெய்தபெருமழை யெத்துறையிலுஞ் சென்றுபயன்படுதல்போல, பரந்தகேள்விதுறை போயபைந்தார் மார்பன்— பரந்தநூற்கேள்விகளெல்லாமுற்றக்கற்ற பசியமாலையையணிந்த மார்

லையுடையசீவகன், பசும்பொன்யாழ் நரம்புதேன் ஆர்த்தால் என்ன நீண்டிஇ சையின் — பசியபொன்னாலமைந்த வீணையினரம்பினைவண்டுகளொலித்தாற் போலத் தடவிஇசையால், நல்லாள்வீணை பொல்லாமை — தத்தையின்வீணை யினுள்ளகுற்றத்தை, இருந்தமுலையாள்நின்றுனை நோக்கி — எழாமலுள்ளடங்கிய முலையையுடைய வீணாபதியை நோக்கி, இதுசொன்னான் — இது கூறுகி ன்றான்.

(ந - ரை.) நோக்கி அமமரர்பன் அவற்றினரம்பைத் தேனார்த்தெனத்தெ றித்து அவற்றினிசையாலே, அவள்வீணைகளின் பொல்லாமையிது வென் றுவீணாபதிநின்ற வளைநோக்கிச்சொன்னான்.

பொல்லாமையாவது நரம்பினிசையாற்பிறந்த குற்றம். இன்பமிலோ சையும், அளவிறந்திசைத்தலும், மழுங்கியிசைத்தலும், சிதறியுச்சரித்தலுமாம்.

நீர்நின் றிளகிற் றிதுவேண்டா நீரின்வந்த திதுபோக
வார்நின் றிளகுமுலையினாய்வாட்புண் ணுற்ற திதுநடக்க
ஓருருமேறி துவுணடதொழிகவொணபொனுருகொடியே
சீர்சால்கணிகைசிறுவன்பொற்சிறப்பின் றம்மவிதுவென்றான்.

இ - ள். வார்நின்று இளகுமுலையினாய் — கச்சுவேண்டாதமுலையினாய், ஒண்பொன்உருகொடியே — ஒள்ளியபொன்பரந்தகொடிபோல்வாய், இதுநீ ர்நின்று இளகிற்று — இவ்வீணையின் தண்டு நீரில்நின்றிளகியதாதலால் வேண் டா, இதுநீரின்வந்ததுபோக — இதுநீரில்நின்றழுகியதாதலாற்போக, இதுவா ள்புண்ணுற்றது நடக்க — இந்தமரம் வாளால்வெட்டுப் பட்டுப்புண்பட்டதாத லால் இந்தயாழ்நடக்க, இது உரு மேறுஉணடது ஒழிக — இது இடியேறுண் டதாதலாலொழிக, இதுசீரசால்கணிகை சிறுவன்போல்சிறப்புஇன்று — இது அழகுமிக்க விலைமாதின்புத்திரன்போலச் சிறப்பில்லாத தென்றுகூறினான்.

(ந - ரை.) எங்ஙனமென்னில் முலையினாய், இந்தமரம் மெல்கிற்றுதலி னிவ்வியாழ்வேண்டா; இந்தமரம்அழுகினதாதலால் இவ்வியாழ்போக; இந்த மரம்புண்ணுற்றதாதலால் இவ்வியாழ்நடப்பதாக; இந்தமரம் உருமேறுண்ட தாதலால் இவ்வியாழொழிவதாக வென்றுசொன்னான்.

கட்ட ஆதாரமில்லாமையால் வாரநின்றிளகு முலையெனவும், நிலமயக்க ந்தோன்றச் சீர்சால்கணிகை சிறுவன் எனவுங்கூறினார். வேண்டா, போக, நடக்க, ஒழிகவென்றன இகழ்ச்சிமேல்நின்றன. ஓடு அசைநிலையிடைச் சொல். பொன்என்றதுதேமல்மேல் இலக்கணையாகநிற்றலால் உருவகவுயர் வுநவிற்சியணி. (உஉசு)

கல்சேர்பூண்கொள்கதிர்முலையாய்காமத்தீயால்வெந்தவர்போற்
கொல்லையுழவர்சுடப்பட்டுக்குரங்கிவெந்ததிதுகளிறு
புல்லமுரிந்ததெனப்போக்கித்துமமார்ந்ததிதுறையுள்
நல்யாழ்நீட்டவதுகொண்டுநங்கைநலத்ததிதுவென்றான்.

இ - ள். கல்சேர் பூண்கொள்கதிர் முலையாய் — மலையையொத்த ஆபர ணம்பூண்ட விளக்கம்வாய்ந்த முலையையுடையவீணாபதியே, காமம்தீயால்வெ ந்தவர்போல் — காமமாகிய தீயால்வெந்தவனைப்போல, இதுகொல்லைஉழவர்

சுடப்பட்டுகுரங்கிவெந்தது—இதுகொல்லையிலுழவர்களால்சுடப்பட்டுத்தாழ்ந்துவெந்தது,களிறுபுல்லமுரிந்தது இதுஎனபோக்கி—யானைதழுவமுரிந்ததிதுவென்றுபோக்கி,தாமம்ஆர்ந்ததுகில்உறைஉள்நல்யாழ்நீட்ட, புகைபோற்கரிய உறையைநீத்தநல்லயாழொன்றினைநீட்ட, அதுகொண்டு இதுநங்கைநலத்தது என்றான் — அந்தயாழினைவாங்கி இந்தயாழ்தத்தையின் குலமுதலியநலத்தினையுடையது என்றுகூறினான்.

(ந - ரை) அங்ஙனங்கூறிப்பின்னுங்கதிர் மூலையாய், இம்மரம்வெந்தது; இம்மரம்முரிந்ததுஎன்று ஒழிந்தயாழ்களையும் போக்குதலால் நல்லயாழைநீட்ட, அதனைவாங்கிக்கொண்டு நங்கைநலத்ததிதுவென்றானென்க.

போக்கிஎன்பதுகாறுமரக்குற்றங்கூறினான். நலமாவன "சொல்லியகொன்றைகருங்காலிமென்முருக்கு—நல்லகுமிழ்ந்தணக்குடனே—மெல்லியலாய்-உத்தமமானமரங்களிவையென்றார்-வித்தகயாழோர் விதி" இதனாலுணர்க.

குரங்கி—இறந்தகாலவினையெச்சம் குரங்குபகுதி. (உஉஎ)

இருநிலமடந்தையீன்றதிருவிசும்பென்னுங்கைத்தாய்
திருநலமின்னுப்பொன்ஞாண்முகின்முலைமாரி தீம்பால்
ஒருநலங்கவினியூட்டவுண்டுநோய்நான்குநீங்கி
அருநலங்கவினிவாள்வாயரிந்திதுவந்ததென்றான்.

இ - ள். இருநிலமடந்தை ஈன்றது இருவிசும்பு என்னும் கைத்தாய்—பெரிய நிலமகளாற் பெறப்பட்ட மரம், பரந்த ஆகாயமென்னுஞ் செவிலித்தாய், திருநலம்மின்னு பொன் ஞாண்முகில் முலைமாரி தீம்பால் — அழகிய நலத்தையுடைய மின்னலாகிய பொன்ஞாணினையுடைய மேகமாகிய முலையின் மாரியாகிய இனியபாலை, ஒரு நலம் கவனி ஊட்ட—விடாது தொடர்ந்த அன்பாற்பொலிந் துண்பிக்க, உண்டு நோய் நான்கும் நீங்கி — அப்பாலையுண்டு நான்குநோயினின்றும் நீங்கி, அருநலம் கவினி—அடைதற்கரியவளத்தால் வளர்ந்து, வாள்வாய் அரிந்து இது வந்தது என்றான்—வாளின் வாயாலரிந்து வந்தது இந்த யாழென்று கூறினான்.

(ந - ரை.) மண்மகளீனப்பட்ட மரம், விசும்பென்னுஞ் செவிலித்தாய் அழகிய நலத்தையுடைய மின்னாகிய பொன்ஞாணினையுடைய முகிலாகிய முலையின் மாரியாகிய இனியபாலை முழுவலன்போடே யூட்ட, உண்டு நோய் நீங்கி வளர்ந்து வாளின்வாயா லரிந்துவந்தது இவ்வியாழ என்றானென்க.

ஈன்றது வினைமுற்றுப்பெயர். நோய் நான்காவன வெயிலுங்காற்றும் நீரும் நிழலுமிகுதல். நிலமாகிய நற்றாயன்பு விசும்பென்னுஞ் செவிலித்தாய்க்குப் பிறந்து வளர்த்தமைதோன்ற ஒருநலம் என்றார். அரிந்து வந்து "உரற்கால் யானையொடித்துண்டெஞ்சியயா" என்றாற்போல அம்மரங்களினொருறுப்பி லரியவந்தது என நிற்றலால் சினை வினை முதலொடு முடிந்தது. யானையொடித்துண்ண எஞ்சியயா என்பதுபொருள். (உஉஅ)

நீர்த்தொடைநரம்பின்றீமைசிதர்தலாப்பொழுதுமோதிப்
பூந்தொடையரிவைகாணப்புரிநெகிழ்த்துரோமங்காட்டத்

தேங்கமழோதிதோற்றாள்செல்வனுக்கென்னமைந்தன்
வாங்குபுநபுலன்கையுள்வார்புரிநரம்புகொண்டான்.

இ-ள். மைந்தன்—சீவகன், தீம்தொடை நரம்பின் தீமை — இனிய நரம்பின் குற்றத்தை, சிறிது அல்லாத பொழுதும் ஓதி — நெடும்பொழுதெல்லாமாராய்ந்து, பூந்தொடை அரிவைகாண — மலர்மாலையை யணிந்த தத்தைகாணும்படி, புரிநெகிழ்ந்துஉரோமம் காட்ட—முறுக்கினையுடைத்து நரம்பிற்கிடந்த மயிரினைக்காட்டலால், செல்வனுக்கு தேம்கமழ் ஓதிதோற்றாள் என்ன—அச்சீவகனுக்குத தேன்மணக்குங் கூந்தலையுடைய அத்தத்தைதோற்றனளென்று கண்டோர் கூற, நபுலன் கையுள் வார்புரி நரம்பு வாங்குபு கொண்டான்— நபுலன்கையில் நீண்ட புரியமைந்த நரம்பினை வாங்கிக்கொண்டனன்.

(ந-ா.) மைந்தன், நரம்பின் றீமையைநெடும்பொழுதெல்லாமாராய்ந்து கூறி அதற்கேற்ப அரிவைகாணும்படி முறுக்கையுடைத்து அதிற்கிடந்த மயிரைக்காட்டுதலின், அவையுள்ளோர் ஓதிஇனிச்செல்வனுக்குத் தோற்றாளென்றுநிற்க; அவன்நபுலன்கையில் நரம்பைவாங்கிக்கொண்டானென்க.

நந்தட்டன்முதலியதோழர்போர்க்கோலத்தோடு புறத்தில்நின்றாராதலால்நபுலன்கையில் நரம்பிருந்ததென்றார். (உஉக)

பணிவரும்பைம்பொற்பத்தர்பல்வினைப்பவளவாணி
மணிகடைமருப்பின்வாளார்மாடகவயிரத்தீந்தேன்
அணிபெறவொழுகியன்னவமிழ்துறழ்நரம்பினல்யாழ்
கணிபுகழ்காளைகொண்டுகடலகம்வணக்கலுற்றான்

இ-ள் பணிவரும் பைம்பொன் பத்தர்— வாசித்தற்றொழிலிலேவரும் பசியபொன்றாலமைந்த பத்தரும், பல்வினைபவள ஆணி—பலதொழில்படச்செய்த பவளத்தாலமைந்த ஆணியும், மருப்பின்கடை மணிவாள்ஆர் வயிரம்மாடகம்—யானைக்கொம்பாற்கடைந்த அழகியஒளிநிறைந்த வெள்ளியமாடகமும், தீமதேன்அணிபெற வொழுகிஅன்ன அமிழ்துஉறழ் நரம்பின்நல்யாழ்—இனியதேன்வரிசையாக ஒழுகினாலொத்த அமுதினையொத்த நரம்பினையுமுடைய விதிவழிசெய்தவீணையை, கணிபுகழ்காளைகொண்டு கடல்அகம்வணக்கலுற்றான்—நூலிறகைதேர்ந்த வறிஞர்புகழப்பட்ட சீவகன்கையிலேந்தி யுலகினைவளைவிக்கத்தொடங்கினன்

(ந-ா.) நூல்போனவன் புகழப்படுங்காளை பத்தர்முதலியவற்றையுடைய யாழைக்கொண்டு உலகினைவளைவித்த லுற்றானென்க.

மாடகம்நால்விரள வானபாலிகை வடிவாய்நரம்பை வலித்தல்மெலித்தல்செய்யுங்கருவி. வணக்கலுற்றான் ஒருசொல். (உஙo)

குரல்குரலாகப்பண்ணிக்கோதைதாழ்குஞ்சியான்றன்
விரல்கவர்நதெடுத்தகீதமிடறெனத்தெளிதறேற்றார்
சுரரொடுமக்கள்வீழ்ந்தார்சோர்ந்தனமாவும்புள்ளும்
உருகினமரமுங்கல்லுமோர்த்தெழீஇப்பாடுகின்றான்.

இ - ள். கோதைதாழ் குஞ்சியான்—மாலைதங்கிய சிகையையுடையசி வகன், குரல்குரல்ஆகபண்ணி—செம்பாலையைப்பண்ணி, தன்விரல்கவர்ந்து எடுத்தகீதம்மிடறு என்னதெளிதல்தேற்ருர்—தன்விரலாலேகவர்ந்தெடுத்தபா ட்டைக் கண்டமெனக்கருதிதெளியாது, சுரா ஒடுமக்கள்வீழ்ந்தார்—தேவரு மக்களுந்தம் மில்மயங்கிவீழ்ந்தாரகள்; மாவும்புள்ளும்சோர்ந்தன— கின்னர முமசுணமுஞ்சோர்ந்தன, மரமும்கல்லும்உருகின— மரமுங்கல்லு முருகின, ஒர்த்துஎழுவி பாடுகின்ருன்—வாசித்தநிலையைக்குறித்து அதற்கேற்ப ஆளாப னஞ்செய்துபாடாநின்ருன்.

(ந - ரை.) குஞ்சியான் செம்பாலையைப் பண்ணித்தன் விரலாலேகவர்ந் தெடுத்த பாட்டைக்கண்டமென்றுகருதித தெளிதலையறியாராய்த் தேவருமக்களுந்தம்மில்வாசியின்றி வீழ்ந்தார்கள், கின்னரமும் அசுணமுஞ்சோர்ந்தன; மரமுங் கல்லுமுருகின; அங்ஙனம்வாசித்த நிலையைக்குறித்து அதற்கேற்ப ஆளாபனஞ்செய்து பாடாநின்ருனென்க.

குரல்குரலாகப்பண்ணிய செம்பாலைஅருகியன்மருதம். தெளிதறேற்ரு ர்முற்றெச்சம். (உகக)

ஒருபொருள்மேல்

இடைமடக்காய்வந்ததாழிசைக்கொச்சகவொருபோகு.

கன்னிநாகங்கலங்கமலங்கி—மின்னுமிரங்குமழையென்கோயான்
மின்னுமழையின்மெலியுமரிவை--பொன்னுண்பொருதமுலையென்கோயான்

இ - ள் யான—நான், கன்னிநாகம் மலங்கி கலங்க — கன்னியாகிய பாம்பு வருந்திக்கலங்கும்படி, மழை மின்னும் இரங்கும் என்கோ—மேகமி ன்னுகிறகும் ஒலிககாநிறகுமென்று கூறவேணடுமோ, யான் பொன்நாணபொ ருதமுலை அரிவை மின்னும மழையின் மெலியும் அரிவை என்கோ — நான் பொன்னுறசெய்த நாணுேடு போாசெய்த முலையினையுடைய என்தலைவி அம் மேகத்தால் மெலிவாளென்று கூறவேண்டுமோ (நீயேயறிதி.)

(ந - ரை.) யான் கன்னியாகிய பாம்பு மலங்கிக்கலங்கும்படி மழைமி ன்னுகிற்கும் இரங்காநிர்குமென்கோ; யான் முலையினையுடைய அரிவை அம் மழையால் மெலியுமென்கோ வென்க

கூதிர்ப்பருவத்தில்வருவேனென்று பிரியக்கருதிய தலைவனுக்குத்தோழி அதற்கு முன்னிகழ்கின்றகாரின்றன்மையும், அதுதலைவியை வருத்துந் தன் மையும் யான் கூறவேண்டுமோநீயே யறிவாயல்லவா வென்று பொருள் மேற்செல்லுந்தலைவன் செலவைத்தடுத்தலால் செலவழுங்குவித்தலென்னுந் துறை. என் கு தன்மை யொருமை யெதிர்காலவினைமுற்று என் பகுதி, குதன்மையொருமை விகுதி இது முதல் மூன்றுசெய்யுளும் ஒருதொடர்.

கருவிவானங்கான்றபுயலின்—அருவியாரற்றுமலையென்கோயான்
அருவியாரற்றுமலைகண்டழுங்கும்—மருவாரசாயன்மனமென்கோயான்.

இ - ள். யான் கருவி வானம் கான்ற புயலின்—நான் உலகிற்குக்கார ணமாகிய மேகஞ்சொரிந்த நீர்த்துளியால், அருவி அரற்றும் மலை என்கோ— அருவியொலிக்குமலையென்று சொல்லவேண்டுமோ, யான் அருவி அரற்றும்

மலைகண்டு மருவு ஆர் சாயல்மனம்—நான் அருவியொலிக்கு மலையைக்கண்டு மருவுதல் நிறைந்த மென்மையையுடையாள் மனம், அழுங்கும் என்குறு—வருந்துமென்று சொல்லவேண்டுமோ (நீயேயறிதி.)

(ந - ரை.) யான் புயலால் அருவியரற்று மலையென்கோ; யான் அதனைக்கண்டு மருவுதல் நிறைந்த சாயல் மனமழுங்குமென்கோவென்க. (உகூ)

வானமீனினரும்பிமலர்ந்து—கானம்பூத்தகாவென்கோயான்
கானம்பூத்தகார்கண்டழுங்குந்—தேனார்கோதைபரிந்தென்கோயான்.

இ - ள். யான்கார்—நான் மேகத்தினால், கானம் வானம் மீனின் அரும்பிமலர்ந்து பூத்த என்கோ—காடானது ஆகாயத்திற்றோன்றிய நாண்மீனைப்போல அரும்பி மலர்ந்தது என்று சொல்லவேண்டுமோ, யான் தேன் ஆர் கோதைபரிந்து— நான்தேனிறைந்த கூந்தலையுடையாள் வருந்தி — கார்கானம் பூத்தகண்டு—மேகத்தால் காடுமலர்ந்தனவற்றைப்பார்த்து, அழுங்கும் என்கோ—வருந்துவாளென்று சொல்லவேண்டுமோ (நீயேயறிதி.)

(ந - ரை.) யான் காரினாலே கானம்பூத்தனவென்கோ; யான் அதனைக் கண்டு கோதைபோல் வாள்பரிந்தழுங்குவா ளென்கோ.

பூத்தஎன்னும் அஃறிணைபபலவின்பாற்படர்க்கைவினைமுற்றிரண்டனுள் முன்னது முற்று. பின்னது வினைமுற்றாலணையும்பெயர். (உகூச)

அறுசீரால்வந்தநாலடித்தரவுகொச்சகம்.

அண்ணலியாழ்நரம்பையாய்ந்துமணிவிரறவழ்ந்தவாறும்
பண்ணியவிலயம்பற்றிப்பாடியவனப்புநோக்கி
விண்ணவர்வீணைவீழ்த்தார்விஞ்சையாகனிந்துசோர்ந்தார்
மண்ணவர்மருளின்மாய்ந்தார்சித்தருமனத்துள்வைத்தார்.

இ - ள். அண்ணல்மணிவிரல் யாழ்நரம்பை ஆய்ந்து—சீவகனது அழகிய விரல்வீணையிற்பூட்டியநரம்பினையாராய்ந்து, தவழ்ந்தஆறும்—வாசித்தபடியையும், பண்ணியஇலயம்பற்றி பாடியவனப்புநோக்கி—அதில்தான்பண்ணிய செலவைக்குறிக்கொண்டு கண்டத்தாற்பாடிய அழகையுட்கொண்டு, விண்ணவர்வீணைவீழ்த்தார— கின்னரர்கள் வீணையைக்கைவிட்டார்கள், விஞ்சையர்கனிந்துசோர்ந்தார்—வித்தியாதரர்கள் மனமுருகி மெய்சோர்ந்தார்கள், மண்ணவர்மருளில் மாய்ந்தார—நிலவுலகிலுள்ளவர்கள் தாங்கேட்டறியாமையால் மயங்கிஅறிவுகெட்டார்கள், சித்தரும் மனத்துஉள்வைத்தார்—இருடிகளும் இதுவும் ஒருபேரின்பமாயிருந்ததென்று மனத்திற்கொண்டனர்.

(ந - ரை.) தலைவனதுவிரல் நரம்பையாராய்ந்து வீணைவாசித்தபடியையும், அதில்தான்பண்ணிய செலவைக்குறிக்கொண்டு மிடற்றாற்பாடிய வனப்பையுமுட்கொண்டு கின்னரர்வீணையைக்கைவிட்டார்; விஞ்சையர் நெஞ்சுருகிமெய்சோர்ந்தார், மக்கள்தாமறியாதது கேட்டமயக்கத்தாலே யறிவுகெட்டார்; இருடிகளுமிதுவும்பேரின்பமாயிருந்ததென்றுட்கொண்டாரென்க.

செலவுஎன்றது முன்னர்க்கூறியகலைத்தொழிலில் ஒன்று. இதனால்முன்யாழ் வாசித்ததன்மையையும், அதற்கேற்பப்பாடின தன்மையையுங்கேட்டோர் வியந்தவகைகூறினார். (உகூரு)

வீழ்மணிவண்டுபொய்ந்துமிதித்திடக்கிழிந்தமாலை
சூழ்மணிக்கோட்டுவீணைச்சுகிர்புரிநரம்புநம்பி
யாழ்மணிமிடறுமொன்றாய்ப்பணிசெய்தவாறுநோக்கித்
தாழ்மணித்தாமமார்பிற்கின்னராசாமபினாரே.

இ - ள். வீழ்மணிவண்டுபொய்ந்து மிதித்திடகிழிந்தமாலை— (மதுவை) விரும்பிய கரியவண்டுகள்குதித்து மிதித்தலால் அலர்ந்தமாலையினையும், மணி சூழ்கோடுகைவீணை— இரத்தினமாலைசூழ்ந்த கோட்டையுடையவீணையில், சுகிர்புரிநரம்பு—சீவிமுறுக்கின நரம்பும், நம்பி யாழ்மணிமிடறும் ஒன்றாஆய் பணிசெய்தஆறுநோக்கி—சீவகன்முறையாக அழகியகண்டமும் ஒன்றாகியே வல்செய்த வகையையுட்கொண்டு, மணிதாமம் தாழ்மாரபின்கின்னரர் சாம்பி னார்-முத்துமாலைதங்கிய மார்பினையுடைய கின்னரர்கள் மேனிவாடினார்கள்.

(ந - ரை.) மதுவைவிரும்பிய வண்டுகுதித்துமிதித்தலால் அலர்ந்த மாலையினையுங் கோட்டினையுமுடைய வீணையிற்சீவி முறுக்கினநரம்பும் நம் பிமிடறுமொன்றாயேவல்செய்தபடியை யுட்கொண்டு கின்னரர்மேனிவா டினாரென்க.

இதனால் நரம்பும்கண்டமுமுடனிகழ்ந்தமையைக் கேட்டோர்வியந்தவ கையைக்கூறினார். சுகிர்தல்சீவுதல். மிதித்திட காரணத்தின்மேல்நிற்றலால் இறந்தகாலவினையெச்சம். மிதித்திடுபகுதி (கோடு) வீணையினுறுப்புள் ஒன்று.

விண்ணவர்வியப்பவிஞ்சைவீரர்கள்விரும்பியேத்த
மண்ணவர்மகிழவான்கட்பறவைமெய்ம்மறந்துசோர
அண்ணறானநங்கனாணப்பாடினானரசரெல்லாம்
பண்ணமைத்தெழுதப்பட்டபாவைபோலாயினாரே.

இ - ள். அண்ணல்தான்—சீவகன், விண்ணவர்வியப்ப—கின்னரர்கள திசயிக்கவும், விஞ்சைவீரர்கள் விரும்பிஏத்த — வித்தியாதரர்கள் விரும்பித் துதிக்கவும்; மண்ணவர்மகிழ—நிலவுலகிலுள்ளவர் மகிழ்கூரவும, வான்கண் பறவைமெய் மறந்துசோர — ஆகாயத்திற்சஞ்சரிக்கும் பறவைகள்உடம்பு அவசமாகிச்சோரவும், அநங்கன் நாணபாடினான்—மன்மதனைநாணவும்பா டினான், அரசர்எல்லாம் பண்அமைத்துஎழுதப்பட்ட பாவைபோல்ஆயினார்— (அதுகேட்ட) அரசர்களெல்லாம் எழுதும்படிசமைத்தெழுதப்பட்ட பதுமை போலானார்கள்.

(ந - ரை.) அண்ணறான், வியப்ப, ஏத்த, மகிழ, சோர, நாணப்பாடி னான்; அதுகேட்ட அரசரெல்லாம் எழுதும்படிசமைத்து எழுதப்பட்டபா வைபோலாயினாரென்க.

இதனாற்கருவியை நீக்கிக்கண்டத்தாற் பாடக்கேட்டோர் வியந்ததைக் கூறினார். வியப்பமுதலிய நிகழ்காலவினையெச்சங்களில் எண்ணும்மைதொ குத்தல். (உ௬எ)

தாழிகைக்கோச்சகவோநபோது.

பருந்துமதனிழலும்பாட்டுமெழாலும்
திருந்துதார்ச்சீவகற்கேசேர்ந்தனவென்றெண்ணி

விருந்தாகயாழ்பண்ணிவீணைதான்றோற்பான்
இருந்தாளிளமயில்போலேந்திலைவேற்கண்ணாள்.

இ - ள். ஏந்து இலைவேல் கண்ணாள்—பகைவரையேந்திய தகட்டுவடிவாகிய வேல்போன்ற கண்களையுடைய தத்தை, பருந்தும் அதன் நிழலும்-பருந்தும் அப்பருந்தினிழலும்போன்ற, பாட்டும் எழாலும்—பாட்டும் யாழ்வாசினையும், தார் திருந்து சீவகற்கே விருந்து ஆகசேர்ந்தன என்று எண்ணி-மாலையாற்றிருந்திய சீவகனிடத்தே விருந்தாகச் சேர்ந்தனவென்று கருதி. இளமயில்போல் யாழ்பண்ணி வீணை தான் தோற்பான் இருந்தாள்—இளமயிலைப்போல யாழைப்பண்ணி வாசித்து மதுரகீதத்தில் தோல்வியடைய இருந்தனள்.

(ந - ரை) மயில்போலிருந்தாள் கண்ணாள் அவள் யாழையும் பாட்டையும் யான் தோற்றற்குப் பருந்தும் அதனிழலும்போலப் பாட்டும் யாழ்வாசினையுஞ்சீவகற்கேவிருந்தாகச் சேர்ந்தனவென்று கருதி, யாழைப்பண்ணிவாசித்து மதுரகீதத்தில் அவனை யொத்திலளாய்.

முறையே யுயர்ந்தவ்விடத்தில்நின்றாராய்ந்து பின்னும்அம்முறையேமேன்மேலுயர்கின்றாற்போலப்பாடவேண்டுதலால் பருந்து மதனிழலும்எனவும், மயில்மேகத்தைக் கருதியிருத்தல்போல இவளும் புணருநாளினைக்கருதியிருத்தலால் மயில்போலிருந்தாளெனவுங் கூறினார். கு உருபுமயக்கம். (௨௬அ)

கோதைபுறந்தாழக்குண்டலமும்பொற்றோடுங
காதினொளிர்ந்திலங்கக்காமர்நுதல்வியர்ப்ப
மாதரெருத்தமிடங்கோட்டிமாமதுர
கீதங்கிடையிலாள்பாடத்தொடங்கினாள்.

இ - ள். கிடை இல்லாள்—ஒப்பில்லாத தத்தை, கோதைபுறம்தாழ—கூந்தலிலணிந்த மாலை புறத்திற்சோரவும், குண்டலமும் பொன்தோடும் காதின் ஒளிர்ந்து இலங்க—குண்டலமும் பொன்னாலமைந்த தோடுங்காதில் விளங்கி யொளிசெய்யவும், காமர் நுதல் வியர்ப்ப—அழகியநெற்றியில்வேர் வரும்பவும், மாதர்எருத்தம்இடம் கோட்டி—அழகியபிடரையிடப்பால் வளைத்து மாமதுரகீதம்பாடதொடங்கினாள்—அம்மதுரகீதத்தைப்பாடத்தொடங்கினாள்

(ந - ரை.) கோதைதாழ, இலங்க, வியப்ப, கோட்டி, அம்மதுரகீதத்தைப்பாடத்தொடங்கினளென்க.

தன்னை அவனோக்கியவழி அச்சமுநாணமுமொருசேரவந்தமையால்நுதல்வியர்ப்ப என்றதுமெய்ப்பாடு. "புகுமுகம்புகுதல் பொறிநுதல்வியர்த்தல்" என்னும்மெய்ப்பாட்டியற் சூத்திரத்தாலுணர்க. (௨௬௯)

ஒருபொருள்மேல்வந்த தாழிசைக்கொச்சகவொருபோகு.

இலையாரெரிமணிப்பூணேந்துமார்லையும்
சிலையார்சிறுநுதலுஞ்செம்பசலைமூழ்க
மலையாரிலங்கருவிவாள்போலமின்னுங்
கலையார்தீஞ்சொல்லினாய்காணார்கொல்கேள்வர்.

இ - ள். கலைஆர்தீஞ்சொல்லினய்—இசையால்நிறைந்த சொல்லையுடையதோழி, இலைஆர்எரிமணி பூண்ஏந்துமுலையும்—தகட்டுவடிவாய் நிறைந்ததீப்பொறியையொத்த இரத்தினாபரணத்தையேந்திய எனதுதனமும், சிலைஆர்திருநுதலும்—வில்லினையொத்த அழகியநெற்றியும், செம்பலைமூழ்க—செந்நிறம்வாய்ந்த பசலையின்மூழ்கும்படி, இலங்குஆர்அருவிவாள் போலமலைமின்னும்—ஒளிநிறைந்த அருவிவாளைப்போல மலைமேல்மின்னுநிற்கும், கேள்வர்காணர்கொல்—இதனைத் தலைவர்காணரோ.

(ந - ரை.) இசைக்கலைநிறைந்த சொல்லினய், முலையும் நுதலும் பசலையிலேமூழ்கும்படி ஒளிநிறைந்தவாள்போல்விளங்குமருவி மலைமேலேமின்னும், இதனைக்கேள்வர் காணரோவென்க.

கொல் ஐயப்பொருளிலவந்த இடைச்சொல். (உசo)

பிறையார்திருநுதலும்பேரமருண்கணணும்
பொறையார்வநமுலையும்பூம்பசலைமூழ்க
நிறைவாளிலங்கருவிநீள்வரைமேன் மின்னுங்
கறைவேலுண்கண்ணினய்காணர்கொல்கேள்வா.

இ - ள். கறைவேல் உண் கண்ணினய் — உதிரந்தோய்ந்த வேலைவென்ற கண்களையுடைய தோழியே, பிறை ஆர் திருநுதலும்—இளஞ்சந்திரனையொத்தஅழகியநெற்றியும், பேர்அமாஉண் கண்உம்—பெரியபோர்த்தொழிலையுடைய மையுண்ட கண்களும், பொறை ஆர் வநம் முலையும்— சுமத்தற்கரிய சந்தனக்கோலம்வாய்ந்த தனமும், பூம்பசலை மூழ்க—பொலிவமைந்த பசலையில் முழுகும்படி, நீள்வரைமேல்—உயர்ந்த மலையின் மேல், நிறைவாள் இலங்கு அருவிமின்னும் — நிறைந்த வாள்போலவிளங்குமருவி மின்னுநிற்கும், கேள்வர்காணர்கொல்—இதனைத் தலைவர் காணரோ

(ந - ரை ) கண்ணினய், நுதல் முதலியன பசலையிலே மூழ்கும்படி, ஒளிநிறைந்த வாள்போலிலங்கும் அருவி மலைமேலேமின்னும்; இதனைக்கேள்வர் காணரோவென்க. (உசக)

அரும்பேர்வநமுலையுமாடமைமென்றோளுந்
திருந்தேர்பிறைநுதலுஞ்செம்பசலைமூழ்க
நெருங்கார்மணியருவிநீள்வரைமேல்மின்னும்
கரும்பார்தீஞ்சொல்லினய்காணர்கொல்கேள்வர்.

இ - ள். கரும்பு ஆர் தீஞ்சொல்லினய் —கரும்பினிரசத்தை யொத்த இனிய சொல்லினய், அரும்பு ஏர்வநம்முலையும்— கோங்கரும்பினையொத்த அழகிய சந்தனக்கோலத்தையுடைய தனமும், ஆடு அமை மென்தோளும்-அசையு மூங்கிலையொத்த தோளும், ஏர்திருந்து பிறைநுதலும்—அழகாற்றிருந்திய இளஞ்சந்திரனையொத்த நெற்றியும், செம்பசலை மூழ்க— செந்நிறம்வாய்ந்த பசலையில் மூழ்கும்படி, நீள்வரைமேல்—நீண்ட மலையின்மேல், நெருங்குமணி ஆர் அருவி மின்னும்— நெருங்கிய முத்துவடம்போலும் அருவிமின்னுநிற்கும், கேள்வர்காணர்கொல்—இதனைத்தலைவர் காணரோ.

(ந - ர.) சொல்லினுய், மூலைமுதலியன பசலையிலே மூழ்கும்படி முத்துவடம்போலும் அருவி மலைமேலே மின்னும்; இதனைக் கேள்வர்காணுரோ வென்க.

முத்தாரம்போல என்றதனுல் அருவி தெளிந்தமைகூறினுர்; இதனுற் காலம்வேனில் என்பது புலப்படுதல்காண்க. இளவேனில் வருதலைநோக்கித் தலைவன் பிரிவுக்கு ஆற்ருதவளாகிய தலைவி தோழிக்குக் கூறுதலால் கையறுகிளவி. (உசஉ)

நாற்சீரால்வந்தநாலடித்தரவுகோச்சகம்.

பண்ணொன்றுபாடலதுவொன்றுபல்வளைக்கை
மண்ணொன்றுமெல்விரலும்வாணரம்பின்மேனடவா
விண்ணின்றியங்கிமிடறுநடுநடுங்கி
எண்ணின்றிமாதரிசைதோற்றிருந்தனளே.

இ - ள். பாடல்பண் ஒன்று—தத்தையின் பாடலும்யாழும்ஒருதிறமாயிருந்தன, அது ஒன்று—அச்சீவகன் பாடியபாட்டும் யாழும் வேறோர் திறமாயிருந்தன, மண் ஒன்று பல்வளைகை மெல்விரலும்— யாழினைப்பண்ணி வாசித்தலைப் பொருந்தும் பலவகைப்பட்ட வளையலையணிந்த கையின்விரலும் அதற்கேற்கும் பாட்டுகளும், வாள் நரம்பின்மேல் நடவா—ஒள்ளிய நரம்புடனடவாவாயின, மிடறு—கண்டப்பாட்டு, விண்நின்று இயங்கி — வெளியினின்றெழுந்து, நடுநடுங்கி—கம்பித்தலைச்சேர்தலால், எண் இன்றி—கீதத்திற் சிறிது குறைந்து, மாதர் இசைதோற்றிருந்தனள்—தத்தை இசையிற்றோற்றனள்.

(ந - ர) அங்ஙனம்பாடத் தொடங்கினவள் பாடியபாட்டும் அதற்கேற்றயாழும் ஒருதிறமாயிருந்தன; அவன்பாடினபாட்டும் யாழும்வேறோர்திறமாயிருந்தன பின்பு உடனிகழ்ச்சியில் யாழைப்பண்ணி வாசித்தலைப்பொருந்தும் பல்வளைக்கையின் விரலும் அதற்கேற்கும்பாட்டுகளு நரம்புடனடவாவாயின; பின்புகருவியொழிந்தபாட்டும் விண்ணிலேநின்றியங்கி அக்காலத்தே கம்பித்தலைச்சேர்தலாலே, வாதிற்கு எடுத்தகீதத்திற்சிறிது குறைந்துமாதர் இசைதோற்ருளென்க.

பண்ணல்கலைத்தொழிலிலொன்று, அதுநரம்பினைவீக்குதல், விண்நின்று இயங்கிஎன்றதுஉள்ளாளப்பாட்டிற்குரிய மூலாதாரந்தொடங்கிப்பிர மரந்தரத்தளவுநின்றவெளியை. உள்ளாளத்திற்கம்பிதங்கலக்கப் பாடுதலால் இசைதோற்றிருந்தனள்என்றூர். இசைநூலில் எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம்என்ற ஓசைவேறு பாட்டில்கம்பிதம் ஒன்று. மண்ணென்னுமுதனிலைவினையெச்சப்பொருளில்வந்தது. (உசங)

மையார்நெடுங்கண்ணுண்மாமணியாழ்தானுடைந்து
நையாநடுங்காநனிநாணமீதூராப்
பொய்யாதோர்குன்றெடுப்பாள்யோன்மெலிந்துயொன்மாலை
பெய்பூங்கழலாற்குப்பெண்ணரசியேந்தினளே.

இ - ள். மைஆர்நெடுங்கண்ணுள் பெண்ணரசிதான்—மையெழுதியநெடியகண்களையுடையதத்தை, மாமணியாழ்உடைந்து — பெருமையமைந்த

அழகியவீணையில்தோற்று, நையாநடுங்கா—நைந்துநிலைதளர்ந்து, நனிநாண ம்மீதூரா—(சபையிற்செல்லவேண்டுதலால்) மிக்கநாண்மீதூர்ந்து, பொய்யா நுஒர்குன்று எடுப்பான்போல் மெலிந்து—மெய்யாக ஒருமலையையெடுப்பான் போல வலிகுறைந்து, பொன்மாலைபெய்பூங்கழலாற் கு ஏந்தினள்— (சூட்டுத ற்கு) பொன்னலரிந்து செய்தமாலையை, கட்டிய பொலிவமைந்த வீரகண் டையையுடைய சீவகன்பொருட்டுஏந்தினாள்.

(ந - ரை) கண்ணுளாகிய பெண்ணரசிதான் அங்ஙனம்யாழ் தோற்றலி ன்நமக்குத் தோல்வியுளதாயிற்றென்று நைந்துநிலைதளர்ந்து அவையிற்செல்ல வேண்டுதலின் நாணமீதூர்தலால் மெய்யாகவே ஒருகுன்றையெடுப்பாள்போ லேகுறைந்து பொன்மாலையைக்கழலாற் கேந்தினளென்க.

வெற்றியையிழத்தலால் நைந்து நடுங்குதலின் இழவென்னுமெய்ப்பாடு. நாணுள்ளம் பிறர்க்கு வெளிப்படநிகழ்தலால் நாணென்னு மெய்ப்பாடு. குவ் வுருபுநிமித்தப்பொருட்டு. (கசச)

மெல்லென்சிலம்பரற்றமேகலைகண்மின்னுமிழ
நல்லபெடையன்னநாணவடியொதுங்கி
யொல்லென்னுயர்தவமேசெய்ம்மினுலகத்தீர
எல்லீருமென்பாள்போலேந்தன்மேல்வீழ்த்தனளே.

இ - ள். மெல்லென்சிலம்பு அரற்ற— (ஏந்தினதத்தை) மெல்லென்று சிலம்பொலிக்கவும், மேகலைகள் மின் உமிழ —மேகலாபரணங்கள் ஒளிவீ சவும், நல்லபெடை அன்னம் நாண—நல்ல பெண்ணன்ன நாணங்கூர, அடி ஒதுங்கி—காலால் நடந்து சென்று, உலகத்தீர் எல்லீரும் ஒல்லென் உயர்தவ மேசெய்மின் — உலகினுள்ளீரெல்லீரும் ஒல்லென்னு மோசைபடப் புகழ்கி ன்ற உயர்ந்த தவத்தையே செய்யுங்கள், என்பாள்போல் ஏந்தல்மேல் வீழ்த் தனள்— என்று சொல்லுகின்றவளைப்போலச் சீவகன் கழுத்தில் சூட்டினாள்.

(ந - ரை.) அங்ஙனமேந்தினவள் அரற்ற உமிழ நாண அடியானடந்து சென்று உலகினுள்ளீரெல்லீரும் ஒல்லென்னுமோசைபடப்புகழ்கின்ற உயர் தவமே செய்மினென்றுகூறு வாளைப்போல ஏந்தல் கழுத்திலே அதனைவீழ் த்தாளென்க.

முன்புகுன்றென்று கூறியதற்கொப்ப வீழ்த்தனளென்றார். எல்லீர் எல்பகுதி, லகரத்தோற்றம்சந்தி, ஈர்முன்னிலைப்பன்மைவிகுதி. (உசரு)

அறுசீரால்வந்தநாலடித்தரவுகொச்சகம்.

நாகத்துப்படங்கொளல்குலலங்கிளர்செம்பொன்மாலை
மேகத்துப்பிறந்தோர்மின்னுமணிவரைவீழ்ந்ததேபோல்
ஆகத்துப்பூட்டிமைந்தனடிதொழுதிறைஞ்சிநின்றாள்.
போகத்துநெறியைக்காட்டும்பூமகள்புணர்ந்தவொத்தாள்.

இ - ள். போகத்து நெறியைக்காட்டும் பூமகள் புணர்ந்ததுஒத்தாள்— (நுகர்வோர்க்குப்போகத்தின்வழியைக்காட்டுந் திருவந்து கூடியதன்மையை யொத்தவளாகிய, நாகத்துபடம்கொள் அல்குல்—பாம்பின் படத்தையொத்த

அல்குலையுடையதத்தை, கலம்கிளர் செம்பொன்மாலை— அழகால்விளங்குஞ் செம்பொன்னாலரிந்து செய்தமாலையை, ஓர்மின்னு மேகத்தேபிறந்து மணிவரைவீழ்ந்ததுபோல—ஒருமின்னற்றேன்றி இரத்திநங்களையுடைய மலையில்வீழ்ந்ததுபோல, மைந்தன் ஆகத்துபூட்டி—சீவகன்மார்பிற்பூட்டி, அடிதொழுது இறைஞ்சிநின்றாள்—அவன்பாதத்தைவணங்கிநின்றனள்.

(ந - ரை.) போகத்தின் வழியைக்காட்டுந் திருவந்து கூடிய தன்மையையொப்பாளல்குலவள் ஒருமின்மேகத்தேபிறந்து மணிவரையிலேவீழ்ந்ததுபோலே பொன்மாலையைக் கணவனாகத்தேபூட்டி, அவனைத்தொழுதுநின்றாளென்க.

சீவகனது முடிகூடாத கருநெறியமைந்த சிகைபிடரிலலைந்து கிடந்தமையாலதன்மேல் மாலைவீழ்ந்துபின்பு கழுத்தில் வீழ்ந்ததாதலால் மேகத்துப்பிறந்தோர மின்னுமணிவரைவீழ்ந்ததே போலென்று, ஒப்புமைக்கூட்டவுவமையணி தோன்றக்கூறினார். (உ௬௬)

செம்மலரடியுநோக்கித்திருமணியல்குனோக்கி
வெம்முலைத்தடமுநோக்கிவிரிமதிமுகமுநோக்கி
விம்மிதப்பட்டுமாதோவிழுங்குவான்போலவாகி
மைம்மலர்த்தடங்கணங்கைமலாமலர்த்தேவியென்றான்.

இ - ள். விம்மிதப்பட்டு— (அவ்விடத்துநின்றமையால்) வியப்படைந்து, விழுங்குவான்போலஆகி— விழுங்குகின்றவனைப்போல, செம்மலர் அடியும்நோக்கி—செந்தாமரைமலரையொத்தபாதத்தையும்பார்த்து, திருமணிஅல்குல்நோக்கி-பொலிவமைந்தஇரத்திநமிழைத்தமேகலையணிந்தஅல்குலையும்பார்த்து, வெம்முலைதடமும்விரிமதிமுகமும் நோக்கி—ஒளிபரந்தசந்திரனையொத்த முகத்தையும்பார்த்து (ஐயநீங்கியும்) மைமலர்தடகண் நங்கைமலாமலர் தேவிஎன்றான்-மையெழுதிய தாமரைமலரையொத்த பரந்தகண்களையுடைய இப்பெண்தாமரைமலரில்வசிக்கும் இலக்குமி யென்றுகருதினான்.

(ந - ரை.) அங்ஙனநின்றமையாள் விம்மிதப்பட்டு விழுங்குவான்போலே யாய்ப்பின்பு குறித்துநோக்கி ஐய நீக்குதற்குரிய மாதரைத்திருவென்றே கருதினானென்க.

ஐய நீக்குதற்குரிய கருவிகள் கால்நிலந்தோய்தலும், அல்குலிலணிந்த ஆடைமாசேறுதலும், முலையிலணிந்தமாலைவாடுதலும் முகத்திலுள்ள கண்ணிமைத்தலுமாதலால் நோக்கியென்றார். இதுமருட்கையென்னு மெய்ப்பாடு, இதுபிறரிடத்துத் தோன்றியபுதுமையாற்பிறத்தலின். (உ௬௭)

கோதையுந்தோடுமின்னகுண்டலந்திருவில்வீச
மாதரம்பாவைநாணிமழைமினிஞெசிந்துநிற்பக்
காதலந்தோழிமார்கள்கருங்கயற்கண்ணினாளை
ஏதமொன்றின்றிப்பூம்பட்டெந்திரவெழினிவீழ்த்தார்.

இ - ள். கோதையுந்தோடும்மின்ன—மாலையுந்தோடும்விளங்கவும், குண்டலம்திருவில்வீச-மகரகுண்டலம் அழகியஒளியைவீசவும், மாதர் அம்பா

வைநாணிமழைமின்னின்ஒசிந்துநிற்ப—பெண்களுளழகியபதுமைபோல்பவ ள் நாணங்கூர்ந்துநிலநோக்கி மேகத்திற்றோன்றியமின்னலைப்போலத்துவண் டுநிற்றலால், காதல்அம்தோழிமார்கள்—விருப்பத்தையுடைய அழகியதோழி ப்பெண்கள், கருங்கயல் கண்ணிணை—கரியகயல்போன்ற கண்களையுடைய த்தையை, ஏதம்ஒன்று இன்றி—நாணத்தாலிறந்து படுதலில்லாமல், எந்தி ரம்பூம்பட்டெழினிவீழ்த்தார—சூழவிழுவதாகிய ஒருதிரையைவீழ்த்தனர்.

(ந - ரை.) பாவை அவையிலே நிற்றலினணி மின்னவீச நிலநோக்கி மின்போனுடங்கிநிற்க; தோழியர் அவட்குநாணத்தால்வருகிற இறந்துபாடி ன்றாகச் சூழவீழ்வதோர் திரையைவீழ்த்தாரென்க.

தோட்டிறெளி மாலைமேலெறிப்ப நிற்றலால்கோதையுந் தோடுமின் னவென்றார். கண்ணிணை உருபுமயக்கம். (உசஅ)

வெள்ளிலைவேற்கணாளைச்சீவகன்வீணைவென்றான்
ஒள்ளியனென்றுமாந்தருவாக்கடன்மெலியவார்ப்பக்
கள்ளராற்புலியைவேறுகாணியகாவன்மன்னன்
உள்ளகம்புழுங்கிமாதோவுரைத்தனன்மன்னர்க்கெல்லாம்.

இ - ள். சீவகன்வெள் இலைவேல்கண்ணாளை வீணைவென்றான்—சீவக ன்நிணந்தோய்ந்த தகட்டுவடிவாகிய வேல்போன்றகண்களையுடைய தத்தை யைவீணையில்வென்றனன், ஒள்ளியன்என்றுமாந்தர் உவாகடல்மெலிய ஆர ப்ப—இவன்நல்லனென்று அரசர்கள் பூரணையிலொலிக்குங் கடலொலிகுறை யவொலிப்ப, காவல்மன்னன் உள்ளகமபுழுங்கி—கட்டியங்காரன்மனம்பொ றாது, கள்ளரால் புலியை வேறுகாணிய—வேடரால புலியொடுபோர்செய்து வெல்லுதலைக் காணத்தொடங்குவான்போல அரைசரைகொண்டு சீவகனைப் போர்காணவேண்டி, மன்னர்க்குஎல்லாம்உரைத்தனன்—அரசர்க்கெல்லாஞ் சிலகடுஞ்சொற்களைக்கூறினன்.

(ந - ரை.) சீவகன் தத்தையை யாழும் பாட்டும் வென்றான் நல்லனெ ன்று மாந்தரார்ப்ப அதுபொழுது கட்டியங்காரன்மனம்புழுங்கி அரசரைக் கொண்டு சீவகனைப்போர் காணவேண்டி அரசர்க்கெல்லாம் சிலமொழிகளைக் கூறினனென்க

ஒள்ளியன் திசைச்சொல். வேறு தொழிற்பெயர்வெல்பகுதி, துபுடை பெயர்ச்சிவிகுதி, முதனீளுதல்விகாரம், லகரக்கேடுந்தகரத்திரிபும்சந்தி. ()

வடதிசைக்குன்றமன்னவான்குலமாசுசெய்தீர்
விடுகதிர்ப்பரிதிமுன்னர்மின்மினிவிளக்கமொத்தீர
வடுவுரையென்றுமாயும்வாளமரஞ்சினீரேல்
முடிதுறந்தளியிர்போகிமுனிவனம்புகுமினென்றான்.

இ - ள். வடதிசைகுன்றம் அன்னவான்குலம்— (வணிகன்மகளை அர சன்கோடலன்றி அரசன்மகளை வணிகனுக்கு நீங்கள்கொடுக்கின்றமையால்) மேருப்போல நிலைகுலையாத உமதுகுலத்திறகெல்லாம, மாசுசெய்தீர்—வடுச் செய்தீர், கதிர்விடுபரிதிமுன்னர் மின்மினிவிளக்கம்ஒத்தீர்—ஒளிவீசுஞ்சூரி

யன்முன்னே மின்மினியின் ஒளிபோல ஒளிகுன்றினீர், வடு உரைஎன்றுமா யும்—இப்பழிச்சொல் எக்காலத்தும்நீங்காது, வாள்அமர் அஞ்சினீரேல்—வா ளாற்செய்யும் போருக்குஅஞ்சினீராயில், அளியிர்—உயிர்களையோம் பத்தக் கவர்களே, முடிதுறந்துபோகி—அரசியல் விட்டுப்போய், முனிவனம்புகுமி ன்என்றான் — முனிவர்களாய்த்த போவனத்திற்குச் செல்லுங்க ளென்று கூறினன்.

(ந - ரை.) வணிகன்மகளையரசன் கோடலன்றி அரசன்மகளைவணிகனு க்குநீங்கள்கொடுக்கின்றமையான், மேருப்போலநிலைகுலையாதநுங்குலத்திற்கெ ல்லாம் வடுவுண்டாக்கிக்கொண்டீர், இதுவுமன்றி இவன்முன்னர் நுமதொ ளியுங்குறைந்தீர்; இவ்வடுவுரையொருகாலத்துமாயாது; இதனைமாய்விக்கும் வாட்போரையஞ்சினீராயின், அளிககத்தக்கீர், அரசைவிட்டுபபோய் முனிக ளாய்க்காட்டிலே சென்மினென்றானென்க.

கலுழவேகனும் அரசனுதலான் இவனைநோக்கிநுங்குலமென்றான். மின் மினிவிளக்கமொத்தீர் என்றதற்குமின்மினியையும் விளக்கினையுமொத்தீர்— எனப்பொருள்கொள்ளலுமொன்று. (உ௫௦)

> முல்லைப்பூம்பந்துதன்னைமும்மதக்களிற்றுவேலிக்
> கொல்லைப்பூங்குன்றுசெய்தீர்குங்குமக்குழங்கன்மாலை
> மல்லுப்பூத்தகன்றமாரபீர்புகழெனும்போர்வைபோர்த்துச்
> செல்வபபூமகளுநாளையவனுழைச்செல்லுமென்றான்.

இ - ள். குங்குமம்குழங்கன் மாலைமல்லுபூத்துஅகன்றமார்பீர்—குங்கு மக்குழம்பையும்அழகியமலர்மாலையையுமணிந்துமற்றொழில் மிக்குப்பரந்தமா ர்பினையுடையீர், முல்லைபூபந்துதன்னை—முல்லைமலராலாகிய பந்தினை, மும் மதக்களிறுவேலிகொல்லைபூங்குன்றுசெய்தீர்--மூன்றுமதங்களையுடையயானை களைவேலியாக வுடையகொல்லையில் பொலிவமைந்த மலையாகச்செய்தீர், செ ல்வம்பூமகளும் — செல்வத்தையுடைய நிலமகளும், புகழ்என்னும் போர் வைபோர்த்து, கீர்த்தியென்னும் போர்வையைப்போர்த்து, நாளை அவன் உ ழைசெல்லும் என்றான் — நாளைக்கேயச்சீவகனிடத்திற் செல்லுமென்றுகூ றினன்.

(ந - ரை.) அதுவேயன்றிப் பின்னுமார்பினையுடையீர், கையாற்பிசைந் துபோகடுவதோர் முல்லைப்பந்தைக்களிறறை வேலியாகவுடைய கொல்லையி ற்குன்றாக்கினீர், இனிநும்முடைய நிலமகளும்புகழாகிய போர்வையைப் போர்த்து நாளையவனிடத்தே செல்லுமென்றானென்க.

நீர்போர்த்தொழிலுக்கு அஞ்சிக்கலுழவேகன் மகளைக்கொடுக்கின்றமை யால் என்கோற்கீழ்வாழ்வானை என்னால் நிலைகுலைத்தலரிதாக்கினீர் ஒன்பான் முல்லைப்பூம்பந்து தன்னைமும்மதக்களிற்று வேலிக்கொல்லைப் பூங்குன்றுசெ ய்தீர் என்றான். (உ௫க)

> திருமகளிவளைச்சேர்ந்தான்றெண்டிரையாடைவேலி
> இருநிலமகட்குஞ்செம்பொனேமிக்குமிறைவனுகும்

செருநிலத்திவனைவென்றீர்திருவினுக்குரியீரென்றான்
கருமனநச்சுவெஞ்சொற்கட்டியங்காரனன்றே.

இ - ள். கருமனம் நச்சுவெம் சொல்கட்டியங்காரன்— கொடியமனத்தையும் நஞ்சாகிய கடுஞ்சொல்லினையுமுடைய கட்டியங்காரன், திருமகள்இவளைசேர்ந்தான்—திருமகளாகிய இவளைச்சேர்ந்தவனொருவன், தெண்டிரைஆடைவேலி இருநிலமகட்கும்—கடல் வேலியையாடையாகவுடைய பெரியநிலமகளுக்கும், செம்பொன்னேமிக்கும் இறைவனாகும்—சக்கரவாளகிரிக்குமரசனாவான், செருநிலத்து இவனைவென்றீர—போர்க்களத்தி லிவனைவென்றீரானால், திருவினுக்கு உரியீர்என்றான்—இவளைப்பெற்று இப்பெருஞ் செல்வத்திற் குரியீராவீரென்றுகூறினான்.

(ந - ரா) கொடியமனத்தினையு நஞ்சாகிய கடுஞ்சொல்லினையுமுடைய கட்டியங்காரன், இவளிலக்கணமிருந்தபடியாற் றிருமகளாகிய இவளைச்சேர்ந்தவனொருவன் தெண்டிரை வேலியையாடையாகவுடைய நிலமகட்குஞ் சக்கரவாளத்திற்கும் இறைவனுமாதலாற போரிடத்து இவனைவென்று இவளைப்பெற்றீர், இப்பெருஞ்செல்வத்தை நுகர்தற்குரியீராவீரென்றானென்க, ()

அணிச்சப்பூங்கோதைசூட்டினம்மனையோவென்றஞ்சிப்
பணிக்குநுணணுசுப்பிறபாவையொருத்திநாம்பலவென்றெண்ணித்
துணித்துநீர்துளங்கல்வேண்டாதூமணிச்சிவிறிநீர்தூய்த்
தனிக்கயத்துழக்கிவென்றோர்தையலைச்சார்மினென்றான்.

இ - ள். அனிச்சப்பூங்கோதை சூட்டின்— (இவனைநாம்வெல்லினும்) அனிச்சமலராலாகிய மாலையைச்சூட்டினால், அம்மனை ஓ என்றுஅஞ்சி—அம்மே ஓவென்றுபயந்து, பனிக்கும் நுண்நுசுப்பின் பாவைஒருத்தி—வருந்தும் நுண்ணிய இடையினையுடையதத்தையோஒருத்தி, நாம்பலர்என்றுஎண்ணி-நாமோபலவென்றுகருதி, துணித்து நீர்துளங்கல்வேணடா— வெறுத்துநீங்கள்மனநடுங்குதல்வேண்டா, கயத்துதூமணி சிவிறிநீர்தூய் — கயத்தில்புனிதமாகிய அழகியபெருந்துருத்தியால் (நுமதுயிர்போகாதபடி) நீரைவீசி, தனி உழக்கிவென்றோர் — தனித்தனிநின்றுபோர்செய்து வென்றவர்கள், தையலை சார்மின் என்றான் — தத்தையைச் சேரக் கடவீரென்று கட்டியங்காரன் கூறினான்.

(ந - ரா.) இவனைவென்றாலும் பாவையொருத்தி நாம்பலராதலால் இவளைப்பெறுதற்குப் பின்னும் நம்மிற்போர் செய்யவேண்டுமென்றுகருதி வெறுத்துமனந்துளங்கல்வேண்டா, நுமதுயிர்போகாதபடி கயத்திலேசிவிறியாலே நீரைத்தூவித் தனித்தனியேபொருதுவென்றவர்கள் அவளைச்சேரக்கடவீரென்றானென்க.

இவனையொவ்வொருவரும் நீர்தூவியேபோர்செய்து வெல்லுதல்கூடுமென்பான் தூமணிச்சிவிறிநீர்தூய்த் தனிக்கயத்துழக்கி வென்றீரென்றான். துளங்கல்வேண்டாஒருசொல். தூவியென்னும் இறந்தகாலவினையெச்சம் தூய்எனத்திரிந்தது. (உ௫கூ)

வெந்திறலாளன்கூறவேகமோடேறிமன்னர்
பந்தணிவிரலினாடன்படாமுலைப்போகம்வேண்டிக்
கந்தெனத்திரண்ட திண்டோட்கந்துகன்சிறுவன்காயும்
ஐந்தலையரவின்சீற்றத்தாரழல்குளிககலுற்றார்.

இ - ள். வெந்திறலாளன் கூற — அவ்வாறுகட்டியங்காரன்கூற, மன்னர்—அரசர்கள், பந்து அணிவிரலினாள் தன்படாமுலைபோகம்வேண்டி—பந்தினையணிந்த விரலினையுடைய தத்தையின் தளராததனபோகத்தை விரும்பி, வேகமோடேறி—கோபத்தோடேமுழங்கி, கந்து என்ன திரண்டதிண் தோள்கந்துகன்சிறுவன்—தூணைப்போலத்திரண்டதிண்ணிய தோளையுடைய கந்துகன்புத்திரனாகிய, காயும்ஐந்தலை அரவின்சீற்றத்து ஆர்அழல்குளிக்கலுற்றார்— கோபிக்கும் ஐந்துதலைகளையுடைய பாம்பினதுகோபமாகிய வெம்மை நிறைந்த நெருப்பில்மூழ்கினார்.

(ந - ரை.) அங்ஙனங் கட்டியங்காரன் கூற, அதுகேட்டுமன்னர்தத்தையது முலைப்போகத்தை விரும்பிககோபத்தோடே முழங்கிச், கந்துகன்பிள்ளையாகிய ஐந்தலை நாகத்தினது கோபத்தினையுடைய நஞ்சில மூழ்ந்துத லுற்றாரென்க

சீவகனும் நந்தட்டனும் ஒருதலையும், பதுமுகனொழிந்த மற்றைத்தோழர் மூவருமூன்றுதலையும், நபுலனும் விபுலனு மொருதலையுமாகப் படைவகுத்தெழுதலின் ஐந்தலையரவென்றார். நந்தட்டன் கந்துகன்புத்திரன். நபுலனும் விபுலனும் சச்சந்தன் காமக்கிழத்தியா புதல்வர். அத்துவேண்டாவழிச்சாரியை. குளிக்கலுற்றார் ஒருசொல். (௨௫௪)

பணையியல்யானைமேலான்பதுமுகன்பரவைத்தானை
கண்ணிய துணர்ந்துகல்லாக்கட்டியங்காரனெஞ்சின்
எண்ணியதெண்ணிமன்னரிகன்மலைந்தெழுந்தபோதிற்
றண்ணியசிறியவெய்யதழற்சொலாற்சாற்றுகின்றான்.

இ - ள். பணைஇயல் யானைமேலான் பதுமுகன்—பண்ணிலேபயின்ற யானைமேலானாகியபதுமுகன், பரவைதானைகண்ணியதுஉணர்ந்து—அரசரது பரந்தசேனையோர் கருதியதையறிந்து, கல்லாதகட்டியங்காரன்நெஞ்சின்எண்ணியதுஎண்ணி—நூல்களைக்கல்லாத கட்டியஙகாரன் மனத்தில்கருதிய எண்ணத்தையுமுணர்ந்து, மன்னர் இகல்மலைந்து எழுந்தபோதில்—அரசர்கள்மாறுபட்டெழுந்த காலத்தில், தண்ணியசிறியவெய்ய — தண்ணியசிறியவெய்ய சொற்களாலும், தழல்சொலால் — நெருப்பையொத்த சொல்லாலும், சாற்றுகின்றான்—அரசரைக்கூறுகின்றான்.

(ந - ரை.) பண்ணிலேபயின்றயானை மேலானாகிய பதுமுகன் அரசர்தானையோர் குறித்தமையும் அறிந்து, கட்டியங்காரன் கள்ளராற்புலியைவேறு காணஎண்ணியதனையு மெண்ணி, அரசர்மாறுபட்டெழுந்த வளவிலேதண்ணியசிறிய வெய்யவாகிய சொற்களாலுந் தழல்போலுஞ் சொல்லாலுஞ் சாற்றுகின்றானென்க.

புண்ணிப்டயிலுதலாவது ஒப்பனை யினமைந்திருத்தல். சாமபேததானத்தைத் தண்ணியசிறியவெய்ய சொல்எனவும், தண்டத்தைத் தழற்சொல்

எனவுங்கூறினர். சாமம்இனியசொல்லாதலால் தண்ணியசொல்லெனவும், பேதம்பொய்யு மெய்யுங்கூறி மனத்தைப்பேதித்தால் சிறியசொல்லெனவும், தண்டம் அவராகாமலழித்து விடுதலால் தழற்சொலால் எனவுங்கூறினர். தண்ணிய, சிறிய, வெய்யபண்படியாகப்பிறந்த குறிப்புவினைப்பெயரெச்சங்கள். தண்மை, சிறுமை, வெம்மை பண்புப்பகுதிகள். சொல்நான்கனிடத்திலும் நிற்றலால் இறுதிநிலைத்தீவகவணி. (உ௫௫)

இசையினிலிவட்குத்தோற்றும்யானையால்வேறுமென்னின்
இசைவதொன்றன்றுகண்டீரிதனையானிரந்துசொன்னேன்
வசையுடைத்தரசர்க்கெல்லாம்வழிமுறைவந்தவாறே
திசைமுகம்படர்கவல்லேதீத்தொட்டாற்சுடுவதன்றே.

இ - ள். இவட்குஇசையினில் தோற்றும்—இவளுக்கு இசையிற்றோற்ற நாம். யானையால் வேறும் என்னில்— இசைக்கு இளைக்கும்யானையால்வெல்வோமென்றுகருதில், இசைவது ஒன்றுஅன்று— பொருந்துவதொன்றல்ல வசைஉடைத்து கண்டீர்—அதுவும்வசையையுடையது கண்டீர், தொட்டால் சுடுவதுஅன்றேதீ — தீண்டினாற்சுடுவதல்ல வாதீயென்பது (இப்பிறர்மனை நயக்கின்றதீவினையாகிய தீநினைப்பினுஞ் சுடுவதொன்றுகண்டீர்) அரசர்க்குஎல்லாம்யான்இரந்துஇதனைவழிசொன்னேன்—அரசராகியஉங்களுக்கெல்லாம் மாறுகியயான்இரந்துஇக்காரியத்தைச்சொன்னேன், முறைவல்லேவந்தஆறு எதிசைமுகம்படர்க — முறையாகவந்தவழியேஉங்கள்திசைமுகத்திற் செல்லக்கடவீர்.

(ந - ரை.) இவட்கிசையாற்றோற்ற நாம், இசைக்குவணங்கும் யானையால்வெல்லுது மென்றுகருதில் பொருந்துவதொன்றன்று; அதுவும்வசையுடைத்துக்கண்டீர்; அதுவேயுமன்றித்தீண்டினாற் சுடுவதன்றே தீ யென்பது இப்பிறர்மனை நயக்கின்றதீவினையாகிய தீநினைப்பினுஞ் சுடுவதொன்று கண்டீர்; ஆதலால் இங்ஙனம்பழியும் பாவமுமாய்நீரோ யறிதற்குரிய இக்காரியத்தினை நுமக்குமாறுகிய யான்இரந்து கொண்டு நுங்கட்கெல்லாங் கூறினேன்; இனிஅடைவேவந்த வழியே திக்கிடங்களிலே கடுகப்போவீராக வென்றானென்க.

விலங்கின தறிவும் நுமக்கில்லை யென்பான் இசைவதொன்றன்று எனவும், யானைநாதத்திற்குத் தோற்றலால் அதற்குவணங்குதலியல் பென்பான்யானையால் வேறுமென்னில் எனவுங்கூறினா. வேறும்தன்மைப்பன்மை எதிர்காலவினைமுற்று வெல்பகுதி, தும்விகுதி, லகரக்கேடும் தகரத்திரிபும்சந்தி. அன்றேஎன்ற எதிர்மறையில் வந்தஏகாரம்ஆக்கப்பொருளில்வந்தது. (உ௫௬)

தோளினுன்மிடைந்துபுல்லுந்தொண்டைவாயமிர்தம்வேட்டோர்
வாளினுன்மலைந்துகொள்ளின்வாழ்கநுங்கலையுமாதோ
கோளுலாஞ்சிங்கமன்னன்கொடியினையெய்தப்பெற்றீர்
தாளினுனெய்யீராகித்தரணிதாயிடுமினென்றான்.

இ - ள். வேட்டோர் தோளினால் மிடைந்துபுல்லும் தொண்டைவாய் அமிர்தம்—விரும்பினோர்தோளால் நெருங்கித்தழுவும் கோவைக்கனிபோன்

றவாயினமிர்தத்தை, வாளின்ஆல்மலேந்துகொள்ளின்— வாளாற்போர்செய்துவலிந்துகொண்டால், நும்கலேயும்வாழ்க — நீர்கற்றநூல்கெடுக, கோள்உலாம்சிங்கம்அன்னுன் கொடியினை எய்த— கொலைத்தொழில்மிக்க சிங்கத்தையொத்த சீவகன்ஒருமகளைப்புணர, தாணிபெற்றீர்— (நல்வினையால்) நிலவுலகினைப்பெற்றுநின்றீர், நாளிஞல்நொய்யீராகிதாவிடுமின்என்றுன்—இனிமுடியாத முயறசியினுல குறைந்தவராகி வருத்தத்தால் அவ்வுலகைக் கைவிடுவீர்.

(ந - ணா.) இன்பத்தைவேட்டோர் தோளாற்புல்லிப் பெறுகின்ற அமிர்தத்தை நீர்வாளாற்பொருது வலிதிற்கொள்ளின் நுங்கலே நூறும்புகுவதாக; அதுவுமன்றிச் சிங்கமன்னுன் ஒருமகளைப்புணர நுமதுநல்வினையால் தரணியைப்புணரப்பெறறு நின்றீர், இனிமுடியாத முயற்சியான் நொய்யீராகி அதனுற்பிறக்கின்ற வருத்தத்தைக் கைவிடுவீராக வென்றுனென்க.

வருத்தத்தை என்பதைவருத்தத்தா லெனப்பொருள்கொண்டு உருபுமயக்கமாகக்கொள்க. தாவருததம். வாழக இவ்வியங்கோள் வைதற்பொருளில்வந்தது. இவ்விரண்டுகவியும் சாமமென்னும் உபாயத்தின்மேல்நின்றன. அமிர்தம்வாளிஞல் மலேந்துகோடல் இராக்கதமணம். இது ஒருதலேக்காமமாயினும் சிறப்பன்று.ஆதலால் நீர்கற்ற கல்விபயன்படுதலில்லை யென்பான் வாழ்கநுங்கலேயும் என்றுன் (உ௫௭)

> நாறுமும்மதத்திஞலேநாகத்தையிரிக்குநாக
> மாறியசினத்ததன்றியதிங்கத்தின்கவளங்கொண்டால்
> வேறுநீரீனந்துகாணீர்யாவர்க்கும்விடுக்கலாகா
> தூறித்தேனெழுகுங்கோதைநம்பிக்குமன்னளென்றுன்.

இ - ள். நாறும்மும்மதத்திஞல்— கமழுமூன்றுமதங்களால், நாகத்தை இரிக்கும்நாகம் — மறறையானைகளைக்கெடுக்குமொருயானை, மாறியசினத்ததுஅன்றி — நீங்காதகோபத்தையுடையதாய், அதிங்கத்தின் கவளம்கொண்லால்—அதிமதுரத்தின் றளிர்க்க வளத்தினைக்கைக் கொண்டால், யாவர்க்கும்விடுக்கலாகா—அக்குளகினையெவாக்கும் விடுவித்தல்கூடாது, ஊறிதேன்ஒழுகும்கோதை நம்பிகும்அன்னள்—மலர்களாறீசுரந்து தேனெழுகுங்கூந்தலேயுடைய தத்தைசீவகனுக்கும அத்தன்மையள், வேறுநீர்நினேந்துகாணீரென்றுன்—இதனைத்தனித்து நீங்களாராய்ந்து பாருங்களென்று பதுமுகன்கூறினன்.

(ந - ணா.) தன்மதத்தாலே யொழிந்த நாகங்களைக் கெடுப்பதொருநாகம்மிக்க சினத்தையுடைத்தாய் அதிமதுரத்தின் குளகைக்கையிலேகொண்டால்அக்குளகையாவர்க்கும் விடுவித்தலரிது; கோதைநம்பிக்கும் அக்குளகின்றன்மையள்; இதனைத்தனித்து ஆராய்ந்து காணீரொன்றுனென்க.

அதிங்கம் அதிமதுரம். காணீர்முன்னிலேப்பன்மை யெதிர்கால வேவல்வினைமுற்று. (உ௫அ)

> இளவளநாகுபுல்லியினத்திடையேறுநின்ருல்
> உளவளங்கருதியூக்கலுழப்பெருதுடையதாமே

தளவளமுகைகொள்பல்லாட்சீவகன்றழுவிநின்றால்
கொளவுளைந்தெழுவதல்லாற்கூடுதனுங்கட்காமோ.

இ - ள். வள இளநாகுபுல்லி — அழகையுடைய இளநாகைத்தழுவி, இனத்து இடை ஏறு நின்றால்—தன்னினத்தில் காளைநின்றால், உள்ள வளம் கருதி—அதற்குள்ள அழகைத் தானுகரக்கருதி, ஊக்கல்—முயலுதலை, உழப்பு எருது உடையது ஆம் ஏ — உழுமெருதுடையதாகுமோ, தளவுவளமுகைகொள் பல்லாள் — முல்லையினது அழகிய அரும்பினையொத்த பற்களையுடையதத்தையை, சீவகன் தழுவிநின்றால்—சீவகன் தழுவி நிற்கில், கொள்ள உளைந்துஎழுவதுஅல்லாமல்—கொள்ளவருந்திப்போவதல்லது, கூடுதல் நுங்கட்கு ஆம் ஓ—கூடுதல்உங்களுக்குக் கூடுமோவென்றான்.

(ந - ரை.) அழகையுடைய இளநாகைப்புல்லித் தன்னினத்திலே யேறு நின்றால் அதற்குள்ளஅழகைத் தானுகரக்கருதி முயலுதலை, உழுமெருதுடையதாமோ, அதுபோலத் தத்தையைச் சீவகன் தழுவிநின்றால் கோடற்கு வருந்திப் போவதல்லது நுங்கட்குக் கூடுதல் கூடுமோ வென்றானென்க.

ஏறுபோல எருது நுகராமையால் அரசனை யதனோடுவமித்துக் கூறினான். இதுபான்மயக்க வுவமை, ஒருமைப்பாலோடு பன்மைப்பால் வருதலின். (உ௬௬)

எழுந்துவிண்படருஞ்சிங்கம்பெட்டைமேலிவர்ந்து நின்றால்
மழுங்கமேற்சென்றுபாய்தன்மறப்புலிதனக்குமாமோ
கொழுங்கயற்கண்ணினாளைச்சீவகக்குமரன்சூழ்ந்தால
அழுங்கச்சென்றணைதல்பேய்காளநங்கற்குமாவதுண்டோ.

இ - ள். பேய்காள்—பேய்களே, எழுந்துவிண்படரும் சிங்கம்—தாவியாகாயத்திற் செல்லுஞ் சிங்கம், பெட்டைமேல் இவர்ந்து நின்றால்—பெண் சிங்கத்தின்மேல் விரும்பிநின்றால், மறம்புலி தனக்கும் மழுங்கமேல்சென்று பாய்தல்ஆம் ஓ — கொலைத்தொழிலையுடைய புலிக்கும் அதுகெடும்படிமேலெழுந்துபாய்தல் கூடுமோ, கொழுங்கயல் கண்ணினாளை — கொழுவிய கயல்போன்ற கண்களையுடைய தத்தையை, சீவகன் குமரன் சூழ்ந்தால் — சீவகனாகிய குமரன் தழுவிநின்றால், அழுங்கசென்று அணைதல் — அதுகெடும்படி சென்றுகூடுதல், அநங்கற்கும் ஆவதுஉண்டுஓ — மன்மதனுக்குங் கூடுமோ.

(ந - ரை.) பேய்காள் சிங்கம் பெட்டைமேலே மேவிநின்றால் மேற்சென்று அதுகெடும்படிபாய்தல் புலிக்குங் கூடாதாகலின்நீர்கருதுகின்றதும் அத்தன்மைத்து; இனி அதுவுமன்றித் தத்தையைச் சீவகன் தழுவிநின்றால் காமனுக்கும் அவ்விடத்தாவதொருகாரியமில்லை யென்றானென்க.

"ஒட்டகங்குதிரை கழுதைமரையிவை—பெட்டையென்னும் பெயர்க்கொடைக்குரிய" என்னும் தொல்காப்பியமரபியற்சூத்திரத்தில் "கொடை" என்றமையால் சிங்கத்திற்குங் கொள்க. சீவகக்குமரன் "சிலவிகாரமாமுயர்திணை" என்ற விதியால் னகரவீறு கெட்டு விதியீறாய் நின்றவீடத்து

வருமொழிமுதல் வல்லெழுத்து "இயல்பினுவிதியினுநின்ற வுயிர்முன்" என்ற சூ—ஆல் வருமொழிமுதல் வல்லெழுத்துமிக்கது. (உகூ0)

மத்திரிப்புடையநாகம்வாய்வழிகடாத்ததாகி
உத்தமப்பிடிக்கணின்றாலுடற்றுதல்களபக்காமோ
பத்தினிப்பாவைநம்பிச்சீவகன்பாலளானாள்
அத்திறங்கருதியூக்கலரசிர்காணுங்கட்காமோ.

இ - ள். அரசிர்காள்—அரசர்களே, மத்திரிப்புஉடையநாகம்—கோபத்தையுடைய யானை, வாய்வழி கடாத்தது ஆகி—கரடத்தினின்றும் வழியுமதத்தை யுடையதாகி, உத்தமம் பிடிகண் நின்றால்—நன்மைவாய்ந்த பெண்யானையினிடத்து நின்றால், உடற்றுதல் களபத்துக்கு ஆம் ஒ—கெடுத்தல்யானைக்கன்றினுக்குக்கூடுமோ, பத்தினிபாவை—கற்பினையுடைய தத்தை, நம்பி சிவகன் பாலள்ஆனாள்—(அதுபோல)நம்பியாகியசீவகனிடத்திலானாளாயில், அதிறம் கருதிஊக்கல்—அவளைப் பெறும் அத்திறத்தினை நீர் கருதிமுயலுதல், நுங்கட்கு ஆம் ஒ—உங்களுக்குக் கூடுமோ.

(ந - ரை) அரசிர்காள், செற்றத்தையுடைய நாகம் மதத்ததாய்ப்பிடிக்கணின்றால் அதனைக்கெடுத்தல் யானைக் கன்றிற்குக் கூடுமோ, அதுபோலப் பாவை சீவகன் பாலளானால் அவளைப்பெறுந்திறத்தை நீர்கருதி முயறல் நுமக்குக்கூடுமோவென்றானென்க.

நீரரசராதலின் இவளைப்பெறுதற்கு உரியராயினும் ஆண்மைமுதலியவற்றில் நீர்குறைபாடுடைமையால்நுங்கட்கு ஆமோஎன்றான். களபக்கு அத்துச்சாரியை தொகுத்தல். வாய், மதமொழுகும்இடமாதலால் கரடம் என்றாம்.

தூமத்தாற்கெழீஇயகோதைதோட்டுணை பிரித்தல்விண்மேற்
றாமத்தாற்கெழீஇயமார்பனிந்திரன் றனக்குமாகா
தேமுற்றீரின்னுங்கேண்மினிரதியைப்புணாதுமென்று
காமத்தாற்கழுமினார்க்குக்காமனிற்பிரிக்கலாமே.

இ - ள். ஏமுற்றீர் — மயக்கங்கொண்ட அரசர்களே, தூமத்து ஆல் கெழுவியகோதை — அகிற்புகையால் நெருங்கிய கூந்தலையுடைய தத்தையினது, தோள் துணை பிரித்தல்—தோளின் துணைவனாகிய சீவகனைப்பிரித்தல், விண்மேல்—விண்ணுலகில், தாமத்தால் கெழுவிய மார்பன் இந்திரன் தனக்கும் ஆகாது—கற்பகமாலையால் நிறைந்தமார்பினையுடையஇந்திரனாலுமுடியாது, இன்னும் கேண்மின்—இன்னமுங் கூறுவதைக்கேளுங்கள், இரதியை புணர்தும்என்று—இரதியைச்சேர்வோமென்று, காமத்தால் கழுமினார்க்கு—காமத்திற் பொருந்தினவர்க்கு, காமனில்பிரிக்கலாம் ஒ—மன்மதனினின்று பிரிக்கக்கூடுமோகூடாது.

(ந - ரை.) மயக்க முற்றீர், கோதையதுதோட்டுணையாகிய சீவகனைப் பிரித்தல் இந்திரனுக்குங் கூடாது; இங்ஙனம்இவனைப்பிரித்தலேயன்றி இன்னமுங்கேண்மின், இரதியைக்கூடுவேமென்று வேட்கையாற் பொருந்தினார்க்கு அவளைக் காமனிடத்து நின்றும் பிரித்தல் கூடுமோ வென்றானென்க.

தெய்வத்தால் பிரித்த லரிதென்று முன்பு கூறிப்பின் இவடன்னைப்பிரி த்தலு மரிதென்முன். நாறுமென்ற செய்யுள் முதலைந்தும் பேதம். கெழுவி யகெழீ இய எனச் சொல்லிசை நிறைத்தலில் வந்த உயிரளபெடை. கழுமி ஞர் உயர்திணைப் பலர்பாற்படர்க்கை யிறந்தகாலவினைமுற்று கழுமுபகுதி, உகரக்கேடுசந்தி, இன் இறந்தகாலவிடை நிலை, ஆர் விகுதி. (உகூஉ)

எம்மைநீர்வெல்லப்பெற்றீர்வென் றபினிருந்தவேந்தல்
நும்மையும்வேறுசெய் துநும்முளேபொருதுவீந்தால்
வெம்மைசெய்துலகமெல்லாமாண்டிடவிளைக்குநீதி
அம்மமற்றதனையோரீரவன்கருத்தன்னதென்முன்.

இ - ள். நீர் எம்மை வெல்லபெற்றீர்—நீர் எங்களை வெல்லப்பெற்றீரா யின், வென்றபின் — வென்றபின்பு, இருந்த ஏந்தல்— இருந்த கட்டியங்கா ரன், நும்மையும் வேறுசெய்து — உங்களையுமொருவர்க்கொருவர் பகைப்பி த்து, நும் உள்ளே பொருதுவீந்தால்— உங்களுக்குள்ளே போர்செய்து இறந் தால், வெம்மை செய்து—விரும்பி, உலகம் எல்லாம் ஆண்டிட நீதிவிளைக் கும்—உங்கள் உலகினையெல்லாந் தானாளும்படி யொருமுறைமை யுண்டாக் காநிற்பான், அதனை ஓரீர் — அதனை யென்னையொழிய ஆராய்ந்துபாருங்கள், அவன் கருத்து அன்னது என்முன்— அக்கட்டியங்காரன் கருத்து முன்பும் அத்தன்தன்மையதுஎன்று கூறினன் .

(ந - ள.) நீர் எம்மை ஒருவாற்முன்வெல்லப்பெற்றீராகப்பாரும்; அங் ஙனம் வென்றபின்பு கட்டியங்காரன் நும்மையும் பகைப்பித்து நும்மிலே நீர் பொருதுபட்டால் நுமமுலகெல்லாந் தானாளுதற்கோர் முறைமையுண் டாக்கா நிற்கும்; அதனை யென்னையொழிய வேறேயாராய்ந்து பாரீா, அவன்க ருத்து முன்பு அத்தன் மைத்து, காணுங்களென்முனென்க.

வீந்தால் எதிர்காலவினையெச்சம் வீ பகுதி. (உகூகூ)

சொற்றிறலன் றிமன்னீர்தொக்குநீர்காண்மினெங்கள்
விற்றிறலென்றுவில்வாய்வெங்கணைதொடுத்துவாங்கிக்
கற்றிரள்கழிந்துமண்ணுட்கரந்ததுகுளிப்பவெய்திட்
டிற்றெமர்கல்வியென்முனிடியுருமேற்றேடொப்பான்.

இ - ள், உரும்ஏற்றேடு ஒப்பான்—இடியேற்றேடொத்த பதுமுகன், மன்னீர்—அரசர்களே, எங்கள் சொல் திறல் அன்றி — எங்கள் சொல்வன் மையல்லாமல், வில்திறல்—வில்வன்மையையும், தொக்கு நீர்காண்மின் என் று—நெருங்கி நீங்கள் காணுங்களென்று, வில்வாய்வெங்கணைதொடுத்துவாங் கி—வில்லிடத்துக் கொடிய அம்பினை யேறிட்டு வளைத்தலால், கரந்த அது கல்திரள் கழிந்து — தன்னுள்ளே மறைந்த அவ்வம்பு கற்றிரளைக் கழிந்து, மண் உள் குளிப்ப எய்திட்டு—மண்ணுள்மூழ்கஎய்து, எமர்கல்வி என்முன்— எம்முடையவர்கள் கற்றகல்வி யிதுவென்றுகூறினன்.

(ந - ள.) உருமேற்றேடொப்பான் மன்னீர், எங்கள் சொல்வன்மை யன்றி வில்வன்மையுந் திரண்டு நீர்காண்பீராகவென்று கூறி வில்வாயிலே கணையைத்தொடுத்து நிரம்பவாங்குதலாலே தன்னுள்ளே கரந்த அவ்வம்பு

கற்றிரளைக் கழிந்து மண்ணுட் குளிப்பவெய்து எமர்கள் கல்வியெல்லாம் இத்தன்மைத்தென்ருனென்க.

கரந்த பெயரெச்சத்தினிறுதிதொகுத்தல். மன்னீர் விளிவேற்றுமை.

ஆழியங்கழனிதன்னுளம்பொடுகணையம்வித்திச்
சூழ்சுடர்பிணங்கண்மல்கவிளைத்தபின்ருெழுதிப்பல்பேய்க்
கூழ்படுகுருதிநெய்யினிறைச்சிச்சோறூட்டிவென்றி
வீழ்தரவேட்டுநின்ருரெய்துபவெகுளல்வேண்டா.

இ - ள். ஆழி அம் கழனிதன் உள் — சக்கரயூகமாக வகுத்த அழகிய சேனையாகிய வயலுள், அம்பு ஒடுகணையம் வித்தி—அம்பையுந் தண்டாயுதத்தையும் விதையாகவிதைத்து, சுடர் சூழ் பிணங்கள்மல்கவிளைத்தபின்—சுடர் சூழ்ந்த பிணங்களாகிய நெல்லை நிரம்ப விளைவித்தபின்பு, பல்பேய்தொழுதிக்கு—பலபேயாகிய கூட்டத்திற்கு, குருதிநெய்யின்—உதிரமாகிய நெய்யோடு இறைச்சி கூழ்படு சோறு — இறைச்சியாகிய முறையமைந்த சோற்றினை, ஊட்டி—உண்பித்து, வென்றிவீழ்தர வேட்டு நின்ருர — விசயமகள் விரும்பும்படி களவேள்விசெய்து நின்றவர்கள், எய்துப — இவளையடைவார்கள், வெகுளல் வேண்டா — ஒருபயனில்லாமல் கோபிக்கவேண்டா என்று கூறினன்.

(ந - ளா.) சக்கரயூகமாக வகுந்தபடையாகிய விளைநிலத்தே அம்பையுந் தண்டாயுதத்தையும் விதையாக விதைத்துப் பிணமாகிய நெல்லைவிளைவித்தபின்பு, குருதியாகிய நெய்யுடனே யிறைச்சியாகிய ஆழ்படுசோற்றைப் பலபேய்க்கூட்டி விசயமகள் விரும்பும்படி களம் வேட்டு நின்றவர்கள் இவளைப்பெறுகின்ருர்கள்; ஒருபயனின்றி வெகுளல்வேண்டா வென்ருனென்க.

இவை இரண்டுந்தண்டம். இது வாகைத்திணையுட் களவேள்வித்துறை. வேட்டு இறந்தகாலவினையெச்சம் வேள் பகுதி, டகரமெய் இறந்தகாலவிடைநிலை, ளகரததிரிபு சந்தி, உ எச்சவிகுதி. (உசுரு)

போர்ப்பறைமுழங்கியெங்கும்பொருவளிபுடைகசுப்பட்ட
கார்க்கடல்போன்றுசேனைகலக்கமோடுரறியார்ப்பத்
தார்ப்பொலிமார்பனேர்ந்துதன்கையில்வீணைநீக்கி
வார்ப்பொலிமுலையினுட்குவாய்திறந்திதனைச்சொன்னுன்.

இ - ள். பொருவளிபுடைக்கப்பட்ட—மோதுங்காற்ருலடிக்கப்பட்ட, கார்கடல்போன்று-கரியகடலொலியையொத்து,எங்கும்போர்பறைமுழங்கி-எவ்விடத்தும் போர்த்தொழிலுக்குரியபறைமுழங்க,சேனைகலக்கம்ஒடுஉரறிஆர்ப்ப—சேனைமுன்னின்ற நிலைகுலைதலோடு கோஷிக்க, தார்பொலி மார்பன் ஓர்ந்து—மாலையால் விளங்கு மார்பினையுடையசீவகனுணர்ந்து, தன் கையில் வீணை நீக்கி—தனதுகையிலுள்ள வீணையை நீக்கி, வார்பொலி முலையினுட்கு—கச்சால்விளங்கு முலையையுடைய தத்தைக்கு, இதனை வாய்திறந்துசொன்னுன்—இதனை வாய்திறந்து கூறினன்.

(ந - ளா.) காற்றடித்தகடல்போலெங்கும் பறை முழங்கிச் சேனையார்

ப்ப, அதனை மார்பனேர்ந்து நீக்கித் தந்தைக்கு இதனை வாய்விட்டுக்கூறினு னென்க.

முழங்கி செயவெனெச்சத்திரிபு. உரறல் முழங்கல். பறை அடிக்கப்ப டுவது என்னும் பொருள்மேல் நிற்றலால் செயப்படுபொருளுணர்த்தும் இகர விகுதியொடுபுணர்ந்து குன்றிய தொழிற்பெயர். (உகசு)

நாற்சீரால்வந்தநாலடிந்தரவுகோச்சகம்.

தேய்ந்துநுண்ணிடைநைந்துகச்செப்பினைக்
காய்ந்தவெம்முலையாய்நினகண்கள்போல்
ஆய்ந்தவம்பினுக்காரிரையாகிய
வேந்தர்வேண்டிநின்றார்விம்மனீயென்றான்.

இ-ள். நுணஇடைதேய்ந்து நைந்து உக—நுணணிய இடை குறை ந்துகெடும்படி, செப்பினை காய்ந்த வெம்முலையாய்—செப்பினைவென்ற விருப்ப ந்தரு முலையாய், நினகண்கள்போல் — உன்னுடைய கண்கள்போல, ஆய்ந்த அம்பினுக்கு—(தப்பாதென்று) ஆய்ந்த அம்புக்கு, ஆர் இரையாகிய—நிறைந்த இரையாவதற்கு, வேந்தர்வேண்டிநின்றார்—அரசர்கள்விரும்பிநின்றார் நீவிம் மல் என்றான்—நீவருந்தா தொழிகவென்று சீவகன் கூறினன்.

(ந-ரை) இடை குறைந்துகெடும்படி செப்பினைக்கெடுத்த முலையாய், நின்னுடைய கண்கள்போல் தப்பாதென்றாய்ந்த அம்பிற்கு இரையாவதற்கு வேந்தர் விரும்பிநின்றார், நீ வருந்தாதொழிகவென்றானென்க.

விம்மல் எதிர்மறை வியங்கோள் வினைமுற்று விம்முபகுதி, உகரக்கேடு சந்தி, அல்வியங்கோள் விகுதி. உடன்பாட்டில் "மக்கட்பதடியெனல்" என வருதல்காண்க. (உசுஎ)

அண்ணல்கூறலுமம்மனையோவெனாத்
துண்ணெனெஞ்சினளாய்த்துடித்தாயிழை
கண்ணினீர்முலைபாயக்கலங்கினாள்
வண்ணமாக்கவின்சொல்லொடுமாய்ந்ததே.

இ-ள். அண்ணல் கூறலும் — சீவகன்கூற, ஆயிழை அம்மனைஓ என்று—தத்தையம்மவோவென்று, துண்ணென் நெஞ்சினளாய் — துணுக் கென்ற மனமுடையவளாய், துடித்து—தேகநடுங்கி, கண்ணின்நீர்முலைபாய- கண்களினின்று நீர் தனத்தின்மேல் பாய்ந்திழிய, கலங்கினாள்—கலங்கினின் றனள், வண்ணம்மாகவின்சொல் ஒடுமாய்ந்தது— (அப்பொழுது) அவளது நிறத்தின் பெரிய அழகும் அவன்சொல்லுடனே கெட்டழிந்தது.

(ந-ரை.) தலைவன் அதனைக் கூறினனாக, ஆயிழை அம்மேயோவென் றுத் துணுக்கென்ற நெஞ்சினளாய் மெய்ந்நடுங்கி அழுது கலங்கினாள்; அப் பொழுது அவளதுகவின், அவன் கூறிய கூற்றுடனே பொன்றக்கெட்ட தென்க.

பாய என்னுஞ் சினைவினை கலங்கினாள் என்னு முதல்வினையோடு முடி ந்தது. ஒடு உருபுகலப்புறுபொருளில்வந்த வுடனிகழ்ச்சிப் பொருட்டு. ()

மேவிநம்பிக்குவெம்பகையாக்கிய
பாவியேனுயிர் பாழுடல்பற்றுவிட்
டாவியோநடவாயென்றழுதுதன்
காவிவாட்கண்கலங்கவதுக்கினாள்.

இ - ள். நம்பிக்குமேவி — சீவகனுக்கு உறவாயிருந்து, வெம்பகை ஆக்கிய—கொடிய பகையை விளைவித்த, பாவியேன் உயிர்—பாவியேனது உயிரே, பாழ் உடல் பற்று விட்டு—நீ பாழாகிய வுடலைக்கைவிட்டு, நடவாய் ஆவிஒஎன்று அழுது—போகின்றிலைநீயுமோருயிரோவென்றழுது, தன் காவி வாள் கண்கலங்க—தனது நீலோற்பலத்தையும் வாளையுமொத்த கண்கள்கலங்க, அதுக்கினாள்—அடித்துக்கொண்டாள்.

(ந - ரை.) உறவாயிருந்து நம்பிக்குக் கடிய பகையை விளைவித்த பாவியேனது உயிரே, நீபாழுடலைக்கைவிட்டுப் போகின்றிலை, இங்ஙனம் போகாதநீயும் ஓராவியோ வென்றழுது தன் கண் கலங்க அடித்துக் கொண்டாளென்க.

பாவியேனது பாழுடல்எனவும்பாடம். மேவுதல்விரும்புதலால் உறவாயிருந்து எனப்பொருள் கொண்டார். (உசுக)

பாழிநம்படைமேலதிப்பாரெலாம்
நூழிலாட்டி நுடக்கிக்குடித்திடும்
வாழிநங்கைகண்டாயென்றுவாட்கணீர்
தோழிதூத்துகிற்றாகையினீக்கினாள்.

இ - ள். நங்கை—நங்கையே, பாழிநம்படைமேலது— வலிமையையுடைய நமதுபடைமேலேநின்றது, இபார் எல்லாம்—இவர்களேயன்றி இந்நிலவுலகிலுள்ளோரெல்லாரையும், நூழிலாட்டி— கொன்றுகுவித்து, நுடக்கி குடித்திடும்—ஒன்றாகககளைத்துக்குடித்துவிடும், கண்டாய்என்று—காணாயென்று, வாள்கண்நீர்—அத்தத்தையினது வாள்போன்ற கண்களினின்று பாயுநீரை, தோழி—தோழியானவள், தூ துகில் தோகையில்நீக்கினாள்—புனிதமாகியதன்முன்றானையால் துடைத்தாள்.

(ந - ரை.) தோழி, நங்காய் வலியையுடைய நம்படைமேலேநின்றது; இஃதுஇவர்களேயன்றி இப்பாரிலுள்ளோரை யெல்லாம் கொன்றுகுவித்து ஒன்றாகக்களைத்துக் குடித்துவிடுங்காணென்று கூறிக் கண்ணீரைமுன்றானையினாலே துடைத்தாளென்க.

கண்டாய் தெளிவுபற்றி எதிர்காலத்தை இறந்தகால மாகக்கூறியது காலவழுவமைதி. நூழிலாட்டு தன்மார்பிற்றைத்த அம்பினைப்பறித்துப் பகைவரைக்கொன்றுகுவித்தல். இது தும்பைத்திணையுள் நூழிலாட்டென்னுந்துறை. பார்பரத்தல் என்னுமுதனிலைத்தொழிற்பெயர் உலகின்மேல்நிற்றலால் தொழிலாகுபெயர். பரபகுதி, முதனீளல்விகாரம், ஈற்றகரம்கெடுதல்சந்தி

எங்கள்பெண்மையுமீர்மலர்த்தார்மன்னர்
தங்களாண்மையுஞ்சால்வதுகாண்டுமென்

றிங்குவார்முரனுங்கலையேந்தல்குல்
நங்கைவாட்படைநங்கையைச்சூழ்ந்ததே.

இ - ள். வார்முரனும்—மிகவுமொலிக்கும்,கலையேந்து அல்குல்நங்கைவாள்படை—மேகலையையேந்திய அல்குலையுடையதத்தைய நுவாளேந்தியசேனை, எங்கள்பெண்மையும்—எங்களதுபெண்தன்மையிலும், ஈர்மலாதார் மன்னர்தங்கள்ஆண்மையும் — குளிர்ந்த மலராற்றொடுத்த மாலையையணிந்த அரசராண்மையிலும், இங்குசால்வது காண்டுமென்று — இவ்விடத்தமைவதொன்றைக்காண்போமென்று, நங்கையைசூழ்ந்தது — அத்தத்தையைச்சூழ்ந்தது.

(ந - ரை.) நங்கைவாட்படை எங்கள்பெண்டன்மையிலும் மன்னராண்டன்மையிலும் அமைவதொன்று காணக்கடவேமென்றுகூறி நங்கையைச்சூழ்ந்ததென்க.

காண்டும் இறந்தகாலத்தில்வந்தது தெளிவுபற்றிவந்த காலவழுவமைதி. காண்பகுதி, டும்விகுதி. (உஎக)

அறுசீரான்வந்தநாலடித்தரவுகோச்சகம்.

கூன்களுங்குறளுமஞ்சிக்குடர்வெந்துகொழும்பொற்பேழை
தான்கொளப்பாயவோடிச்சாந்துக்கோய்புகியசெல்வ
தேன்கொள்பூமாலைசூடித்தாமமாய்த்திரண்டுநிற்ப
வான்பளிங்குருவத்தூணேமறைபவுமாயவன்றே.

இ - ள். கூன்களும் குறளும் அஞ்சிகுடர்வெந்து — கூன்களுங்குறள்களும் பயந்து குடல்வெந்து, கொழும்பொன் பேழைதான்கொள்ள பாய— கொழுவிய பொன்னாலமைந்த பெட்டி தங்களை யுள்ளடக்கிக்கொள்ளுதற்கும், சாந்துகோய் புகிய—சாந்திருததிய பரணியில்புகுதற்கும், ஓடிசெல்வ— ஓடிச்செல்வனவும், தேன்கொள் பூமாலைசூடி—தேனமைந்த மலர்மாலையைச்சூடி, தாமம் ஆய் திரண்டுநிற்ப—மாலைபோலாகித் திரண்டுநிற்பனவும், வான் பளிங்கு உருவம் தூணே—பெரிய பளிங்காலமைந்த உருவத்தையுடைய தூணிலே, மறைப உம் ஆய—மறைவனவுமாயின.

(ந - ரை.) படையெழுச்சி கண்டு கூன்களுங் குறளும் அஞ்சி வெந்து பொற்பெட்டிதான் தங்களை யுள்ளடக்கிக்கொள்வதாகக் கருதி அதனுள்ளே பாய்கைக்கும் சாந்திருந்த பரணிகளிலே புகுகைக்கும் ஓடிச்செல்வனவும், சூடித்திரண்டு நிற்பனவும், உருவத்தையுடைய பளிக்குத்தூணிலே மறைவனவுமாயினவென்க.

பாய, புகிய என்னும் நிகழ்காலவினையெச்சங்களினின்று பிரிந்ததொழிற்பெயர்கள் நான்கனுருபு ஏற்றுநின்றன. (உஎஉ)

இங்கிதநிலைமைநோக்கிமுறுவலித்தெரிபொன்மார்பன்
நங்கையைக்காக்கும்வண்ணநகாநின்றுமொழிந்துபேழ்வாய்ச்
சிங்கந்தான்கடியதாங்கோர்செழுஞ்சிங்கமுழக்கிற்சீறிப்
பொங்கிமேற்செல்வதேபோற்பொலங்கழனரலச்சென்றான்.

இ - ள். எரிபொன்மார்பன்-விளங்கும்பொன்னிறமிக்கமார்பையுடைய சீவகன், இங்கிதநிலைமைநோக்கி—குறிப்பினிலைமையைநோக்கி, முறுவலித்து-நகைத்து, நங்கையை காக்கும்வண்ணம் நகாநின்றுமொழிந்து—தத்தையைப் பதுமுகன் காக்கும்படி அதனையத்தத்தைக்குப் புன்முறுவல்செய்துசொல்லி, பேழ்வாய்சிங்கம்தான் கடியது — பிளந்தவாயையுடைய கடியசிங்கமொன்று, ஆங்குஓர்—அவ்விடத்தில் ஒரு, செழும்சிங்கம் முழக்கில்சீறி—வலியசிங்கங்களின் முழக்காலேசீறி, பொங்கிமேல் செல்வதுபோல்—கோபித்துஅவற்றின்மேற்செல்வதுபோலே, பொலம் கழல்நரலசென்றான்— பொன்னாற்செய்த வீரகண்டை யொலிக்கப்பது முகனிடத்திற்சென்றனன்.

(ந - ரை.) பொன்மார்பன் நிலைமைநோக்கி முறுவலித்து நங்கையைப்பதுமுகன்காப்பானாகத் தான்கருதி, அவனையவளுக்கு நகாநின்றுகூறிக்கடியதோர்சிங்கந்தான் அவ்விடத்திற் சிங்கங்களின் முழக்காலே சீறிக்கோபித்து அவற்றின்மேற் செல்வதுபோலே கழல்நரலப்பது முகனிற்கின்ற இடத்தே சென்றானென்க.

இங்கிதன் நிலைமையெனவும் பாடம். இங்கிதநிலைமையாவது சேனையெழுந்ததும, அதனைக்கண்டு அவையஞ்சினதும். நரலகாரியத்தின்மேல்நிற்றலால் எதிர்காலவினையெச்சம் நரல்பகுதி, அவிகுதி. (உஎரு)

பதுமுகக்குமரன்மற்றிப்பாவையைக்காவலோம்பி
மதுமுகமாலைநெற்றிமதகளிறுந்திநிற்ப
நுதிமுகவாளும்வில்லும்நுண்ணிலைவேலுமேந்திச்
சதுமுகமாகச்சேனைநமர்தலைப்பெய்கவென்றான்.

இ - ள். பதுமுககுமரன்மற்று— பதுமுகனாகியகுமரன்வேறாக, இபாவையைகாவல் ஓம்பி— இந்தப்பதுமைபோல் வாளைக்காத்து, மதுமுகம்மாலைநெற்றி—தேனைத்தனதிடத்துடைய மாலைகள்தொங்கு மண்டபத்தின் வாயிலளவும், மதகளிறு உந்திநிற்ப— மதத்தையுடைய யானையைச்செலுத்திநிற்க, நுதிமுகம்வாளும் வில்லும் — கூர்மையை முகத்திலேயுள்ள வாளும்வில்லும், நுண்இலைவேலும்ஏந்தி — நுண்ணிய இலைபோலத் தகட்டுவடிவாயுள்ளவேலையுமேந்தி, நமாசதுமுகம்ஆக — நம்முடைய சுற்றத்தார் நான்குகையாக, தலைபெய்க என்றான் — வகுத்தவிடத்தேநிற்கவென்றுசீவகன்கூறினான்.

(ந -ரை.) பதுமுகன்வேறாகஇப்பாவையைக்காப்புப்பண்ணிக்களிற்றைமண்டபத்தின் வாயிலளவுஞ்செலுத்தி அதிலேநிற்க; நம்முடையசுற்றத்தார் வாள்முதலியவறறையேந்தி நஞ்சேனையை நான்குகையாக அவர்வகுத்தவிடத்தே நிறுத்துகவென்றானென்க.

பதுமுகனொழிந்ததோழர்மூவருமூன்றுகையும்,நபுலவிபுலரொருகையுமாகநான்குகை. கைபடைவகுப்பு. காவலோம்பிஒருசொல். கைபடைவகுப்பு.

வட்டுடைமருங்குல்சேர்த்திவாளிருபுடையும்வீக்கித்
தட்டுடைப்பொலிந்ததிண்டேர்தனஞ்செயன்போலவேறிக்

*கட்டளைப்புரவிசூழ்ந்தகால்புடைகாப்பவேவி*
*அட்டுயிர்பருகுங்கூற்றங்கோளெழுந்தனையதொத்தான்.*

இ-ள். வட்டுடை மருங்குல்சேர்த்தி—காலுரியை இடையிலுடுத்து, வாள்இருபுடையும்வீக்கி— உடைவாளை இரண்டுபக்கத்திலும்கட்டி, தட்டுடைய—தட்டினையுடைய, பொலிந்ததிண்தேர்—விளங்கியதிண்ணியதேரினில், தனஞ்செயன்போலஏறி—அருச்சுனனைப்போலஏறி, கட்டளைபுரவி சூழ்ந்துகால்புடை காப்பஏவி—பண்ணினையுடைய குதிரையைப்பக்கத்தே சூழ்ந்து கால்காப்பச்சிலரையேவி, அட்டுஉயிர்பருகும் கூற்றம்—கொன்று உயிரைக்குடிக்குமியமன், கோள்எழுந்தது அனையது ஒத்தான்—கொல்ல வெழுந்ததன்மையையொத்துத் தோன்றினன்.

(ந-ரை.) அவரை அங்ஙனமேவித்தான் சேர்த்திவீக்கித்தேரை யேறிப்பண்ணினையுடைய புரவியைப் பக்கத்தேசூழ்ந்து கால்காப்பச்சிலரை யேவிக்கூற்றங் கொல்லுகைக் கெழுந்ததன்மையை யொத்தானென்க.

காலுரிக்குச் சல்லடம் எனஇக்காலத்தே வழங்குவர். (உஎரு)

*புள்ளிரைப்பன்னபொற்றார்ப்புரவித்தேரிரவிபோலா*
*உள்ளுருத்தெழுந்துபொங்கியுடல்சினங்கடவநோக்கி*
*முள்ளெயிறிலங்கநக்குமுடிக்குழாமன்னாகேட்பக்*
*கள்ளவிழலங்கன்மார்பன்கார்மழைமுழக்கிற்சொன்னான்.*

இ-ள். கள்அவிழ் அலங்கல்மார்பன்—தேன்சிந்து மலர்மாலையணிந்த மார்பையுடையசீவகன், புள்இரைப்பு அன்ன பொன்தார்—பறவையினொலியையொத்த ஒலியையுடைய பொன்னாற்சமைந்த சதங்கையையுடைய, புரவி—குதிரைகளைப்பூட்டிய, தேர்இரவிபோலா—தேரில் சூரியனைப்போலவிருந்து, சினம் உருத்துஉள் எழுந்து—கோபம்வெவ்விதாய் மனத்திலெழுந்து, பொங்கி—அதிகரித்து, உடல்கடவ—உடம்பினைச்செலுத்தாநிற்க, முடிமன்னர்குழாம்நோக்கி—கிரீடத்தையுடைய அரசர் கூட்டத்தைப்பார்த்து, முள்எயிறு இலங்கநக்கு கேட்ப—கூரியபற்கள்விளங்க மிகச்சிரித்து அவர்கள்கேட்கும்படி, கார்மழை முழக்கின்சொன்னான்—கரியமேகத்தின் முழக்கத்தைப்போலக்கூறினன்.

(ந-ரை.) அம்மார்பன் தேரிலேயிரவிபோலிருந்து சினம்வெவ்விதாய் மனத்தேதோற்றிமிக்கு உடம்பினைச்செலுத்தாநிற்க மன்னரைநோக்கி மிகநக்கு அவர்கேட்ப மழைமுழக்கம் போலேகூறினனென்க.

போலா செய்யாஎன்னும் உவமையிடைச்சொல்லடியாகப்பிறந்த வாய்பாட்டிறந்த காலவினையெச்சம். உருத்து இறந்தகாலவினையெச்சம் உருபகுதி.

*முருகுலாமுல்லைமாலைமூப்பிலாமுலையினார்நும்*
*மருகுலாம்புலவிநோக்கத்தமிர்தமின்றுகுப்பகொல்லோ*
*கருதலாம்படியதன்றிக்கலதியம்பிவையுங்காய்ந்த*
*பொருதலாம்புகழைவேட்டிவ்வெஃகமும்புகைந்ததென்றான்.*

இ-ள். பொருதல் ஆம்புகழைவேட்டு—போர்செய்தலா லுண்டாகும் புகழைவிரும்பி, கருதல்ஆம்படியது அன்றி—நினைக்கலாகு மளவினதல்லா

ல், இ எஃகமும் புகைந்தது—இந்தவேலும்புகைந்தது, கலதிஅம்பு இவையு ம்காய்ந்த—கேட்டைத் தருமிவ்வம்பு களுங் கோபித்தன (ஆதலால்) நம்— அரசர்களேயுமது, முருகு உலாம் முல்லைமாலை—வாசமிக்க முல்லைமலா மாலையையணிந்த, மூப்புஇல்லாதமுலையினார்—தளராததனத்தையுடைய மனைவிமார், அருகு உலாம்புலவி நோக்கத்து—(யாழ்வாசித்தற்குவந்த) நமதிடத் தமைந்த ஊடலின்குறிப்பால், அமிர்தம் இன்று உகுப்பகொல்ஓ—பின்புபுணர்ச்சியின்பத்தை யிப்பொழுது சிந்துவாரோ, என்றான்—என்றுசீவகன்கூறினான்.

(ந - ரை) போர்செய்தலா னுண்டாம் புகழைவிரும்பி நினைக்கலாம்படியதன்றாகக் கேட்டினைச்செய்தலுடைய அம்பாகிய விவையுங்காய்ந்தன; இவ்வெஃகமும் புகைந்தன; ஆதலான் முலையினார் நீர்யாழ்வாசிக்கப் போந்தீர என்பதனால் நம்மிடததேபிறந்த புலவிநோக்கத்தாற் பின்புதாம் பெறுகின்றபுணர்ச்சியின்பதனைப் பாழேயுகுப்பர் கொல்லோவென்றானென்க.

அமிர்த மென்று குபப வெனவும்பாடம். காய்ந்தபலவின்பாற் படர்க்கை இறந்தகாலவினைமுற்று காய்பகுதி, நகரமெய்சந்தி, தகரமெய்இடைநிலை, அபலவின்பால்விகுதி. (உஎஎ)

வாணிகமொன்றுந்தேற்றாய்முதலொடுங்கேடுவந்தால்
ஊணிகந்திட்டப்பட்டவூதியவொழுக்கினெஞ்சத்
தேணிகந்திலேசுநோக்கியிருமுதல்கெடாமைகொள்வர்
சேணிகந்துய்யப்போநின்செறிதொடியொழியவென்றார்

இ - ள். ஊண் இகந்து ஈட்டப்பட்ட—உணவைக்கைவிட்டுத் திரட்டப்பட்ட, முதலொடு ஊதியமும் கேடுவந்தால்—முதலோடே வருவாய்க்கும் ஒருகெடுதிவந்தால், ஒழுக்குஇன் நெஞ்சத்துஏண்—ஊதியமாகிய நடப்பின்மேல் மனத்தில்நடக்கின்ற வன்மையை, இகந்து—கைவிட்டு, இலேசு நோக்கி—இரண்டையுமிழப்பதில் முதல்பெறுகையே ஊதியமென்றுபாரத்து, இருமுதல் கெடாமைகொள்வர் — பெரியமுதல் கெடாதபடி நின்குலத்தோர் அதனைக்கொள்வர், வாணிகம் ஒன்றும்தேற்றாய்—உனக்குரியவாணிகம் சிறிதும்அறியாய், நின்செறிதொடி ஒழியசேண்இகந்து—இனியுனது நெருங்கிய வளையலையுடைய தத்தையாகிய இலாபத்தைத் தூரத்தி லொழியக்கைவிட்டு, உய்யபோ என்றார்—உன்உடம்பாகிய முதலைக்கொண்டு நீபிழைக்கப்போஎன்று அரசர்கள்கூறினார்.

(ந - ரை.) ஊணைக்கைவிட்டுத் திரட்டப்பட்ட முதலோடே ஊதியத்திற்கும் ஒருகேடுவந்தால் அவ்விரண்டினும்; ஊதியமாகிய நடப்பின்மேல் நெஞ்சத்து நடக்கின்ற திண்மையைக் கைவிட்டு இரண்டையுமிழப்பதின் முதல்பெறுகையும் ஊதியமென்று பார்த்துப்பெரிய முதல்கெடாதபடி அதனைக்கொள்வர் நின்குலத்தோர்; நீயும்அது செய்யாது போர்குறித் தெழுதலினினக்குரிய வாணிகமொன்று மறியாய்; இனிநின்செறிதொடியாகிய ஊதியத்தைக்கைவிட்டு நின்னுடம்பாகிய முதலைக்கொண்டு பிழைக்கப்போவென்றார் என்க

தேற்றாய் தன்வினைக்கும் பிறவினைக்கும் பொதுவாய் முன்னிலையொருமையில்வந்த எதிர்மறைவினைமுற்று இங்குத் தன்வினையில்வந்தது. இது வேஉடன்பாட்டிற்கும் எதிர்மறைக்குமவரும் ஏவலுமாம். தேறுபகுதி, றகரமெய்விரித்தல் விகாரம்' உகரக்கேடுசந்தி, ஆ எதிர்மறைவிகுதி, அனைத்தும் ஒருபகுதி, முதலெழுத்துக்கெட்டு நின்ற ஆய்விகுதி. பிறவினையில் பகுதியிரட்டித்துநின்ற தேற்றுபகுதி. ஏவலிலும் அவ்வாறேகொள்க. இகந்து இறந்தகாலவினையெச்சம் இகபகுதி. முதலொடும் என்பதில்நின்ற உம்மையைப்பிரித்து ஊதியம் என்பதனோடுகூட்டுக. இது தமது மறத்தையெடுத்துக்கூறுதலால் வஞ்சித்திணையுள்நெடுமொழிவஞ்சித்துறை. (உஎஅ)

தம்முடைப்பண்டந்தன்னைகொடுத்தவருடைமைகோடல்
எம்முடையவர்கள்வாழ்க்கையெமக்குமஃதொக்குமன்றே
அம்முடையரசிர்க்கெல்லாமென்கையுளம்புதந்து
நும்முடைதிருவுந்தேசுநோக்குமின்கொள்வலென்றான்.

இ - ள். தம் உடையபண்டம் தன்னைகொடுத்து — (அதனைச்சீவகன் கேட்டு) தமதுபொருளைப் பிறர்கருக்கொடுத்து,அவர்உடைமைகோடல்—அவர்களுடைமையை வாங்கிக்கொள்ளுதல், எம் உடையவர்கள் வாழ்க்கை—எங்குலத்தோர்வாழ்வு (ஆதலால்) அஃது எமக்கும் ஒக்கும்அன்றே— அஃதெமக்கும் ஒக்குமல்லவா; அம்உடைய அரசிர்க்கெல்லாம் — அழகினையுடைய அரசர்களாகிய உங்களுக்கெல்லாம், என்கை உள் அம்புதந்து — என்கையிலுள்ள அம்பைத்தந்து, நும்உடைய திருஉம—உங்களுடைய வீரலட்சுமியையும், தேசுஉம்— புகழையும், கொள்வல் — (இப்பொழுதே) கொள்வேன், நோக்குமின் என்றான் (வல்லீராயின் அவற்றை) காத்துக்கொள்ளுங்களென்றுகூறினான்.

(ந - ரை.) அதுகேட்டுத் தமமுடைய பண்டத்தைப்பிறர்க்குக்கொடுத்து அவர்களுடைமைகளை வாங்கிக்கோடல் எங்குலத்தோர் வாழ்வாதலின், அஃதெமக்குமொக்கும் அல்லவோ; இனியானுங்கட்கெல்லாம் என்கையிலம்பைத்தந்து நும்முடையவீரலட்சுமியையும் இப்பொழுதேகொள்வேன்; வல்லீராயின் அவற்றைக் காப்பீராக வென்றானென்க.

அஃது இயல்பு. ஒளிபோலப் புகழ்எங்கும் பரத்தலால் தேசுஎன்றது உவமையணி. அம்புதந்து திருவுந்தேசுங் கொள்வல்என்றது மாற்றுநிலையணி. இதனைவடநூலார் பரிவிர்த்தியலங்காரம் என்பார். உடையஎன்னுங் குறிப்புவினைப்பெயரெச்சத்தின் இறுதிகெடுதல் கடைக்குறை. இதுவும் நெடுமொழிவஞ்சித்துறை. (உஎகூ)

மட்டலர்ந்தாரினாய்நின்வனப்பினோடிளமைகல்வி
கெட்டலாய்ச்சிலம்புசெம்பொற்கிண்கிணிமகளிர்கோங்க
மொட்டலாமுலைகள்பாய்ந்தவகலத்துச்சரங்கண்மூழ்கப்
பட்டலாய்க்கிடக்கலுற்றாயென்சொலாய்பாவியென்றார்.

இ - ள். மட்டுஉலாம் தாரினாய்—தேன்மிக்க மாலையையணிந்த சீவகனே, சிலம்புசெம்பொன் கிண்கிணி—சிலம்பையுஞ் செவந்தபொன்னாலமைந்

நசதங்கையையு முடைய, மகளிர்கோங்க மொட்டு உலாம் முலைகள்பாய்ந்த அகலத்து—பெண்களது கோங்கரும்பு தோற்றமுலைகள் மோதியமார்பில், சரங்கள்உலாய்மூழ்க—எங்கள்கையம்பு உலாவிமூழ்குதலால். உலாய்பட்டு—கொல்ல இறந்து, நின்வனப்பின் ஒடுஇளமைகல்விகெட்டு—உனது அழகோடு இளமையுங்கல்வியும் அழிந்து, உலாய்கிடக்கலுற்றாய் பாவி— போர்க்களத்திற்கிடக்கலுறறபாவி, என்சொல்லாய் என்றார்—நீஎது தான்சொல்லாயென்று அரசர்கூறினர்.

(ந - ரை.) தாரினுய், சிலம்பு முதலியவற்றையுடைய மகளிரதுகோங்கரும்பு தோற்றுப்போமுலைகள் உலாய்ப்பாய்ந்த அகலத்தே, சரங்கள்உலாய்ப்பாய்கையினுல் பட்டுவனப்பு முதலியனகெட்டுக் கீழ்க்கிடக்கலுற்ற பாவிநீயேது சொல்லாயென்றார்.

உலாய் உலாவி என்னும் இறந்தகால வினையெச்சத்திரிபு. கிடக்கலுற்றாய்ஒருசொல்லாய் நின்ற முற்றுஎச்சம். உலாய்செயவெனெச்சத்திரிபு. (உ௬0)

எரிசுடர்ப்பரிதிமுன் னரிருளெனவுடைந்துநீங்கப்
பொருபடைமன்னா நுங்கள்புறக்கொடைகண்மெற்றிம்
முருகுடைக்குழலினுடன்முகிழ்முலைகலப்பலன்றேல்
இருசுடர்வழங்கும்வையத்தென்பெயர்கெடுகவென்றான்.

இ - ள். பொருபடைமன்னர்—போர்செய்யுஞ் சேனையையுடைய அரசர்களே, எரிசுடர்பரிதிமுன்னர்— விளங்குங்கிரணத்தையுடைய சூரியன்முன்னே, இருள்என்னஉடைந்துநீங்க—இருள்கெடும் வகைபோல எனதுதோற்றங்கண்டு நிலைகெட்டுப்போக, நுங்கள்புறங்கொடைகண்டு— உங்கள்முதுகுகண்டு, மற்றுஇமுருகு உடையகுழலினுள் தன்முகிழ் முலைகலப்பல்—பின்புஇந்தவாசனையுடைய கூந்தலையுடைய தத்தையின் அரும்புபோன்றமுலையைக் கலப்பேன், அன்றேல்—செய்திலனுனல், இருசுடாவழங்கும்வையத்து—சந்திரசூரியர்கள் வழங்கும்நிலவுலகில், என்பெயா கெடுகஎன்றான்—எனதுபுகழ் கெடக்கடவதென்று சீவகன் வஞ்சினங்கூறினன்.

(ந - ரை.) பரிதிமுன்னர் இருள்கெடுமாறுபோல நீர்எனது தோற்றங்கண்டுபோக நுமதுபுறங்கண்டு பின்புகுழலினுளை முலையைக்கலப்பேன், அதுசெய்திலேனுயின், என்புகழ் ஞாயிறுந்திங்களும் வழங்குகின்ற உலகெங்குமபவாது கெடுவதாக வென்றானென்க.

இது அரசர்கூற்றுக்கு வெகுளிபிறத்தலால் வெகுளியென்னு மெய்ப்பாடு. உவமைக்கும் பொருளுக்கும் ஒறறுமையுண்மையால் பொருளின் தொழிலாகிய உடைதலையேற்றிக் கூறினர். புறக்கொடை வலித்தல்விகாரம் மற்றுபிறிது பொருளில்வந்தஇடைச்சொல். கலப்பல்தன்மையொருமையெதிர்காலவினைமுற்று. கலபகுதி, பகரமெய்சந்தி, பகரமெய் எதிர்காலவிடைநிலை, அல்தன்மையொருமைவிகுதி. (உ௬௧)

நாற்சீரடிநாலடித்தரவுகோச்சகம்.

ஆண்மரவாணிலத்தப்புவேல்செய்மூட்
காண்வருகாட்டினக்களிற்றுநீள்வனா

நீணிலவேந்தெனும்வேழப்பேரினம்
பூண்முலைப்பிடிக்கவாய்ப்போர்செய்குற்றவே.

இ - ள். ஆள்மரம் வாள்நிலத்து—ஆளாகிய மரத்தையுடைய வாளாகியநிலத்தில், அம்புவேல் — அம்பும்வேலுமாகிய, செய்முள் — இடு முள்ளையுடைய,காண்வருகாடு—காணத்தக்ககாட்டில், இனம்களிறுநீள்வரை—யானைக்கூட்டமாகிய உயர்ந்தமலையின்மேல், நீள்நிலம்வேந்து என்னும் வேழம்பேர் இனம்—அகன்றநிலவுலகையாளும் அரசர்களென்னும் பெரியயானைக்கூட்டங்கள், பூண்முலைபிடிக்குஅவாய்—ஆபரணத்தையணிந்த தனத்தையுடையதத்தையென்னும் பெண்யானையை விரும்பி, போர்செய்குற்ற — போர்செய்யத்தொடங்கின.

(ந - ரை.) ஆளாகிய மரத்தையுடைய வாளாகிய நிலத்தே அப்புவேலாற்செய்த விடு முள்ளையுடைய எல்லாருங் காண்டலுடைய காட்டில், இனக்களிறுகியவரைமேலே வேந்தராகிய வேழத்திரள் தத்தையென்கிற பிடிக்கு அவாவிப்போா செய்தலுற்றனவென்க.

பூண்முலை இரண்டாம்வேற்றுமைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைநிலைத்தொடர். இது இயைபுருவகவணி. (உஅஉ)

தாழிருந்தடக்கையுமருப்புந்தம்பியர்
தோழராதன்றாள்களாச்சொரியுமும்மதம்
ஆழ்கடற்சுற்றமாவழன்றுசீவக்
வேழயாபோதகமினத்தொடேற்றதே.

இ - ள். ஏழ் உயர் சீவகன் போதகம் - இசையேழினுலுமுயர்ந்த சீவகனுகிய யானை, தாழ் இருந்தடகையும் மருப்பும் தம்பியர் - நீண்டபெரிய தடக்கைகள் நந்தட்டனுகவும் இரண்டு கொம்புகளும் நபுலர் விபுலராகவும், தோழர்தன் தாள்கள் ஆக — தோழர் நால்வாகளுந் தன்னுடைய கால்களாகவும், சொரியும் மும்மதம்— சொரியு மூன்றுமதங்களும், ஆழ்கடல் சுற்றம் ஆக— ஆழ்ந்த கடற்பரப்பையொத்த தேருங் குதிரையுங் காலாளுமாக,அழன்று— கொதித்து, இனத்து ஒடு ஏற்றது — ஆனைத்திரளுடனே போாசெய்யத் தொடங்கியது.

(ந - ரை.) இசையேழினுலுமுயர்ந்தசீவகனுகியயானை, கைநந்தட்டனுக மருப்பு நபுலவிபுலராக,தோழர்நால்வருந்தாளாக, மும்மதந்தேருங்குதிரையுங் காலாளுமாக, அரசராகிய ஆனைத்திரளுடனேபோர்செய்யத்தொடங்கின.

சீவகனை யானையாகக் கூறினமையால் சுற்றம் என்பன மூன்றுபடையெனக்கொள்க. உத்தமயானைக்கு ஏழுமுழவுயரம் விதித்தலின். இவன் ஏழிசையால் வென்றமையால் ஏழுயர்போதகம் என்றார். சுற்றம் சூழ்தல் அது தேர்பரிகாலாள்மேல் நிற்றலால் தொழிலாகுபெயர். உயர்திணை அஃறிணையோடும், முதல்சினையோடு மயங்கி வழுவமைதியாய்வந்த இயைபுருவகவணி. நந்தட்டன்கந்துகன்புத்திரன். நபுலவிபுலா சச்சந்தன் காமக்கிழத்தியர் புதல்வர். (உஅ௩)

குடையுடைவேந்தெனுங்குழாஙகொளுகமுங்
கொடியெனும்பிடியுடைக்குமரவேழமும்
வெடிபடுபோர்த்தொழில்காணவிஞ்சையர்
இடியுடையினமழைநெற்றியேறினர்.

இ - ள். குடைஉடைய—தவளவட்டக்குடையையுடைய,வேந்துஎன்னும் குழாம்கொள்நாகம்உம்—அரசர்களென்னும் கூட்டமாகியயானைகளும், கொடி என்னும்பிடிஉடைய—பூங்கொடிபோல்வாளாகியபெண்யானையையுடைய,குமரவேழமும்—சீவகனாகியயானையும், வெடிபடுபோர்தொழில்காண-முழக்கமமைந்த போர்த்தொழிலைக்காணுதற்கு, விஞ்சையா — வித்தியாதரகள், இடி உடைய மழை இனம் நெற்றி ஏறினர்— இடியையுடைய மேகக்கூட்டத்தினெற்றியி லேறினார்கள்.

(ந - ளா.) வேந்தராகிய யானைகளுந் தத்தையாகிய பிடியையுடையசீவகக்குமரனாகிய யானையுந் தம்மிற் பகைத்தலுண்டாகிய போர்த்தொழிலைக்காண்டற்கு விஞ்சையர் மழைநெற்றியிலே யேறினரென்க.

வெடிபடு பகைக்கும் எனப் பொருள் கூறினும் அமையும் (உஅச)

கனைபொருகடலொடுகார்கணுற்றென
முரசொடுவரிவளைமுழங்கியார்த்தன
அரசருமமர்மலைந்தரணம்வீசினர்
குனைகடற்றனைபோர்க்கோலஞ்செய்தவே.

இ - ள். கனைபொருகடல் ஒடு— கனையொடுமோதுங் கடலொலியோடு, கார்கண்ணுற்றால் என்ன—மேகம்முழக்கஞ்செய்தாற்போல, முரசு ஒடுவரிவளைமுழங்கி ஆர்த்தன— மேகத்தோடு மமைந்த சங்குகள் முழங்கியொலித்தன, அரசரும் அமர்மலைந்து—அரசர்களும போரைமேற்கொண்டு, அரணம் வீசினர்—கவசத்தை யணிந்தனர், குனைகடல்தானை—ஒலிகரும் கடல்போன்றசேனை, போர்க்கோலம் செய்த—போர்க்கோலங்கொண்டன.

(ந - ளா) கடலொலியோடுவொன்முழக்கஞ் சோந்ததென்னும்படி முரசும் வளையு முழங்கியார்த்தன; அப்பொழுது அரசரும்போரையேற்றுக்கொண்டு கவசத்தை யணிந்தார்; அவர்தானையும் போர்க்கோலங் கொண்டனவென்க.

மலைந்து இறந்தகாலவினையெச்சம மலைபகுதி. (உஅரு)

தெய்வதம்வணங்குபுசெம்பொன்வாயுளிட்
டெய்கணைபடுமழைசிதறியெங்கணும்
மொய்யமர்மலைந்தனர்முருகுவிம்முதார்ச்
செய்கழற்சீவகன்வாழ்கவென்னவே.

இ - ள். முருகுவிம்முதார் செய்கழல் சீவகன் வாழ்க.என்ன—வாசமிக்கமாலையும் பொன்னாற்செய்த வீரகண்டையையுமணிந்த சீவகன் வாழ்கவென்று, தெய்வதம் வணங்குபு — அவன்தோழன்மார் தெய்வத்தை வணங்கி, செம்பொன்வாய் உள் இட்டு — செவந்த பொன்னைவாயினுளிட்டு, எங்கண் உம் படுமழை—எவ்விடத்தும்பெய்யுமழையைப்போல, எய்கணைசிதறி—எ

ய்யுமம்பினைச்சிதறி, மொய் அமர் மலைந்தனர்—நெருங்கியபோரை மேற்கொண்டனர்.

(ந - ரை.) சீவகன் தோழருஞ் சீவகன் வாழ்கவென்று கூறுநிற்கத்தெய்வத்தை வணங்கிப்பாடுகுறித்துப்பொற்கடு தம் வாயுளிட்டு எவ்விடமும்பெய்கின்ற மழைபோலக்கணையைச் சிதறுவதாகப் போரைமேற் கொண்டாரென்க.

சிதறி செயவெனெச்சத்திரிபு. வணங்குபு செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகாலவினையெச்சம். (உஅசு)

> கலந்ததுபெரும்படைகணைபெய்மாரிதூய்
> இலங்கினவாட்குழாமிவுளியேற்றன
> விலங்கினதேர்த்தொகைவேழங்காய்ந்தன
> சிலம்பினவியமரந்தெழித்தசங்கமே.

இ - ள். பெரும்படை—அரசர்களது பெரியசேனை, கணைபெய்மாரிதூய்கலந்து—அம்பினைப்பெய்யுமழைபோலத் தூவிக்கலந்தது, வாள்குழாம்இலங்கின—வாளின் கூட்டம் அப்போது விளங்கின, இவுளி ஏற்றன—குதிரையுமொன்றையொன்றேற்றன; தேர்தொகை விலங்கின—தேரின்கூட்டம் ஒன்றையொன்றுதடுத்தன; வேழம்காய்ந்தன—யானைகள் ஒன்றையொன்றுகோபித்தன, இயமரம் சிலம்பின—வாச்சியங்களொலித்தன, சங்கம்தெழித்த—சங்குகள்கோஷித்தன.

ந - ரை. அரசர்பெரும்படை கணையைப்பெய் மாரிபோலத்தூவி இதனோடுகலந்தது, அப்பொழுது இரண்டுபடையில் வாட்குழாமும் இலங்கின; குதிரையும் ஒன்றையொன்றேற்றன; தேரும்ஒன்றையொன்றுதடுத்தன, வேழமுமொன்றை யொன்றுகாய்ந்தன; இயமரமும்இயம்பின; சங்கும் ஒலித்தனவென்க. (உஅஎ)

> சுற்றணிகொடுஞ்சிலைமேகந்தூவிய
> முற்றணிபிறையெயிற்றம்புமூழ்கலின்
> அற்றுவீழ்குழைமுகமலர்ந்ததாமரை
> மற்றவைசொரிவதோர்மாரியொத்தவே.

இ - ள். சுற்று அணி—கட்டமைந்த, கொடுஞ்சிலை மேகம்தூவிய—வளைந்தவில்லாகிய மேகஞ்சிந்திய, முற்று அணி—நிரம்பவலித்தல்பொருந்திய, பிறையயிறு அம்புமூழ்கலின்—அர்த்த சந்திரபாணமூழ்குதலால், அற்றுவீழ் குழைமுகம்—அற்றுவீழுங்குண்டலத்தையுடைய முகங்கள், அலர்ந்ததாமரை அவை-மலர்ந்த தாமரையாகிய அவைகளை, சொரிவதுஓர்மாரிஒத்த—சொரியும்ஒப்பில்லாத மழையையொத்தன.

ந - ரை. அரசர் பெரும்படைகணையைப் பெய்மாரிபோலத் தூவி இதனொடுகலந்தது; அப்பொழுதுஇரண்டுபடையில் வாட்குழாமும் இலங்கின; குதிரையும் ஒன்றையொன்றேற்றன; தேரும் ஒன்றையொன்றுதடுத்தன; வேழமும்ஒன்றையொன்றுகாய்ந்தன, இயமரமும்இயம்பின; சங்கும் ஒலித்தனவென்க. (உஅஅ)

மற்று அசைநிலை.

மறப்படைபசித்தனவயி றின்றார்கெனக்
குறைத்தனர்குஞ்சரங்கூர்தன்மாத்துணித்
திறக்கினரோடுதேர்மைந்தரின்னுயிர்
துறக்கம்போய்ப்புகுகெனத்துணியநூறினார்.

இ-ள். மறம்படைபசித்தன-கொலைத்தொழிலமைந்த ஆயுதம்முன்புபசிகூர்ந்தன, இன்றுவயிறு ஆர்கவென்ன—அவை இப்பொழுது வயிறுநிறைகவென்றுகூறி, குஞ்சரம்குறைத்தனர்—யானைகளைக்கொன்றனர், கூர்தல்மா துணித்து—புறமயிரையுடைய குதிரையைத்துணித்து, ஓடுதேர்இறக்கினர்-செல்லுந்தேரையிறக்கினர், மைந்தர் இன் உயிர்போய்—வீரர்கள் இனியவுயிர்போய், துறக்கம்புகுகவென்ன—விண்ணுலகிற் புகக்கடவதென்று, துணிய நூறினார்—துண்டுபட வீசினார்கள்.

ந - ரை. மறப்படை முன்புவயிறு பசித்தன; அவை இன்று-வயிறுநிறைகவென்றுகூறிக்குஞ்சரத்தைக்குறைத்தார்; மாவைத்துணித்துத் தேரையிறக்கினார்; இன்னுயிர்போய்த் துறக்கம் புகுகெனத் துணியவீசினாரென்க.

ஆர்கவென்னும் வியங்கோளீறுதொகுத்தல். நூறினார் இறந்தகாலவினைமுற்று நூறுபகுதி (உஅக)

அறுசீரால்வந்தநாலடித்தரவுகொச்சகம்.

ஆற்றுவீர்வம்மினெமமோடாண்மைமேம்படி இயவென்பார்
ஏற்றவாமார்பத்தல்லாலிரும்புமேல்விடாதுநிற்பார்
கூற்றம்போற்கொடியயானைக்கோடுழுதகன்றமார்பங்
கீறுப்பட்டழகிதாகக்கிடக்கெனக்கொடுத்துநிற்பார்.

இ - ள். எம்மோடுஆண்மை—எம்முடனே நமதாண்மை, மேம்படிய ஆற்றுவீர்—மேம்படுத்தற்குப்போராற்றுவீர், வம்மின்என்பார்—வாருங்களென்பார், ஏற்றவர்மார்பத்து அல்லால்—எதிர்ந்தவர்மார்பிலல்லாது, இரும்புமேல் விடாதுநிற்பார்— (எதிராதார்மார்பில) இரும்பினைக் கைவிடாதுநிற்பார்; யானைகோடுஉழுது—இயமனையொத்த யானைகொம்புழுது, கீற்றுப்பட்டு அழகிது ஆககிடககவென்ன—வடுப்பட்டு அழகாகக்கிடக்கவென்று, அகன்றமார்பம் கொடுத்துநிற்பார்—தமதுபரந்தமார்பினையானைகுத்தக் கொடுத்துநிற்பார்கள்

ந - ரை. எம்முடனே நமதாண்மை மேம்படுத்தற்குப்போரிற்காற்றுவீர், வாருங்களென்பார்; எதிர்ந்தவர்மார்பிலல்லாமல் எதிராதார்மார்பில் இரும்பினைக்கைவிடாதுநிற்பார்; யானைக்கோடுழுது கீற்றுப்பட்டுக் கிடக்கவென்று மார்பை யானைகுத்தக் கொடுத்து நிற்பார் என்க.

மேம்படிய செய்யியவென்னும் வாய்பாட்டுவினையெச்சம் ஈறுதோன்ற அளபெடுத்துநிற்றலால் சொல்லிசைநிறைத்தலில்வந்த வுயிரளபெடை. வம்மின்முன்னிலைப்பன்மை யெதிர்காலவேவல்வினைற்று வாபகுதி, முதல்குறுகல்விகாரம், மகரமெய்தந்தி, மின் முன்னிலைப்பன்மை யேவல்விகுதி. ()

கழித்துவாண்மாலையாடிக்காட்டுவார்கண்கள்செந்தீ
விழித்துமேற்சென்றவேழம்வேலினால்வலக்கிநிற்பார்

தெழித்துத்தேர்க்கயிறுவாளாலரிந்திட்டுப்புரவிபோக்கிட்
பழிப்பிலகொணர்ந்துபூட்டுபாகநீயென்னநிற்பார்.

இ-ள். கழித்து—உறையினின்றுங்கழித்து, மாலைவாள் ஆடிகாட்டுவோர்—வெற்றிமாலை பூண்டவாட்கூத்தாடிக் காட்டுவார்கள், செந்தீகண்கள்விழித்து—நெருப்புப்புறப்படக்கண்களைவிழித்து, மேல்சென்றவேழம் வேலினால் விலக்கிநிற்பார்—தம்மேலேறிவந்த யானையை, வேலினால் விலக்கிநிற்பார்—வேலினால்விலக்கிநிற்பார்கள், தெழித்து-பாகனைக்கோபித்து, தேர்கயிறுவாளால்அரிந்திட்டு—தேரிற்பூட்டிய கயிற்றினைவாளாலறுத்து, புரவிபோக்கி—குதிரையையோட்டி, பாகநீ—பாகனேநீ, பழிப்புஇலகொணர்ந்து—நல்லகுதிரைகளைக்கொண்டுவந்து, பூட்டுஎன்றுநிறபார்—பூட்டாயென்று நிற்பார்.

ந-ரை. உறையைக்கழித்து வாட்கூத்தாடிக்காட்டுவார், பாகனைக்கோபித்துக் கயிற்றையறுத்துப் போக்கிப்பாகனே, நீ நல்லபுரவிகளைக் கொணர்ந்து பூட்டென்றுநிற்பார். (உகக)

ஐங்கதிக்கலினப்பாய்மாச்சிறிதுபோாகளையீதென்பார்.
வெங்கதிர்வேலிற்சுட்டிவேந்தெதிர்கொண்டுநிற்பார்
நங்கைகல்லியாணநன்றேநமக்கெனநக்குநிற்பார்
சிஙகமும்புலியும்போன்ருர்சீவகன்றோழன்மாரே.

இ-ள். சிங்கமும புலியுமபோன்ருர்—சிங்கத்தையும் புலியையுமொத்த, சீவகன்தோழன்மார்—சீவகனுடைய தோழர்கள், ஐங்கதி கலினம்பாய்மா—ஐந்துகதிகளையும் கடிவாளத்தையுமுடைய பாயாநின்றகுதிரைகளினது, போர்சிறிது ஈதுகளைஎன்பார்—போர்த்தொழில்சிறிது இதனைககளையென்று கூறுவார்; வெமகதிர வேலில்வேந்துசுட்டி—தீக்கொப்புளிக்கும் கிரணம்வாய்ந்த வேலினால் வேந்தரை இவனெனக்கென்று இவனெனக்கென்று சுட்டி, எதிர்கொண்டு நிற்பார்—எதிர்ந்து நிற்பாகள்; நங்கை கல்யாணம் — தத்தைக்குக் கல்லியாணம்நேர்ந்தது, நமக்குநன்று எனநக்குநிற்பார்—நமக்குநல்லதுஎன்றுசிரித்து நிற்பார்கள்.

ந-ரை. பாய் மாப்போாசிறிது இதனைக்களை; வேந்தரைஇவனெனக்கு இவனெனக்கென்று வேலாற்சுட்டி எதிாகொண்டுநிற்பாா.

ஐங்கதி விக்கிதம், வற்கிதம், உபகண்டம், மத்திமம், சாரி. மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வானரகதி, விடபகதிஎனவும்கூறுவர். போரைவிரும்பிநின்றவராதலால் நஙகைகல்லியாண நன்றுஎன்ருர். போன்ருர் வினைமுற்றுப் பெயரெச்சமாய் நின்றது. வங்கிதம் எனவும் கூறுவர் "விக்கிதம் வற்கிதம் வெல்லு முபகண்டம்-மத்திமஞ் சாரியோடைந்து" (உகஉ)

ஒருங்கவன்பிறந்தஞான்றேபிறந்தவருதையத்துச்சி
இரும்பிஞற்பின்னியன்னவெறுழ்வலிமுழவுத்தோளார்
விரும்புவார்வேழவேற்போர்நூற்றுவாநூற்றுக்கோடிக்
கிருந்தனம்வருகவென்பாரின்னணமாயினரே.

இ - ள். அவன்பிறந்த ஞான்றுவ ஒருங்குபிறந்தவர்—(சீவகன்தோழன்மார்) அச்சீவகன்பிறந்த அந்நாளேஒருசேரப்பிறந்தவர்கள், உதையத்துஉச்சி—உதையபருவதத்தினுச்சியை, இரும்பினுல்பின்னிஅன்ன-இரும்பினுற்பின்னிஞலொத்த, எறுழ்வலிமுழவுதோளார்—மிக்க வலிமையையுடைய மத்தளம்போன்ற தோளையுடையவர், வேழமவேல் போர்விரும்புவார—யானையோடுவேலாற்போர் செயதலைவிரும்புவார, நூற்றுகோடிக்கு—அரசர் நூற்றுக்கோடி சேனைக்கு, நூற்றுவாஇருந்தனம—நமதுகூட்டத்துள் நூற்றுவரிருந்தோம், வருகஎன்பார்—அதனுல் போர்க்குவாருங்கள் என்பார், இன்னணும்ஆயினர்—போரில் இவ்வாருயினர்கள்.

ந - ளா. சீவகன்தோழன்மார், அவன்பிறந்தஅன்றே கூடப்பிறந்தவர், தோழர், வேழதத்தோடே வேலாலே பொருதலைவிரும்புவார், நூற்றுக்கோடிப் படைக்குப்போா செய்யவிருந்தேம், வருகவென்பார்,

ஆற்றுவீர்என்ற செய்யுள்முதல்நான்கும் நான்குகையிலும் நின்றபடைத்தலைவரல்லாத தோழர்கள்போாசெய்த வகையைக்கூறினுர். (உகரு)

கூட்டுறமுறுக்கிவிட்ட குயமகன்திகிரிபோல
வாட்டிறற்றேவதததனகலினமாமாலைவெள்வேல்
ஈட்டம்போழ்ந்தியானைநெறறியிருங்குளம்பழுத்திமன்னா
சூட்டொடுகண்ணிசூளாமணிசிந்தித்திரியுமன்றே.

இ - ள். வாள்திறல் தேவதத்தன்—வாளின்வன்மைவாய்ந்த தேவதத்தனது, கலினம்மா—கடிவாளம் பூண்டகுதிரையானது, மாலைவெள்வேல் ஈட்டம்போழ்ந்த — வெற்றிமாலைசூடிய நிணம்வாய்ந்தவேலையேந்திய காலாட்கூட்டத்தைப்பிளந்து, யானைநெற்றிஇருஙகுளம்பு அழுத்தி—யானையினெற்றியில் தனதுபெரியகுழம்பினையழுத்தி, மன்னா சூட்டு ஓடு—பகையரசர்சூடிய போரிற்குரியமாலையோடு, கண்ணிசூளாமணி சிந்தி-கண்ணிமாலையையும் முடியின்மணியையுஞ்சிந்தி, கூட்டுஉற—மட்டிரள் வந்து சேருதலாலே, குயமகன்முறுக்கிவிட்ட—குயவன்திரித்துவிட்ட, திகிரிபோல திரியும்—சக்கரம்போலத்திரியாநினறுன்.

ந - ளா, தேவதத்தன துமாபோழ்ந்து அழுத்திச்சிந்தித் திகிரிபோற்றிரியும்என்க.

உசவுசேர்தலால் என்றுபொருள் கூறினுமமையும். உசவாவதுகரியுர் எண்ணெயுஞ்சேர்ந்தகூட்டு. சூட்டுபோரிற் குரியதும்பைமாலை. சூளாதலைமினுச்சி. போழ்ந்து இறந்தகாலவினையெச்சம் போழ்பகுதி. இதுமுதல்நான்குசெய்யுளால் சேனைத்தலைவராய்நின்ற தோழர்மூவரும் சுபுலவ்புலர் போர்செய்தவகையைக்கூறுகின்றுர். (உகச)

பாய்ந்ததுகலினமாவே ாபுறவையோவெண்ணவுட்கி
வேந்தர்தம்வயிறுவேவநபுலமாவிபுலரொன்புரர்
காய்ந்துதம்புரவிக்காமர்குளம்பினுற்களிற்றினேடை
தேய்ந்துகச்சேர்த்திமாலைத்திருமுடித்திலகங்கொண்டார்.

இ - ள். மா நபுலவிபுலா என்பார்—பெருமையமைந்த நபுலவிபுலனொன்பவர், காய்ந்து—கோபித்து, தம்புரவிகாமர்குளம்பின் ஆல்—தமது குதிரையின் விருப்பஞ்செய்யுங்குளம்பினலே, ஓடைதேய்ந்து உக—பட்டந் தேய்ந்து சிந்த, கலினமா ஓ பறவை ஓபாய்ந்ததுஎன்ன—கடிவாளத்தையுடைய குதிரையோ பறவையோ பாய்ந்ததுஎன்று ஐயங்கொள்ள, களிறறின் சோத்தி—யானையின்நெற்றியிற சேர்த்தலால், வேந்தா — (அந்தயானைகள் மேலிருந்த) அரசர்கள், உட்கிதமவயிறுவேவ—வருந்தித்தமது வயிறுவேம்படி, திருமுடி (அவ்வரசர்கள்) அழகியதலையிற்சூடிய, மாலைதிலகம் கொண்டார்—போரிற்குரிய மாலையையுஞ் சூளாமணியையும்பறித்தாாகள்.

ந - ரை. நபுலவிபுலனென்று கூறுகின்றவாகள் தம்புரவியினது குளம்பாலேபட்டந்தேய்ந்து குழமபடிகளிறறினுதலிலே, மாவோ பறவையோ பாய்ந்ததென்ன அப்புரவியைசசோததி, அவறறின்மேலிருந்தவேந்தா உட்கிவயிறுவேம்படி அவர்முடியிற்சூட்டு மணிகளை வாங்கிக்கொணடாாஎன்க

உட்கிஇறந்தகாலவினையெச்சம் உட்குபகுதி. வேவஎன்னும்எதிர்காலவினையெச்சம் சோத்திஎன்னும் இறந்தகாலப்பிறவினைமுதல் வினையெச்சத்தின்முதனிலைகொண்டது. (உகரு)

காயத்தின்குழம்புதீட்டிககாரிரும்பெறியமேகம்
தோயுமுள்ளிலவின்கூன்காய்சினைதொறுமுதிர்வவேபோல்
மாயங்கொன்மறவர்மாலைப்பைந்தலையுதிர்ந்தசெங்கட்
சேயனுன்றிருவின்பேரான்செழுஞ்சிலைப்பகழியாலே.

இ - ள். கார்இரும்பு—கரியகொடுவாளில், காயத்துஇன் குழம்புதீட்டி—பெருங்காயத்தினது குழம்பைப்பூசி, எறிய (அதனல்) வெட்ட, மேகந்தோயும்—மேகம்படியும், முள்ளிலவு இன்கூன்காய்—முள்ளிலவினது வளைந்த காய், சினைதொறும உதிாவதுபோல்—கிளைகள்தோறும்நின்று உதிாதல்போல, செங்கண்சேய்அன்னான்—செவந்தகண்களையுடைய முருகக்கடவுளையொத்த, திருவின்பேரான்—ஸ்ரீ தத்தனுடைய, செழுஞ்சிலைபகழிஆல்—கொழுவியவில்லிற்கோத்த அம்பினலே, மறவர்மாலைபைந்தலைஉதிாந்த—வீரருடைய வெற்றிமாலைசூடிய பசியதலைகள்கொய்யப்பட்டுச் சிந்தின ,மாயம்கொல்—இதுமாயமோ.

ந - ரை. இரும்பிலே பெருங்காயத்தினது குழமபைப்பூசி, அதனலே இலவினைவெட்ட அதன்காய்உகிா வனபோலே முருகனையொப்பான் ஸ்ரீ தத்தன்வில்லிறறேன்றிய பகழியாலே மறவருடைய மாலைத் தலைகளுதிர்ந்தன; இதுமாயமோவென்க.

உதிர்வதுஎன்னும இறந்தகாலவிடைநிலை பெற்றுவந்த தொழிற்பெயரின்அவ்விகுதி தொகுத்தல். அன்னன்உவம் உருபிடைசசொல்லடியாகப்பிறந்த குறிப்புமுற்றுப் பெயரெச்சமாய் நின்றது "குறிப்புமுற்றெச்சமாகலுமுளவே" என்றமையால். அன்னன் உவமவுருபி டைச்சொல்லடியாகப் பிறந்த குறிப்புவினைமுற்று. அன் உவமவுருபிடைச்சொற்பகுதி, னகரமெய்சந்தி, ஆன்விகுதி. (உகசு)

## காந்தருவதத்தையாரிலம்பகம்

நீனிறப்பெளவமேய்ந்தசூன்முற்றிநீலமேகம்
வானிறவிசும்பினின்றமாரியின்மறைவலாளன்
போனிறப்புத்திசேனன்பொன்னிறம்பகழிசிந்தி
வேனிறமன்னர்சேனைகூற்றிற்குவிருந்துசெய்தான்.

இ - ள். நீலம்நிறம் பௌவம்மேய்ந்து—கரிய நிறத்தையுடைய கடல் நீரைப்பருகி, சூல்முற்றி—சூல்முதிர்ந்து, நீலம்மேகம்—கரியமேகங்கள், நிறம்—ஒளியமைந்த, வான்விசும்பின்நின்ற—ஆகாயத்தில்மாறுதநின்ற, மாரி இன்—காலமழையைப்போல, மறைவலாளன்—அந்தணனாகிய, பொன்நிறமபுத்திசேனன்—பொன்போலும்நிறம்வாய்ந்த புத்திசேனனென்பவன், பொன்பகழிபொன்நிறம்சிந்தி — பொன்விளிம்பு அமைந்த அம்பினைப்பகைவரதுஅழகியமார்பில்தூவி, வேல்நிறம்மன்னர்சேனை—வேலினொளிவாய்ந்த சேனையை, கூற்றிற்குவிருந்துசெய்தான்—இயமனுக்கு விருந்திட்டான்.

ந - ரை. பௌவத்தைமேய்ந்து சூல்முதிர்தலால் நீலமேகம்விசும்பிலே மாறாதுநின்ற காலமழைபோல அந்தணனாகியபுத்திசேனன் பகழியைச்சிந்திச்சேனையைக்கூற்றிற்கு விருந்தாக்கினான் என்க.

போர் நிறப்புத்திசேனன் எனவும்பாடம். நீல் கடைக்குறையாய்நின்ற செய்யுண்மரூஉ. பொன்னிறம் போனிறம்நீட்டும வழிநீட்டல். (உகள)

நாற்சீரால்வந்தநாலடித்தரவுகொச்சகம்.

வீரவேலுடம்பெலாஞ்சூழவெம்புலால்
சோருஞ்செஙகுருதியுணமைந்தர்தோன்றுவார்
ஒருமேலொண்மணிச்சூட்டுவைக்கிய
வாரமேயமைந்ததேர்க்குழிசியாயினா.

இ - ள். வெம்புலால்—முடைநாற்றத்தையுடையதாய், சோரும்செங்குருதி—சிந்துஞ்செவந்தஉதிரம், உள்மைந்தா-சொரியாதுஉள்ளேநிற்கின்றவீரர், வீரம்வேல் - வீரமிக்கவேல், உடம்புஎல்லாம் சூழதோன்றுவார்-தேகமுழுதுஞ் தைத்துச் சூழத்தோன்றுகின்றவர், ஒள்மணிசூட்டுவைக்கிய — ஒள்ளியஅழகிய சூட்டுமேல்வைத்தற்கு, ஆரம்ஏஅமைந்த—பலஆரினலமைந்த, தேர்குழிசி ஆயினர்—தேர்க்குறடாயினர்.

ந - ரை. புலாலையுடைத்தாய்ச் சோருங்குருதிவிட்டுச் சொரியாது உள்ளேநிற்கின்றமைந்தா வேல் உடம்பெலாஞ் சூழத்தோன்றுவார், சூட்டுமேற் வைத்தற்குப்பல ஆருந்தைத்துநிறைந்த தேர்க்குறடாயினர் என்க.

தேரிற்பூட்டிய உருளின்குறடுபோல உடம்பும், அதிற்சூழத்தைத்த ஆர்போலம்பும் எனநிற்றலால் ஒப்புமைக்கூட்டவுவமையணி. ஒரும்அசைநிலை. வைக்கிய இறந்தகாலப் பெயரெச்சம் வை பகுதி, கு சாரியை, கடைக்குறையாய்நின்ற இன்இறந்தகாலவிடைநிலை, அவிகுதி. ககரயகரத்தோற்றமும் உகரக்கேடும்சந்தி. (உகஅ)

பொன்னணுள்புணர்முலைப்போகம்வேண்டிய
மன்னரோடினையவர்மறலிவாளமா

இன்னணமித்தலைமயங்கவத்தலைக்
கொன்னவில்வேலினானிலைமைகூறுவாம்.

இ - ள். பொன் அன்னாள் புணர்முலைபோகம் வேண்டிய—இலக்குமியையொத்த தத்தையின்நெருங்கிய தனபோகத்தைவிரும்பிய, மன்னரொடு—அரசரோடு, இளையவர்மறலி—ஸ்ரீ தத்தன்முதலியோர் மாறுபட்டு, வாள்அமர்—வாளேந்திச்செய்யும்போர், இன்னணம்இதலைமயங்க—இப்படியிவ்விடத்தேகலந்துநிற்க, அதலை — (இங்குவாராது) அவ்விடத்துநின்ற, கொன்நவில்வேலினான் — அச்சந்தரும் வேலையேந்திய சீவகனது, நிலைமைகூறுவாம்—தன்மையையெடுத்துச்சொல்வாம்.

ந - ரை. தத்தையது முலைப்போகத்தை விரும்பியமன்னரோடு தோழர் மாறுபடுதலாலே வாட்போர் இப்படி இவ்விடத்தே மயங்காநிற்க, ஈண்டுவாராது, ஆண்டுநின்ற வேலினான்றன்மை இனிக்கூறுவாம என்க.

கொன்னவில் கொலைத்தொழிலைச்செய்யும் எனப்பொருள்கொள்ளுதலும் ஒன்று. மறலிஇறந்தகாலவினையெச்சம் மறல்பகுதி, இ எச்சவிகுதி. அணம் பொருந்துதல், அதுவகையென்னும்பொருள் மேல்நின்றுஇகரசுட்டின் திரிபாகியஇன்என்பதனோடு புணருமிடத்து ணகரச்சந்திபெற்று இன்னணம்என நின்றதெனஅறிக. ஒருசொல்மற்றொருபொருளைத்தந்து நிற்றல் "உண்டற்குரியவலலாப் பொருளை—உண்டனபோலக்கூறலு மரபே" என்பதில்வந்த ஆக்கவும்மையாற்கொள்க. (உகக)

தம்பியைச்சீவகனோக்கிச்சாமரை
வெம்பரிமான்செவிவீரமந்திரம்
இம்பர்நமிடர்கெடவிரண்டுமெவல்லையாய்
நம்பிநீமொழிகெனநயந்துகூறினான்.

இ - ள். சீவகன் தம்பியைநோக்கி—சீவகனானவன் தனதுதம்பியாகிய நந்தட்டனைப்பார்த்து, சாமரைவெம்பரிமான் செவி—சாமரையையும் விரைந்துசெல்லுஞ் செலவினையுமுடைய குதிரையின் காதில், வீரமந்திரம் இரண்டும்—வீரத்தைத்தரும் இரண்டுமந்திரங்களையும், இம்பர்—இவ்விடத்தில், நம்இடர் கெடநம்பி நீவல்லைஆய்—நமதுதுன்பங்கெட நம்பிநீவிரைந்து கற்று, மொழிக என—சொல்லுவாயாக வென்று, நயந்துகூறினான்—விரைந்துசொன்னான்.

இரண்டு மந்திரங்களில் ஒன்றுபறக்கும்படிசெய்வது; ஒன்றுவேண்டுமிடத்து நிறுத்துவது. அம்மந்திரத்திற்குப் பெயர்காண்ட மந்திரம். இம்பர் இசுட்டிடைச்சொல், பர் இடப்பொருள் மேல்நின்ற இடைச்சொல், மகரத்தோற்றம்சந்தி. அகரச்சுட்டே இடத்தின்மேல்நிற்க, பர்பகுதிப்பொருள் விகுதி யென்றலும்அமையும். (கஉ0)

அறுசீரான்வந்தநாலடித்தாவுகொச்சகம்.

மந்திரங்கேட்டுகொன்கும்வானெட்டிப்புகுவவேபோல்
அந்தரத்திவர்ந்தவாழிக்கானிலம்விட்டமாலைச்

சுந்தரச்சுண்ணமேனிமகளிர்தங்கண்ணுளிட்ட
மைந்தருமிரும்புமொவ்வாவான்புலங்காவல்கொண்டார்.

இ - ள். நான்குடம்—நான்குகுதிரைகளும், மந்திரம்கேட்டு—(நந்தட்டன் கூறிய) மந்திரத்தைக்கேட்டு, வான்எட்டிபுகுவபோல்—ஆகாயத்தையெட்டிப் புகுதல்போல, அந்தரத்துஇவர்ந்த—அந்தரத்தே பாய்ந்தன, ஆழிகால்—வட்டமாகியஉருள், நிலம்விட்ட—நிலத்திற் செல்லுதலொழிந்தன, சுந்தரம்—அழகால், மாலைசுண்ணம் மேனிமகளிர்—மாலையின்மகரந்தம் தோய்ந்தமேனியையுடைய பெண்கள், தம்கண்உள் இட்ட—தமதுகண்களில்வைத்துக் கொண்டிருக்கிற, மைந்தர்உம்—சீவகனும்நந்தட்டனும், இரும்புஉம் ஒவ்வாத—எஃகும் ஒப்பாகாத, வான்புலம்—உண்மையறிவை, காவல் கொண்டார்—கவசமாகக்கொண்டனர்.

ந - ரை. அம்மந்திரத்தை நந்தட்டன்கூறக்கேட்டு நான்குபுரவியும் அந்தரத்தேபாய்ந்தன; வட்டத்தையுடைய உருள்நிலத்தைவிட்டன; அழகால்மகளிர்தண்ணில்வைத்துச் கொண்டிருக்கின்றசீவகனும் நந்தட்டனும்வான்புலத்தை இரும்புமொவ்வாத காவலாககவைக்கொண்டாரென்க.

காவல் கவசம். புகுவதொழில்மேல்நிற்றலால் வினைமுற்றுப்பெயர். இவர்ந்த அஃறிணைப்பலவின்பாற்படாக்கை இறந்தகாலவினைமுற்று இவர்பகுதி, ககரமெய்சந்தி, தகரமெய்இடைநிலை, அவிகுதி. சுந்தரச்சுணணம் வலித்தல் விகாரம். (௬0௧)

வடிகயிறுய்ந்துமுட்கோல்வலக்கையாற்றாங்கிவென்றி
முடிகெனப்புரவிமுள்ளாலுறுத்தினுன்மொழிதறேற்றேன்
கடுகியவண்ணமாவின்றாரொலிகாமர்பொற்றேர்
படையதுசெவியுங்கண்ணும்பற்றிநின்றிட்டவன்றே.

இ - ள். வடிகயிறுஆய்ந்து—குதிரையின் வாய்க்கயிற்றையாராய்ந்து, முள்கோல் வலக்கையால்தாங்கி—தாற்றுக்கோலை வலக்கையிலெடுத்து, வென்றிமுடிகென்ன—நமக்குவெற்றி யுண்டாவதாகவென்று, புரவி-அக்குதிரைகளை, முள் ஆல்உறுத்தினுன்—அத்தாற்றுக் கோலாலுறுத்திச் செலுத்தினுன், கடுகியவண்ணம்தேற்றேன்—அவைவிரைந்துசென்றவிதத்தைச் சொல்லுதலறியேன், மாஇன்தார்ஒலி—குதிரையின்சதங்கையொலி, படை அதுசெவியும்—சேனையினது செவியிலும், காமர்பொன்தேர்கண்உம்—விருப்பஞ்செய்யும்பொன்னுலமைந்த தேர்அச்சேனையின்கண்ணிலும், பற்றிநின்றிட்ட—விடாதுநின்றன.

ந - ரை. குதிரையைத் தொழிலிலேபயிற்றி வாய்க்கயிற்றையாய்ந்து தாற்றுக்கோலையெடுத்து நமக்குவெற்றியுண்டாவதாகவென்றுபுரவியை, அம்முள்ளாலேயுறுத்திச்செலுத்தினுன், அவைகடுகிய தன்மையைச்சொல்லுதலறியேன்; மாவின்தாரொலிபடையினது செவியிலும், தேர் அதன்கண்ணிலும்விடாதே நின்றவென்க.

மாவின்தார் ஒலிசெவியும், பொற்றேர் கண்ணும் பெயர்ச்சொற்களும்

பெயர்ப்பயனிலைகளுமாய்வந்த முறைநிரனிறை. காமமருவுகாமர் தொகுத்தல்விகாரம். வடிக்கயிறு தொகுத்தல். (கூ0உ)

அண்ணறேர்பறவையென்பாரருவமேயுருவமென்பார்
மண்ணதேவானதென்பார்மனத்ததேமுகத்ததென்பார்
கண்ணதேசெவியதென்பார்கலங்கநூல்கழியநோக்கிப்
பண்ணியவீதிபற்றிமண்டிலம்பயிற்றினானே.

இ - ள். அண்ணல்தேர்—சீவகனது தேர்ச்செலவால், பறவைஎன்பார்-பறவையென்றுசிலர்சொல்லுவார், அருவம் ஏ உருவம்என்பார்—அருவமேஇத்தேருக்கு உருவமென்றுசிலர்சொல்லுவார், மண்ணது ஏவானது என்பார்—மண்ணிடத்துள்ளதே வானிடத்துள்ளதென்று சிலர்சொல்லுவார், மனத்தது ஏமுகத்தது என்பார—நமதுமனத்திலுள்ளது முகத்திலுள்ளதென்று சிலர்சொல்லுவார், கண்ணது ஏசெவியது என்பார்—நமதுகண்ணிடத்துள்ளதே செவியிணிடத் துள்ளதென்று சிலர்சொல்லுவாருமாய், கலங்க—கலங்காநிற்க, நூல் கழியநோக்கி—நூலைமிகவும் ஆராய்ந்து, பண்ணியவீதிபற்றி மண்டிலம்பயிற்றினான் — அதிற்பண்ணினவீதியைத் தொடங்கி மண்டில மென்கின்ற கதியைப்பயிற்றினான்.

ந - ரை. தலைவன்தேரைச்சிலர் இப்படிக்கூறுவார், இப்படிக்கூறுவாராய்க் கலங்காநிற்க; நூலைக்கூர்க்கப்பார்த்து அதிற்பண்ணின வீதியைத்தொடங்கி மண்டிலமென்னுங் கதியைப்பயிற்றினானென்க.

வீதிநேராயோடல். மண்டிலம்வட்டமாயோடல். அருவம்எங்குங்கலத்தலால் அருவமேயுருவம் என்பார்என்றா. மண்ணது, வானது இடத்தினடியாகப்பிறந்த குறிப்பு வினைமுற்றுப்பெயர்கள். மனத்தது முகத்தது சினையடியாகப்பிறந்த குறிப்புவினைமுற்றுப்பெயர்கள். நூல்அசுவ இலக்கணநூல். ()

அகில்கொண்டகொள்ளிவட்டமாருயிரமேயுநேமி
முகில்கொண்டமின்னுந்தோற்பமுறுகியவிசையிற்றாகி
இகல்கொண்டவிகலைத்தானேவிழுங்கியசிறகர்தோற்றிப்
பகல்கொண்டுபறக்குந்தேராற்காளைதன்பைம்பொற்றேரே.

இ - ள். காளைதன்பைம்பொன்தேர்—சீவகனது பசியபொன்னாலமைந்ததேர், அகில்கொண்ட கொள்ளிவட்டம் — அகில்தன்னிடத்தேகொண்ட கொள்ளிவட்டமும், ஆர்உயிர்மேயும்நேமி—அரியவுயிர்களைக்கொள்ளைகொள்ளுங் காலசக்கரமும், முகில்கொண்டமின்னும்தோற்ப—மேகத்திற்றோன்றிய மின்னலுந் தோற்கும்படி, முறுகிய விசையிற்று ஆகி—கடுகிய விசையினையுடையதாகி, இகல்கொண்டஇகலை—மாறுபாடுகொண்டபோரினை, தானேவிழுங்கியசிறகர்தோற்றி—தானேவிழுங்குதற்குஓர் சிறகினைத்தோற்றி,பகல்கொண்டுபறக்கும்தேர்—பகலிற்பறக்குந்தேராயிருந்தது.

ந - ரை. காளைதன்தேர் அகில்தன்னிடத்தேகொண்ட கொள்ளிவட்டமுங் காலசக்கரமுமின்னுந் தோற்கும்படிகடுகியவிசையிற்றாகி, மாறுபாடுகொண்டபோரினைத்தானே விழுங்குதற்கு ஓர்சிறகுதோற்றிப்பகலைக்கொண்டு பறப்பதோர் தேராயிருந்தது.

செய்யாலொளிமிகுத்தலால் அகில் கொண்ட கொள்ளிவட்டம் என்றார். நேராயோடலுக்கு மின்னலும், கொள்ளிவட்டமும் காலசக்கரமும் மண்டிலத்திற்குடம் உவமைகளாகக்கொள்க. [சிறகர்இறுதிநிலைப்போலி. கொள்ளிவட்டம்சக்கரம்போலச்சுழலும் ஒருவகைவாணம். (௩௦௪)

> காலற்றவயிரமாலைவெண்குடைகவிழ்ந்தபிச்சம்
> மேலற்றகவசம்வீழ்ந்தசாமரையற்றவின்ஞாண்
> மாலுற்றமன்னர்தங்கண்மனங்கையற்றொழிந்தவள்ளல்
> கோலொற்றக்குனிந்தவாறேசிலைகுனிந்தொழிந்ததன்றே.

இ - ள். வள்ளல்-வரையாது கொடுக்குஞ்சீவகன், கோல்ஒற்ற—அம்பு தொடுத்தற்கு, சிலைகுனிந்தஆறுஏ—வில் ஒருகால்வளைந்தபடியே, குனிந்தொழிந்தது—முழுக்கவளைந்தேநின்றது, மாலைவெண்குடை—மாலைசூழ்ந்த தவளக்குடை, வயிரம்கால்அற்ற—வயிரக்காம்பு அறுபட்டன, பிச்சம்கவிழ்ந்த—பீலிக்குடைகவிழ்ந்தன, மேல்கவசம்அற்ற—உடம்பிலணிந்த கவசமறுபட்டன, சாமரைவீழ்ந்த—சாமரையறுபட்டுவீழ்ந்தன, வில்ஞாண்அற்ற—வில்லிற்பூட்டியநாணற்றன, மால்உற்றமன்னர்தங்கள்—மயக்கங்கொண்ட அரசர்களது; மனம்கையற்றுஒழிந்தது—மனஞ்செயலறுக்குறைந்தது.

(ந - ரை.) வள்ளல்கோல் தொடுத்தற்குவில் ஒருகால்வளைந்தபடியே முழுக்கவளைந்தேநின்றது, அப்பொழுது மாலைவெண்குடைகள் காம்பற்றன, பிச்சம்கவிழ்ந்தன; கவசம்அற்றன, சாமரைவீழ்ந்தன; வில்நாணற்றன; இவைகண்டுமன்னர் மனஞ்செயலறுக் குறைந்தனவென்க.

வின்ஞாண "மெலிமேவி னணவும்" ஈற்றுமெய் னகரமாகத்திரிந்தது. விரைந்துகொல்லாமல் அவர்களையஞ்சுவித்தலின் வள்ளல்என்றார். (௩௦௫)

> நுங்களைவீணைவென்றநூபுரவடியினுடன்
> வெங்களித்தடங்கண்கண்டீர்விருந்தெதிர்கொண்மினென்று
> அங்களியரசர்க்கெல்லாமோரொன்றுமிரண்டுமாகச்
> செங்களிப்பகழியொப்பித்துள்ளவாறூட்டினானே.

இ - ள். நுங்களை (இவைஅம்பல்ல) உங்களை, வீணைவென்ற—வீணையில்தோற்பித்த, நூபுரம்அடியினாள்தன்—சிலம்பணிந்த கால்களையுடைய தத்தையது, வெங்களிதடகண்கண்டீர்—கொடியமதர்த்த பரந்தகண்களென்று காண்பீர், விருந்துஎதிர்கொண்மின்என்று—நீங்கள் விருந்தாய்வந்துஎதிர்கொள்ளுங்களென்றுகூறி, அம்களிஅரசர்க்குஎல்லாம்—அழகியகளிப்பினையுடைய அரசர்களுக்கெல்லாம், ஓர் ஒன்றும் இரண்டும்ஆக—ஒவ்வொன்றும்இவ்விரண்டுமாக, செம்களிபகழிஒப்பித்து—செந்நிறமும் பகைவருயிருண்ணுங் களிப்பும்வாய்ந்தஅம்புகளை அவ்விழுக்காடெய்து, உள்ளஆறுஊட்டினான்—அவர்தரங்களுக்குத் தக்கபடி யழுத்தினான்.

ந - ரை. இவைபகழியன்று! உங்களையாழ்வென்றதத்தையது கண்காணுங்கள், நீங்கள் விருந்தாய்வந்து இவற்றை யெதிர்கொண்மினென்று கூறி அரசர்க்கெல்லாம் ஒன்றும்இரண்டுமாகப் பகழியைவிழுக்காடிட்டுத் தரங்களிலே யழுத்தினானென்க.

விருந்து என்றதற்கு ஏற்ப ஊட்டினான் என்றார். கண்டீர் தெளிவுபற் றிவந்த காலவழுவமைதி. அவள்கண்ணைப் பெறும்வகை இதுவல்லதில்லை யென்றுகூறி நோயித்தவகையை இதனாற்கூறினார். (கூ0எ)

நன்மனவேந்தர் தங்கணகைமணிமார்பநக்கிப்
புன்மனவேந்தர் தங்கள்பொன்னணிகவசங்கீறி
இன்னுயிர்கவர்ந்துதீமையினிக்கொள்ளுமுடம்பினாலுந்
துன்னன்மினென்பவேபோறசுடுசரம்பரந்தவன்றே.

இ - நல்மனம் வேந்தர்தங்கள் நகை—நலமனத்தையுடைய அரசர்கள துநகைப்பாகிய, தீமை—பிறர்மனை நயத்தலை, இனிகொள்ளும்உடம்பின்ஆல் உம்—இனியெடுக்குமுடம்பாலும், துன்னன்மின் என்பபோல்— கருதவொழி மினென்றுகூறுதல்போல, சுடுசரம்-சுடாநின்றஅம்பு, புல்மனம்வேந்தர்தங்க ளை-புல்லியமனத்தையுடையஅரசரது, பொன்அணிகவசகீறி - பொன்னாற்பு னைந்தகவசத்தைககிழித்து, மணிமார்பம்நக்கி—அழகியமார்பினைத்தீண்டி, இ ன்உயிர்கவர்ந்துபரந்த—இனியஉயிரைக் கொள்ளைகொண்டுபரந்தன.

ந - ரை. நன்மனவேந்தர்தம் நகையாகிய பிறர்மனைநயத்தலை இனிக்கொ ள்ளுமுடம்பிலுந் துன்னன் மின்என்பனபோலச் சுடுசரங்கள், இன்னுயிரை க்கவர்ந்தது பரந்தனவென்க.

பழிநாணுவார்க்குப் பிறர்மனைநயத்தல் நகையாதலால் அதனைநகைஎன் றார். இதனாற்சிலருயிரைப் போககினமைகூறினார், சுடுசரம்நக்கி, கீறி, பர ந்த எனமுடிக்க. இதுயாற்றுநீர்ப்பொருள்கோள். துன்னன்மின் எதிர்ம றைமுன்னிலைபபன்மை யேவல்வினைமுற்று. உடன்பாட்டில் துன்னுமின்எ னவரும். துன்பகுதி, னகரத்தோற்றம்சந்தி, அல்எதிர்மறைவிகுதி, அனை த்தும்ஒருபகுதி, லகரத்திரிபுசந்தி, மின்விகுதி. (கூ0அ)

மீனெறிதூண்டில்போன்றவெஞ்சிலைநாண்களறற
தேனெறிகுன்றமொத்ததிண்கச்சைதுணிந்தவேழம
மானெறிகாட்டுந்திண்டேர்கயிறற்றுமறியவேந்தர்
ஊனெறியாழியேந்தியொய்யெனவுலம்பியார்த்தார்.

இ - ள். வேந்தர்—அரசர்கள், மான்நெறிகாட்டும் திண்தேர்—(சேனா வீரர்கள் ஏறிய) குதிரைவழிகாட்டுந் திண்ணியதோகள, கயிறுஅறறு மறிய— கயிறறுபட்டுமடங்கவும், நாண்கள்அற்றவெம்சிலை—நாணற்றகொடியவில், மீ ன்எறிதூண்டில் போன்ற—மீனிழுத்தற்கு வீசுந்தூண்டிலையொத்தன, திண் கச்சைதுணிந்தவேழம்—திணணியகழுத்திடுகயிறு துணடுபட்டயானைகள், தே ன்எறிகுன்றம்ஒத்த—அருவியினலைகள் தேனைவீசும் மலைகளையொத்தன (இ வைகண்டும்) ஊன்எறி—பகைவர்மேலெறியும்,ஆழிஏந்தி—(அவ்வரசர்கள்)ச க்கரத்தையேந்தி, ஒய்யெனஉலம்பிஆர்த்தார்—விரைந்து முழங்கிக் கோஷித் தார்கள்.

ந - ரை. அவரேறினதேர்கள் கயிறற்றுமறியாநிற்க; அவரேறின வேழ ங்கள் கச்சத்துணிந்தவை குன்றமொத்தன; அவர்கையில் நாணற்றசிலைகள்தூ

ண்டில்போன்றன; இவைகண்டும்வேந்தர் பகைவர்மேலெறியும் ஆழியையே க்திவிளைய முழங்கியார்த்தாரென்க.

ஊன்பகைவர்மேல் நிற்றலாற் சினையாகுபெயர். உலம்பிஇறந்தகாலவி னையெச்சம் உலம்புபகுதி. (௩0அ)

ஆர்ப்பெதிர்மாரிபெய்யுமணிநெடுங்குன்றம்போலப்
போர்க்கெதிர்ந்தவருமார்த்தாரார்த்தலும்பூண்டவல்விற்
கார்க்கெதிர்மேகம்போலக்கணைமழைகான்றதிப்பால்
ஈர்த்ததுகுருதிவெள்ளமிறைச்சிக்குன்றாக்கினானே.

இ - ள். மாரிபெய்யும்—மழைபெய்யும், மணிநெடுங்குன்றம்—இரத்தி நங்களையுடைய நெடியமலை, எதிர்ஆர்ப்புபோல—எதிரொலிசெய்யும்வகை போல, போர்க்கு எதிர்ந்தவர்உம்—பகையரசர்போரிற்கு எதிர்ந்த சீவகன்சே னைவீரரும், ஆர்த்தார்—கோஷித்தார்கள், ஆர்த்தலும்—(இவ்வகைஇவ்விரண் டுசேனையும்) ஒலித்தஅளவில், பூண்டவல்வில்—சீவகனது கொலைத்தொழில் பூண்டவலியவில், கார்க்குஎதிர்மேகம் மழைபோல—கரிய நிறத்தைவாய்ந்த மேகம்பெய்யுமழைபோல, கணைகான்றது—அம்பினைவெளிப்படுத்தியது, இ பால்—இப்புறம், குருதிவெள்ளம்—(அதனாலுண்டான) உதிரவெள்ளம், ஈர்த்தது (அற்றுவீழ்ந்தனவற்றைக்களத்திற் குப்புறம்பே) இழுத்தது, இறைச்சி குன்றுஆக்கினான் (அவர்களை) மாமிசக்குன்ற மாகச்செய்தனன்.

ந - ரை. மாரிபெய்யுங்குன்று எதிரொலிபெழுமாறுபோல,அரசர்ஆரவா ரத்திற் கெதிரேசீவகன் படையிலுள்ளவர்கள்ஆர்த்தார்கள், அங்ஙனம்இரண் டும் ஆர்த்தஅளவில் சீவகனது கொலைத்தொழில்பூண்டவில் மேகத்தின்மழை போலம் பைக்கான்றது, அதனாற்பிறந்தகுருதிவெள்ளம் முன்பு அற்றுவீழ்ந்த னவற்றைக்களத்திற்குப் புறம்பேயிழுத்தது; முடிவில் அவரையிறைச்சிக்கு ன்றாக்கி விட்டதென்க.

இதனாற்பகைவர்சேனைபட்ட வகைகூறினார். குவ்வுருபு இரண்டனுரு பு நிற்குமிடத்தில் நிற்றலால் உருபுமயக்கம். கான்றதுஅஃறிணையொன்றன் பாற்படர்க்கை இறந்தகாலவினைமுற்று கால்பகுதி. (௩0௯)

மன்னர்கள்வெகுண்டுவிட்டமறப்படையழுவமாரி
கொன்னுனையெஃகினீக்கிக்குனிந்துவிற்பகழிகான்ற
மின்னவிரிலங்குமொள்வாள்விழித்துயர்விழுங்கவின்ன
தன்மையாற்றானைநீந்தித்தான்விளையாடுகின்றான்.

இ - ள். தான்—அச்சீவகன், மன்னர்கள் வெகுண்டுவிட்ட—பகையர சர்கோபித்தெறிந்த, மறம்படைமாரிஅழுவம்—வெற்றிவாய்ந்த ஆயுதமாகியம ழையின் பரப்பை, கொன்நுனை எஃகின்நீக்கி — அச்சத்தைத்தரும்நுனியில் எஃகினையுடைய அம்பினொருக்கினால் அவற்றைநீக்கி, விழித்து—இமையாம ல்விழித்துப்பார்த்து, வில்குனிந்துகான்றபகழி—வில்வளைந்துகக்கிய அம்பும், மின்அவிர்இலங்கும்ஒள்வாள்—மின்னல்போல ஒளிவீசிவிளங்கும் ஒள்ளியவா ளும், உயிர்விழுங்க—சேனையினுயிரை விழுங்கும்படி, இன்னதன்மையால்

இத்தன்மையால், தானைநீந்தி—சேனையாகிய கடலைநீந்தி விளையாடுகின்ற
ன்—விளையாடாநின்றான்.

ந-ரை. அங்ஙனம் ஆர்த்தஅரசர்விட்டபடையாகிய பெருமழையை இ
மையாதே விழித்துப்பார்த்து அம்பினெருக்கத்தாலே நீகவில்குனிந்து கா
ன்றபகழிவாள் இவையிரண்டும் தானையினுயிரை விழுங்கும்படி தான் இம்மு
றையானேபடைக்கடலை நீந்திவிளையாடாநின்றானென்க.

இன்ன இகரச்சுட்டின் திரிபு. நீந்தி என்றதற்கு ஏற்பத்தானைக் கடல்
என்றார். (௧௪0)

வேழவெண்கோட்டுமெல்கோறின்றுகூன்குருதிவாளால்
ஆழநாவழித்துநெய்த்தோரகொப்புளித்தழிந்தமாவின்
சூழ்குடர்க்கண்ணிசூடிநிணத்துகிலுடுத்துவெள்ளென்
பூழ்பெறவணிந்துசூறபேயாடக்கண்டுவந்துநக்கான்.

இ-ள். சூல்பேய்—சூற்கொண்டபேய, வேழம்வெண்கோடு—யானை
யினதுவெள்ளியகொம்பாகிய, மெல்கோல்தின்று—மெல்லுங்கோலால் பல்
லைச்சீவி, குருதிகூன்வாள்ஆல்—உதிரந்தோய்ந்தவாளாகிய நாவழியால், ஆழ
நாவழித்து—அழுந்த நாவினைவழித்து, நெய்த்தோரகொப்புளித்து—உதிரமா
கிய நீரினைக்கொப்புளித்து, அழிந்தமாவின்—அழிந்தகுதிரையினது, சூழ்குட
ர்கண்ணிசூடி—சூழ்ந்தகுடராகிய மாலையைச்சூடி, நிணம்துகில் உடுத்து—
நிணமாகிய ஆடையையுடுத்து, வெள்என்பு—உக்கவெலும்பாகிய அணியை,
ஊழ்பெறஅணிந்துஆட—முறையாகவணிந்துஆட, கண்டுஉவந்துநக்கான்—
அதனைச்சிவகன்பார்த்து மகிழ்ந்துசிரித்தான்.

ந-ரை அங்ஙனம் விளையாடுகின்றவன், சூற்பேய்கள் கோடாகியகோ
லாலே பற்சீவிவளைந்தவாளாகிய நாவழியாலே நாவழித்துக்குருதியாகியநீரை
க்கொப்புளித்துக் குடராகிய கண்ணியைச்சூடி நிணமாகியது கிலையுடுத்துஎ
ன்பாகிய பூணைமுறைபெறஅணிந்து ஆடக்கண்டு நககானென்க.

மெல்கோல் வினைதொகை நிலைத்தொடர். கொப்புளித்துஇறந்தகால
வினையெச்சம் கொப்புளிபகுதி பேய்என்னுமமுதலின் செயல்களைமுறைபி
றழாமற் கூறினமையால் வினைமுதலவிளக்கணி. இதனைவடநூலார் காரக
தீபகாலங்காரம்என்பார். (௧௪௧)

வெளிற்றுடற்குருதிவெள்ளநிலையிதுவென்பவேபோற்
களிற்றுகிர்ப்பிறழபறபேய்கள்கைகளையுச்சிக்கூப்பி
அளித்தவைபாடியாடக்குறுநரிநக்குவேழம
விளித்தனகழுவும்பாறும்விலாவிற்றுக்கிடந்தவன்றே.

இ-ள். களிறுஉகிர்-யானையினது நகம்போலும், பிறழ்பல்பேய்கள்—
முறைபிறழ்ந்த பற்களையுடையபேய்கள், அளித்தவைபாடி—தம்மைப்பாதுகா
த்தனவற்றைப்பாடி, வெளிறுஉடல்குருதிவெள்ளம்—உதிரம் நீங்கின்பிணத்
தையுடையஉதிரப்பெருக்கினை, நிலைஇதுஎன்பபோல்-நிலையிதுவென்றுகாட்டு
தல்போல, கைகளைஉச்சிகூப்பிஆட—கைகளைத்தமது தலைமேலேகூப்பியாட,

வேழும்—யானைகளைத் தின்ற, நரிகக்குயிளித்தன—நரி அதனைக் கண்டுசிரித்து க்கூப்பிடுதல்போலக் கூட்பிட்டன; கழுகுஉம்பாறு உம்—கழுகுகளும் பருந்து களும், விலாஇற்றுகிடந்தன — (தசைகளைத்தின்று) விலாமுறிந்துகிடந்தன போன்றன.

க - ரை. அவன் நககவளவிலே களிற்றுகிர்போலு முறைகுலேந்தபற்க ளையுடையபேய்கள் அளிக்கததக்கவைபாடி உதிரநீங்கின பிணத்தையுடைய குருதிப்பெருக்கை இதுநிலேயென்று காட்டுவனபோலக் கைகளைத்தந்தலேமே லே கூப்பியாட, வேழங்களைத்தின்றநரிகள் கூப்பிட்டவை அதனைக்கண்டு நக் குக்கூப்பிட்டாரபோன்றன, அதனைத்தின்று செருக்கிக்கிடந்த கழுகும்பாறு ம் அதற்குச்சிரித்துவிலா முறிந்துகிடந்தன போன்றனவென்க. (௩கஉ)

கடல்விளையமிர்தங்கண்டபோழ்திநெய்கனிந்ததீஞ்சோற்
றடிசிலஞ்சுவைமிக்காங்குமண்ணலங்குமரனென்னோர்
உடலின்மேற்றிரியுந்திண்டேர்காணலுமைந்தர்நெஞ்சத்
திடல்பிளந்திட்டவெஃகஞ்சுமந்தமர்த்திறத்தின்மிக்கார்.

இ - கடல்விளை அமிர்தம்கண்டபோழ்து இன்—கடலில்விளைந்த உப்பி னைக்கண்டகாலத்தில், நெய்கனிந்ததீஞ்சோறு அடிசில்—நெய்யிற்பதம்வாய்ந் தஇனியசோற்றின், சுவைமிகுஆங்கு—சுவைமிகுந்தாற்போல, அண்ணல்அ ம்குமரன்—பெருமையிற்சிறந்த அழகிய சீவகன், ஒன்னார் உடலின்மேல்—ப கைவருடலின்மேல், திரியும்திண்தேர் காணலும்—திரிகின்ற திண்ணியதே ரைக் கண்டவளவிலே, மைந்தர்—அவனதுதோழர், நெஞ்சம்திடல் பிளந்தி ட்டஎஃகம்சுமந்து—பகைவரதுமனமாகிய திடலைப்பிளந்துபோகட்ட வேலே யேந்தி, அமர்திறத்துஇல்மிக்கார்—போர்ததிறத்தில் மேம்பட்டனர்.

க - ரை. உப்பினைககண்ட காலத்திலஅடிசிலொழிந்தசுவைகள் மிக்காற் போலப்பகைவருடலின் மேலேதிரிகின்ற குமரன் தேரைக்கணடவளவிலே தோழர், பகைவரது நெஞ்சாகிய திடலைப்பிளநது போகட்ட வேலேயெடுத் துப் போர்த்திறத்திலே மிக்காரென்க.

இதனுல்சீவகனைக்கணடபின் தோழர்களிப்பில மேம்பட்டமைகூறினர். மிக்காங்கு மிக்கு ஆங்கு எனப்பிரித்துமிக்கு செயவென்னும்எச்சத்திரிபாகக் கொள்க. ஆங்குவினையெச்சத்தில்வந்த உவமையுருபு. இதனிறுதியில் நின்ற உம்மை அசைநிலே. (௩க௩)

கடாந்திறந்திட்டுவானிற்களகளமுழங்கும்வேழம்
படாந்திறந்தூழிததீயிறபதுமுகன்காட்டியிட்டான்
தடாமபிறைமருப்புத்திண்கையபரகாத்திரங்கடம்மாற்
கொடாம்பிறகுமரிப்போருட்பிறர்க்கெனக்கொன்றதன்றே

இ - ள். பதுமுகன் — (தத்தையைக் காத்துநின்ற) பதுமுகனனவன், வான்இல்—மேகம்போல, கடாம்திறந்திட்டு—மதத்தைச்சிந்தி, களகளமுழ ங்கும்வேழம்—களகளவென்னும் ஓசைபடமுழங்கும் யானையை, படாம்திற ந்து—முகபடாத்தைத்திறந்து, ஊழிதீஇன்—ஊழித்தீயைப்போல, காட்டியி

ட்டான்—கொண்டுவந்துகாட்டினன், தடாம்பிறைமருப்புதின்கைசுவளைந்த பிறைபோன்றகொம்பும் திண்ணியதுதிக்கையும், அபரகாத்திரங்கள் தம்மூன்-கால்களென்கின்ற வையுமாகிய இவற்றால், குமரிபோர்உள்—தத்தைதகாரணத் தாற்பிறந்தபோரில், பிறர்க்குக்கொடாம்என்ன—பிறர்க்குக் கொலைத்தொழிலைக்கொடே மென்று,கொன்றது—கொலைசெய்தது.

ந-ரை. பதுமுகன் வான்போலக் கடாந்திறந்திட்டுக் களகளவென்னு மோசைபடமுழங்குகின்ற வேழத்தை வழித்திப்போலக் கொண்டுவந்து காட்டினன், அது, வளைந்தபிறைபோலு மருப்புக் கைகால்களென்கின்ற வற்றாலேதத்தை காரணத்தாற் பிறந்தபோரிற் பிறர்க்குக் கொலைத்தொழிலைக் கொடேமென்று கொன்றதென்க

உரகாத்திரம் என்பதனைத் தலையென்றும், அவரகாத்திரம் என்பதனைக் காலென்றுங்கூறுதல் வடநூல்வழக்கு. அதுதமிழிற்சிதைந்து அபரகாத்திரம் எனவந்தது. இது தற்பவம். குமரிபபோரஎன்றதற்குக் கன்னிப்போர்என்று பொருள்கொள்ளலும ஒன்று பிற அசைநிலை யிடைச்சொல். காட்டியிட் டான் துணிவுப்பொருளில வந்தபிறவினைமுற்று காட்டுபிறவினைப்பகுதி, இடு துணிவுப்பொருளில் வந்தவிகுதி, உகரக்கேடும யகரத்தோற்றமும் சந்தி, இதுவனைக்கும் ஒர்பகுதி, முதனிலையெழுத்தாய்த் தோன்றிநின்ற டகரமெய் இடைநிலை, உகரக்கேடுசந்தி, ஆன் விகுதி. (கூகச)

> மருப்பினால்வேழம்வீழா மன்னரைவாலிற்சீறு
> முருககித்தேர்தடக்கைதன்னால் முழங்கிப்பாய்மாக்கள்காலின்
> நெரித்திடாககண்ணுட்டீயாற் சுட்டுநீறாககிநெய்ததோர்
> ஒருக்குபபேய்பாடியாட வுறுசிலையுடன்றுகொண்டான்.

இ-ள். மருப்பின்ஆல் (அந்தயானை) தன்கொம்பினால், வேழம்வீழா - யானைகளைவீழ்த்து, மன்னரைவாலின்சீறு - அரசர்களைவாலாற் கோபித்து, தேர்தடகை தன்ஆல்முருக்கி - தேரினைநீண்ட துதிக்கையினாலழித்து, முழங்கிபாய்மாக்கள் - முழங்கிப்பாயுங் குதிரைகளை, காலின்நெரித்திடா - காலினால் நெரித்து, கண்உள்தீயால் - கண்ணிலுள்ள கோபத்தீயால், நெய்த்தோர்சுட்டுநீறுஆக்கிஒருக்கு - உதிரவெள்ளத்தைச் சுட்டுநீறாக்கிக் கெடுக்கவும், பேய்பாடிஆட - பேய்கள்பாடியாடவும், உறுசிலைஉடன்றுகொண்டான் - போர்த்தொழிலில் மிக்கவில்லினைக் கோபித்துக் கையிலேந்தினன்.

ந-ரை. அஃது எங்ஙனங் கொன்றதெனில் மருப்பாலே வேழத்தைவீழ்த்து; வாலினால் மன்னரைச்சீறி; கையினாற்றேரைமுறித்து; காலால் மாவை நெரித்து; கண்ணிற்கோபத்தீயால் நெய்த்தோரை நீறாக்கிக்கொன்றது, அதன் கொலையோடே அவனுங் கொல்லக்கருதிப் பேய்பாடியாடும்படி, சிலையை வாங்கிக் கொண்டானென்க.

வீழா, சீறு, நெரித்திடா செய்யாஎன்னும் வாய்பாட்டிறந்தகாலவினை யெச்சங்கள். முருக்கி இறந்தகாலவினையெச்சம் முருக்குபகுதி. இவ்வினையெச்சங்கள்ஒன்றனையொன்றுகொண்டு ஒருக்குஎன்னும் இறந்தகாலப் பிறவினைவி

வினையெச்சத்தின்முதனிலையைக்கொண்டன. ஒருக்கு, ஆடவென்னும்வினையெச்சங்கள், வேறுபலவடிக்கி, கொண்டான் என்னும் வினைமுற்றின் முதனிலையைத் தனித்தனிகொண்டன. ஒருக்குபிறவினைப்பகுதி, உகரச்கேடுசந்தி, உ எச்சவிகுதி, தன்வினையில் ஒருங்குஎனவரும். ஒருங்கல் கெடுதல். ஒருக்கு செயவெனெச்சத்திரிபு.

ஐஞ்சீரால்வந்த நாலடித்தரவு கொச்சகம்.

கொண்டான்பகழிதொடுத்தான்சிலைகால்குனிந்த
தொண்டேர்மிசையுமுருவக்களிற்றுச்சிமேலும்
வண்டார்ப்புரவிநிறத்தும்மறமன்னர்மேலும
கண்டான்சொரிந்தான்கணைமாரிகலந்ததன்றே.

இ-ள். சிலைகொண்டான் பகழிதொடுத்தான் - வில்லைக்கொண்டபதுமுகன் அம்பினைத்தொடுத்தனன், கால்குனிந்தது - அவ்வில்வளைந்து கக்கிய அம்பை, ஒள்தேர்மிசைஉம் உருவமகளிறு உச்சிமேலும் - ஒள்ளியதேரின் மேலும் உருவமைந்த யானையினுச்சிமேலும், வண்தார் புரவிநிறத்துஉம் - வளமமைந்த சதங்கையையுடைய குதிரையின் மார்பின்மேலும், மறம்மன்னர்மேலும் - வெற்றியமைந்த அரசர்மேலும், சொரிந்தான் (அழுந்த) அம்பினைச்சொரிந்தனன், கணைமாரிகலந்தது கண்டான் (தனக்குமுன் போர்செய்யும் சீவகன் வேறொருமுகத்தேநின்று) எய்கின்ற அம்பாகிய பெரியமழைஇதனோடுகலந்த தனைப்பார்த்தான்.

க-ரை. வில்லைக் கொண்டவன் அம்பைத்தொடுத்தான்; அப்பொழுது அது கால்வளைந்துகான்ற அவ்வம்பை மிசையிலும், உச்சிமேலும், நிறத்தும் மேலுமழுந்துவதாகச் சொரிந்தான்; அங்ஙனஞ் சொரிந்தவன் முன்பொருகின்றசீவகன் வேறொருமுகத்தே நின்றெய்கின்ற கணைமாரி இதனோடு கலந்ததனைப்பார்த்தான்.

இதுவும் அடியில்வருஞ் செய்யுளும் ஒருதொடர் குனிந்தது செயப்படுபொருள்மேல் நிற்றலால் வினைமுற்றுப்பெயர். (௬௯௬)

பைம்பொற்புளகப்பருமகளியானையீட்டம்
செம்பொன்னெடுந்தேர்த் தொகைமாக்கடற்றானைவெள்ளம்
நம்பன்சிலைவாய்நடகுநகணைமிச்சிலல்லால்
அம்பொன்மணிப்பூணரசும்மிலையென்றுநக்கான்.

இ-ள். பைம்பொன் - பசியபொன்னாலமைந்த, புளகம்பருமம்களியானை ஈட்டம் - புளகம் வாய்ந்தகவசத்தையும் மதச்செருக்கையுமுடைய யானையின்கூட்டமும், செம்பொன் நெடுந்தேர்தொகை - செவந்த பொன்னாலமைந்த நெடியதேரின் கூட்டமும், கடல் - கடல்போன்ற, மாதானைவெள்ளம்- பெரியசேனைவெள்ளமும், அம்பொன் மணிபூண்அரசுஉம் - அழகியபொன்னாற்செய்த இரத்தினமழுத்திய ஆபரணத்தையணிந்த அரசரும், நம்பன்சிலைவாய் - சீவகன்து வில்லினிடத்து, நடக்கும்கணை - நடக்காநின்ற அம்பினால், மிச்சில் அல்லாமல் - எச்சிற்பட்டதல்லாமல், இல்லைஎன்று நக்கான் - வேறொன்றுமில்லை,யாம் எவ்விதம்போர் செய்வதென்று சிரித்தான்.

ந-ரை. கண்டு இம்மாரியால் யானையீட்டம் தேர்த்தொகை கடல்வெள்ளம் என்கின்றவையும் அரசும் நம்பன்கணைமிச்சி லல்லாமல் இல்லையாயிருந்தவென்று வியந்து யாம் இனி எங்ஙனம் பொருவேமென்று கருதி நக்கான் என்க.

புளகம் கவசத்திற்றைத்த கண்ணுடி.

அறுசீராலவந்தகாலடித்தரவுகோச்சகம்.

ஒருவனேசிலையுமொன்றேயுடையதோர்களிற்றின்மேலான்
அருவரைமார்பிற்சென்றதறிந்திலனெஃகமின்னும்
பொருவரோமன்னரொன்ருன்பொருசிலைமடக்கியிட்டார்
வருகளியானைமீட்டார்வாட்படைவாங்கிக்கொண்டார்.

இ-ள். வாள்படை வாங்கிக்கொண்டார - உறையினின்றுங் கழித்த வாளினைக் கைக்கொண்டபகையரசர், ஒருவனே (இப்படிச்சிரித்த பதுமுகன் ஒருவனேவேறுதுணையிலன், சிலைஉம்ஒன்றே - தனக்குவில்ஒன்றே யல்லாமல் வேறுசேமவில்லுமில்லை, உடையது ஓர்களிற்றின் மேலான் - தனக்குள்ள ஒருயானையின் மேலுள்ளவனே யல்லாமல் வேறிலன், அருவரைமார்புஇல் சென்றது எஃகம் - அரியமலைபோன்ற மார்பிற்றைத்த வேலையும், அறிந்திலன் - உணர்ந்திலன், இன்னும் - இன்னமும், மன்னர்பொருவர்ஓ என்ருன் - அரசர்கள் போர்செய்வாரகளோ வென்றிகழ்ந்தனன்; வருகளியானை மீட்டார்—(அதுகேட்டு) தம்மேல் வருமதக் களிப்பினையுடைய யானையைத் திருப்பினுர்கள், பொருசிலைமடக்கியிட்டார்—(அதுகண்டுசீவகனுந்தோழரும்) இவர்கள்மேல் அம்பெய்ய வேண்டுவதில்லையென்று, போர்த்தொழிற்குரிய வில்லினுணினை யிறக்கினுர்கள்.

ந - ரை. இங்ஙன நக்கபதுமுகன் ருன்துணையுமிலன், தனக்குச்சேமவில்லுமில்லை, ஒருகளிற்றின்மேலான், இவன்தான் பகைவரெறிந்த வேல்மார்பிற்றைத்தது மறிந்திலன், பின்னுமேற்சென்று மன்னா பொருவரோவென்றிகழ்ந்தான்; இவன் நொந்தானென்று போர்செய்ய வாள்வாங்கிக்கொண்ட மன்னரெல்லாம் இதுகேட்டு மேல்வருகின்ற யானையைமீட்டார்; அதுகண்டு சீவகனுந்தோழரு மினிஇவரை யெய்யவேண்டுவ தில்லையென்று தங்கையில் வில்லைமடக்கி யிட்டாரென்க.

ஏகாரம் பிரிநிலை. ஓகாரம் எதிர்மறைப்பொருட்டு. இதனுல் அவர்களஞ்சினமை கூறினுர். (ருகஅ)

செங்கண்மாறெழிக்கப்பட்டவலம்புரித்துருவங்கொண்ட
சங்குவாய்வைத்துநம்பன்றெழித்தலுந்தறுகணுளி
பொங்கியமுழக்கின்வேழப்பேரினம்புலம்பினுற்போற்
றங்குதார்மன்னரெல்லாம்தளாந்துகண்சாம்பினுரே.

இ - ள். செங்கண்மால்—செவந்த கண்களையுடைய கண்ணன், தெழிக்கப்பட்ட வலம்புரி— (பாரதப்போரில்) முழக்கிய சங்கினை, துருவங்கொண்ட—ஒத்த, சங்கு—சங்கினை, நம்பன் வாய்வைத்து—சீவகன் வாயில்வைத்து

தெழித்தலும்—முழக்க, தறுகண் ஆளி—அஞ்சாமையையுடையஆளி, பொங் கியமுழக்கு இன் — முழங்கிய முழக்கினால், வேழம்பேர் இனம்புலம்பினால் போல்—பெரிய யானைத்திரள் வருந்தினதுபோல, தாரதங்கும் மன்னரெல் லாம்—முல்லைமாலை சூடிவந்த அரசர்களெல்லாம், தளர்ந்துகண் சாம்பினார்— மனந்தளர்ந்து கண்ணொளிமழுங்கினார்கள்.

ந - ரை. கண்ணன் பாரதப்போரில் முழக்கின வலம்புரியின் ஒப்பைக் கொண்ட சங்கைவாய் வைத்துநம்பன் முழக்கினானாக; அதுகேட்டு யாளி முழக்கினாலே வேழத்திரள் வருந்தினாற்போல மன்னர் குறைந்துகண்ணொளி மயங்கினார்.

இதனால் அவர்அஞ்சினமைகண்டு சங்கைவாயில் வைத்தமைகூறினார்.()

அருவரைநாகஞ்சுற்றியாழியான்கடையவன்று
கருவரைகுடையப்பட்டகடலெனக்கலங்கிவேந்தர்
திருவரைமார்பன்றிண்டேர்மஞ்ஞையேமுருகன்றானென்
றொருவரோடொருவர்கூடாவண்ணமேயுடையலுற்றார்.

இ - ள். ஆழியான்—சக்கரத்தை யேந்திய திருமால், அருவரை—அரிய மந்தரகிரியில், நாகம்சுற்றி—வாசுகியென்னும் பாம்பைப் பூட்டி, அன்றுகடை ய—அக்காலையில் கடைய, கருவரைகுடையப் பட்டகடல்என்ன—அம்மலை யாற்கலக்கிய கடலைப்போல, வேந்தர் கலங்கி—அரசர்கள்கலங்கி, திருவரை மார்பன்—இலக்குமி வசிக்குமார்பினையுடைய திருமாலையொத்த சீவகனது, திண்தேர்மஞ்ஞையே என்று—திண்ணியதேர் மயிலேயென்றும், முருகன் என்று—இவன் முருகக்கடவுளென்றுங் கருதி, ஒருவரோடு ஒருவர்கூடா வண்ணம் — ஒருவரோடொருவர் கூடாததன்மையால், உடையலுற்றார்— பின் வாங்கினார்கள்.

ந - ரை. ஆழியான்மந்தரத்தினாலே பாம்பைச்சுற்றிக் கடைதலால், அம் மலைகலக்கின கடலென்னும்படி வேந்தர்கலங்கி மார்பன்தேர் மயிலேயென் றும், அவன்றான் முருகனேயென்றுங்கருதி, ஒருவரோடொருவர் கூடாததன் மையால் கெடுதல் மிக்காரென்க.

முருகக்கடவுள் பலதிருக்கைகளாற் படைவழங்கியதுபோல இவனும் படைவழங்குதலாலும் வடிவாலு முருகனேயெனவும், தேர்பறந்து செல்லு தலால் மயிலெனவுந் துணிந்துகூறுதலால் மஞ்ஞையே முருகன்தானென்றார்.

இது உருவகவணி. (௬௨௦)

முளிமரக்காடுமேய்ந்தமுழங்கழல்போன்றுமைந்தன்
தெளிநலக்குமரர்சுற்றிநெறிழித்தனர்பகழிசிந்தி
ஒளிநலவுப்புக்குன்றமூரபுனற்குடைந்ததேபோற்
களிநலமன்னர்தங்கள்கடற்படையுடைந்ததன்றே.

இ - ள். முளிமரக்காடு—உலர்ந்த மரங்களையுடைய காட்டை, மேய்ந்த முழங்கு அழல்போன்று—மேய்ந்த முழங்காநின்ற தீயைப்போல, தெளிநலம் மைந்தன்—தெளியநின்ற நலத்தையுடைய சீவகனும், குமரர்—தோழரும்,

கூற்றில் தெழித்தனர்—இயமனைப்போலக் கோஷித்தார்கள், களிநலம் மன்னர் தங்கள்—போர்க்களிப்பி னன்மையையுடைய அரசர்களது, கடல்பறை-கடலையொத்த சேனை, பகழிசிந்தி—(அதுகேட்டு) கையிலுள்ள அம்பினைப் போட்டு, ஒளிநலம் உப்புகுன்றம்—விளங்கும நலத்தையுடைய வுப்புமலை, ஊர்புனற்கு உடைந்ததுபோல்—ஓடுநீர்க்கு அழிந்தாற்போல, படைஉடைந்தது—சேனையழிந்தது.

ங - ரை. காட்டைமேய்ந்த அழல்போலப்போரிற் றெளிந்துநின்ற நலத்தையுடையமைந்தனுங்குமரரும், மன்னர்கெடுகின்றமை கண்டுகூற்றுப்போலஆர்த்தார், அதுகேட்டுக்கையிலம்பையும் போகட்டு உப்புமலை ஓடு நீர்க்குஉடைந்தாற்போல வுடைந்ததென்க. (௲உக)

உறுபடைமன்னர்தம்மையுடற்றியொன்றானுமின்றிச்
சிறுபடையவாகள்வென்றுசெருப்பவோவென்னவேண்டா
செறியெயிற்றாளிவேழப்பேரினஞ்செகுத்ததன்றே
உறுபுலியொன்றுதானேகலையினமுடற்றிறறன்றே.

இ - ள். சிறு படையவாகள் — சிறியசேனையையுடையவர்கள், உறுபடைமன்னர்தம்மை—பெருஞ்சேனையையுடைய அரசர்களை, உடற்றி—வருத்தி, ஒன்றுஆனும்இன்றி—தமக்குஒருகெடுதியாயினு மில்லாமல், வென்று செருப்பது—வென்றுபோக்குவாரோ, என்னவேண்டா—என்று உலகீர்கருதவேண்டா, செறிஎயிறுஆளி—நெருங்கியபற்களையுடையயாளி, வேழம்பேரினம்செகுத்தது அன்று ஏ—பெரியயானைத் திரளைக்கெடுத்த தல்லவா, உறுபுலிஒன்றுதானே—வன்மைமிகக புலியொன்றே, கலைஇனம் உடற்றிற்றுஅன்றுஏ—கலைமான்திரளைக் கெடுத்ததல்லவா (இதனைத்தெளிவீராக)

ங - ரை. சிறுபடையாளா மிக்க படையினையுடைய அரசனா வருத்தித் தமக்குஒரேதமுமின் றிவென்றுபோககுப வோவென்று உலகீர் கருதவேண்டா! விலங்கேயாயினும் யாளிவேழததிரளைக் கெடுததன்றே! புலியொன்று தானே கலைத்திரளைக்கெடுத்ததன்றே! இவற்றைக் கண்டுதெளிவீராக வென்றாொன்க.

பின்னுள்ள இரண்டடியும்எடுத்துக்காட்டுவமை. இதுகவிகூற்றுத்துறை. செருப்ப-பலர் பாறபடர்க்கை வினைமுற்று செகு பகுதி, பகரமெய்சந்தி, ப பலர்பால்விகுதி. (௲உஉ)

நல்லவைபுரியுமாந்தர்காந்தகம்பிழைத்துவீழா
தல்லவைபுரியுமாந்தர்க்கத்திரமொன்றும்வாயா
வெல்வதேகுணத்தின்மிக்கார்வெற்றிலைவிடினும்வேலாம்
இல்லையேவென்றிதீமையிடங்கொண்டமனத்தினோர்க்கே.

இ - ள். அல்லவை புரியும் மாந்தர்க்கு நல்லவைபுரியு மாந்தர் — தீந்தொழிலைச் செய்வோர்க்கு நன்மைகளைச் செய்வோர், காந்தகம்பிழைத்துவீழாது—கையிலேந்தியவாள் தப்பிவீழாது, குணத்தின்மிக்கார்—மேம்பட்டகுணமுடையஅரசர்கள், வெற்றிலைவிடினும்—வெற்றிலையையிட்டாலும்; வேல்

ஆம்—வேலாகும், வெல்வது ஏ —அதுவெல்வதுண்மை, தீமை இடம் கொண்டமனத்தினார்க்கு—தீமைகுடி கொண்டமனத்தினவர்க்கு,அத்திரம்ஒன்றும்வாயா—அத்திரம் பெறினும்சிறிதும் பயன்கொடா,வென்றிஇல்லை—(அத்தீயோர்க்கு) வெற்றியேயில்லை.

(க - ரை.) ஒருவரையொருவர்வெல்லுந் தன்மையைக் கேட்கின்றீராயின், அல்லவைபுரிவார்க்கு நல்லவர்புரிவார்கையில் வாள்தப்பிவீழாது, அதுவும்அவர்க்குமிகை; வெற்றிலையைவிடினும் அதுதான்வேலாய்விழும்; தீமையிடங்கொண்டமனத்தினாக்கு அத்திரம்பெறினும் சிறிதும்பயன்கொடா; ஆதலால்அத்தீயோாக்கு ஒருகாலும்வென்றியே யில்லைஎன்றார்என்க.

அத்திரம் மந்திரத்தாற்பிரயோகிப்பது. அல்லவைஎதிர்மறைப்பண்படியாகப்பிறந்த பலவின்பாற்படாக்கைக்குறிபபுவினைமுற்று அன்மைபகுதி, ஈறுகெடுதலும் லகரத்தோற்றமும்சந்தி,அசாரியை, வைபலவின்பால்விகுதி.(கூ௨௩)

குழையுடைமுகத்தினாள்கட்கோணைப்போர்செய்தமன்னர்
மழையிடைமின்னினொய்தாமறைந்தனர்விஞ்சைவேந்தர்
முழையிடைச்சிங்கமன்னான்மொய்யமரோத்தியார்த்தார்
விழவுடைவீதிமூதூர்விருப்பொடுமலிந்ததன்றே.

இ - ள். குழைஉடைய முகத்தினாள்கண்—குண்டலத்தையுடைய முகத்தையுடைய த்தைகாரணமாக. கோணைபோர்செய்தமன்னர்—மாறுபட்ட போர்த்தொழிலைச்செய்த அரசர்கள், மின்னின்—மின்னலைப்போல, நொய்துஆகமறைந்தனா—போனஇடந்தெரியாமல் விரைந்தொளித்தார்கள், மழைஇடைவிஞ்சைவேந்தர்—மேகத்தில்நின்ற வித்தியாதரர்கள், முழைஇடை—மலைக்குகையினிடத்துள்ள, சிங்கம்அன்னான் மொய்அமர்—சிங்கத்தையொத்தசீவகனது போர்த்திறத்தை, ஏத்தி ஆர்த்தார்—துதித்துக் கோஷித்தார்கள், விழவுஉடைய வீதிமூதுஊர்—மகோற்சவத்தையுடையவீதியினெருங்கிய தொன்றுதொட்டுள்ள ஊர், விருப்பொடு மலிந்தது - இவனைக்காணும் விருப்பால் மேம்பட்டது.

க - ரை. தத்தைகாரணமாக மாறுபாட்டையுடையபோரைச்செய்த மன்னர் மின்போலப்புக்கவிடம் அறியாமற் கடுகப்போனார்; மேகத்தினின்றவிச்சாதரர்சிங்கம் அன்னனமரையேத்தியார்த்தார்; மூதூர் இவனைக்காண்டல்விருப்பத்தோடுமிக்கதென்க.

இல்லறம்பூண்டமையால் முழையிடைச்சிங்கமன்னான் என்றார். நான்கனுருபு நிற்குமிடத்து முகத்தினாள்கண்என ஏழனுருபுநிற்றல் உருபுமயக்கம். ஒடுஉருபு ஏதுப்பொருட்டு. (கூ௨௪)

பார்மிசையுலகமேத்தும்படுகளங்கண்டுபற்றார்
போர்முகக்களிற்றுவெண்கோடுழுதசெஞ்சால்கொண்டுமார்பிற்
சீர்முகத்தோழர்சூழச்சீவகன்திருவின்சாயல்
வார்முகமுலையினாளைமனைவயிற்கொண்டுபுக்கான்.

இ - ள். சீவகன்—சீவகனென்பவன், பற்றார் — பகைவருடைய, போர்முகம்களிறுவெண்கோடு உழுத—போர்முகத்திற்செல்லும் யானையினது வெ

ள்ளியகொம்புழுத, செஞ்சால்கொள்மார்பின் சீர்மூகம்தோழர்சூழ—செவ்வியசாலேக்கொண்டமார்பின் சிறப்பைத்தனதிடத்துடைய தோழர்கள்சூழ்க்துவர, பார்மிசை—நிலவுலகில், உலகமஏத்தும்—உயர்ந்தோர் துதிக்கும், புகளம்கண்டு—போர்க்களத்தைக்கண்டு களவேள்விமுடித்து, திருவின்சாயல்—இலக்குமிபோலுமென்மைவாய்ந்த, வார்மூகம்முலையினுளை—கச்சணிந்ததனத்தையுடைய தத்தையை, மனைவயின்கொண்டுபுககான் — தன்மனையிற்கொண்டுபுகுந்தான்.

ந - ரை. சீவகன்; யானைக்கோடு ழுத சாலைகொண்டமார்பிற் றோழர்சூழ்ந்து செல்லப்போரில் உயர்ந்தோரேத்துங் களத்தைக்கண்டு வேள்விமுடித்துத தத்தையைத்தன் மனையிலேகொண்டுபுக்கானென்க.

சால் படைச்சால். (கூஉரு)

> நெய்க்கிழிவைக்கப்பட்டாரநெய்ப்பத்தற்கிடத்தப்பட்டார்
> புக்குழியெஃகநாடியிரும்பினுற்போழப்பட்டார்
> மைக்கிழிந்தொழுகுங்கண்ணீர்மாநிலத்துருக்கப்பட்டார்
> கைக்கிழிகொடுக்கப்பட்டார்கலமபலநலகப்பட்டார்

இ - ள். நெய்கிழிவைக்கப்பட்டார— (ஆயுதம்ஏறுண்டவைகளில்) நெய்ப்பூசியசீலை வைக்கப்பட்ட வரும், நெய்பத்தல் கிடத்தப்பட்டார் — நெய்பூசியபத்தலில் கிடத்தப்பட்டவரும், எஃகம்புக்கஉழி—அம்புதொளைத்தவிடத்தில், நாடி—ஆராய்ந்து, இரும்பின் ஆல்போழப்பட்டார்— இரும்பாலறுத்து வாங்கப்பட்டவரும், பலகலம் நல்கப்பட்டார்(சீவகனுல்)பலஆபரணங்கொடுக்கப்பட்டார்; மைக்குஇழிந்து ஒழுகும்கணணீர்—மையோடிழிந்தொழுகாநின்றகண்ணீர, மாநிலத்துஉகுகக— (சுற்றத்தார்) பெரியநிலவுலகிற் சிந்த, பட்டார்—பட்டவரெல்லாம், கைகிழிகொடுககபபட்டார் - கையிலுள்ள பொன்முடிப்புக் கொடுக்கப்பட்டார்கள்.

ந - ரை. நெய்வைக்கப்பட்டாரும், கிடத்தல்பட்டாரும், எஃகம்புக்குழிநாடியிரும்பாலறுத்து வாங்கப்பட்டாரும் சீவகனுற் கலம்பலநல்கப்பட்டார்; சுற்றம் அழுபடிபட்டார் எல்லாருங்கைக்கிழி கொடுக்கப்பட்டாரென்க.

கு உருபுமயக்கம். பத்தல்நீரிறைக்கும ஒருவகைக்கருவி, அல்லதுபற்றுக்கோடாகவைத்துக் கட்டுங்கருவி. இது சீவகன் சேனையிலுள்ளவர்க்குச்செய்யும்பரிகாரம். (கூஉசு)

> முதுமரப்பொந்துபோலமுழுமெய்யும்புண்களுற்றூர்க்
> கிதுமருந்தென்னநல்லாரிழுதுசேர்கவளம்வைத்துப்
> பதுமுகன்பரவைமார்பினெய்க்கிழிபயிலச்சேர்த்தி
> நுதிமயிர்த்துகிற்குப்பாயம்புகுகெனநோக்கினூனே.

இ - ள். முதுமரம் பொந்துபோல — தொன்றுதொட்டுள்ள மரத்தின் பொந்துபோல, முழுமெய்உம்—தேகமுழுதும் (அம்புகள்தொளைத்த) புண்கள்உற்றூர்க்கு—புண்களைப்பொருந்தினவர்க்கு, மருந்து இது என்ன—மருந்து இதுவென்று, நல்லார்—(அவரவர்க்குரிய) மனைவிமார்கள், இழுதுசேர்கவள

ம்வைத்து—நெய்சேர்ந்த கவளம்வைக்க, பதுமுகன்பரவைமார்பின்— பதுமுகனதுபரந்தமாபினில்,நெய்கிழி பயிலசோத்தி-நெய்ச்சீலைஅமையச்சேர்த்தி, நுதிமயிர்துகில் — நுனிவாய்ந்த எலிமயிராடையாற் செய்த, குப்பாயம்புகுகஎன்ன—சட்டையிலேபுகுகவென்று, நோக்கினான்—கூறிப்பரிகரித்தான்.

ந - ரை. மரப்பொந்துபோலப் புண்ணுற்றார்க்கு மருத்துவர் இது மருந்தென்றுகவளம் வையாநிற்க, தான்பதுமுகன் மார்பிலேகிழியைச் சேர்த்திக் காற்றுப் படாதபடியுள்ளே சீலையடைசின எலிமயிர்ப்படத்தாற்செய்த சட்டையிலே புகுகவென்று கூறிப்பரிகரித்தானென்க.

நல்லானிழுது எனவும் பாடம். வைத்து செயவெனெச்சத்திரிபு. (௩௨௭)

பார்கெழுபைம்பொன் றன்னாற்பண்ணவனுருவமாக்கி
ஊர்கெழுவிழவுசெய்தாங்குறுபொருளுவப்பநல்கித்
தார்கெழுமின்னுவீசித்தனிவடந்திளைக்குமார்பன்
போர்கெழுகளத்துப்பாவம்புலம்பொடுபோக்கினானே.

இ - ள். தார்கெழு தனிவடம்—மாலையாக வமைந்த ஒப்பில்லாத முத்துவடம், மின்னுவீசி—ஒளிவீசி, திளைக்கும்மார்பன்—திளைக்காநின்ற மார்பையுடைய சீவகன், பார்கெழுபைம்பொன் தன்ஆல்—நில வுலகின்மிக்க பசிய பொன்னினால், பண்ணவன் உருவம்ஆக்கி—அருகக்கடவு ளுருவஞ்செய்து, ஊர்கெழு விழவுசெய்து—ஊரில் மேம்பட்ட உற்சவஞ்செய்து, ஆங்கு—அவ்விடத்தில், உறுபொருள்—மிக்க பொருளை, உவப்பநல்கி—ஏற்போர் மகிழத் தானங்கொடுத்து, போர்கெழு களத்துபாவம்—போர்த்தொழில்மிகுந்த செருக்களத்தில் சேர்ந்தபாவத்தினை, புலம்புஒடு போக்கினான்—என்னகாரியத்தைச்செய்தோமென்னும் வெறுப்பையுங் களைந்தான்.

ந - ரை. வடம்மின்னு வீசித்திளைக்குந்தார் கெழுமார்பன் பாரிற்பிறந்த பொன்னாலுருவமாக்கிச் செய்து தானமும் பண்ணிப்பாவத்தையும் போக்கினானென்க.

பகைவரைக் கொல்லுதல் புண்ணியமானாலும், அவர்முன்பு தனக்குப் பகை யில்லாமையால் பாவம் என்றார், ஒடுஉருபுமயக்கம். மின்னு உகரச் சாரியை. (௩௨௮)

செய்தவப்பாவமெல்லாதீர்த்திடுந்தீர்த்தன்பாதம்
எய்தியசேடங்கூவித்திறைஞ்சுபுதொழுதுவாழ்த்தி
மையறுமணியிற்செய்தவலம்புரியதனீர்கொண்டான்
வையகமளிக்கநீண்டவலம்புரித்தடக்கையானே.

இ-ள். வையகம்அளிக்கநீண்ட-உலகினைக்காக்கநீண்ட, வலம்புரிதடக்கையான்—வலம்புரிரேகை பரந்தபெருத்தகையையுடைய சீவகன், செய்தஅபாவம்எல்லாம் தீர்த்திடும்-பலபிறப்பிற்செய்த அப்பாவங்களையெல்லாம்தீர்க்கும் தீர்த்தன்பாதம் எய்தியசேடம்—அருகக் கடவுளுடைய திருவடியிற்பொருந்திய சேடத்தையும், மைஅறுமணியில்செய்த—குற்றமற்ற இரத்தினங்களாலிழைத்த, வலம்புரி அதன்நீர்—வலம்புரிச்சங்கிலுள்ள தீர்த்தநீரையும், கூவுவி

த்து இறைஞ்சுபுதொழுதுவாழ்த்தி—வருவித்து வணங்கித்தொழுதுவாழ்த்தி, கொண்டான்—அவற்றைக்கொண்டான்.

ந - ரை. தடக்கையான் தீர்த்தன்பாதம்எய்திய சேடத்தையும்வலம்புரி யதனிற் றீர்த்தநீரையுங்கூவுவித்துத் தொழுதுதுதித்து அவற்றைக்கொண்டா னென்க.

வலம்புரிகையிற்கிடத்தல் உத்தமவிலக்கணம் ஆதலால் வலம்புரித்தடக் கையானென்றார். அதுபகுதிப்பொருள்விகுதி. கூவுவித்து கூவித்து தொ குத்தல்விகாரம். வலம்புரி ஆயிரஞ்சங்குகள் சூழ்ந்தஇடம்புரி ஆயிரங்களாற் சூழப்பட்டது. (கஉக)

நாற்சீரால்வந்தநாலடித்தரவுகொச்சகம்.

கருமணியழுத்தியகாமர்செங்கதிர்த்
திருமணிச்செப்பெனச்செறிந்தவெம்முலை
அருமணியலம்வருமம்பொற்கொம்பனாள்
பெருமணக்கிழமையாம்பேசுகின்றதே.

இ - ள். பேசுகின்றது—இனிக்கூறுகின்றது, கருமணிஅழுத்திய—நீல மணியையழுத்திய. காமர்செங்கதிர்-விருப்பஞ்செய்யுஞ் செவ்வக்கிரணத்தை யுடைய, திருமணிசெப்பு என்ன-அழகியமாணிக்கச்செப்பைப்போல, செறி ந்த அருமணிஅலம்வரும் வெம்முலை—நெருங்கியபெறுதற்கரிய முத்துவடம் அசையும் விருப்பஞ்செய்யும் முலையினையுடைய, அப்பொன்கொம்புஅன்னாள்- அழகியபொற்கொம்பையொத்த தத்தையிடத்து, பெருமணம் ஆம்கிழமை— சீவகனுக்குநிகழும் பெருமையமைந்த மணவுரிமையை.

ந - ரை. நீலமணியையழுத்தின மாணிக்கச் செப்பெனச்செறிந்த, மணி யலம்வருமுலையினையுடைய கொம்பனாளிடத்துச்சீவகற்கு முற்பட்ட மண மாகின்ற உரிமைஇனிக்கூறுகின்றதென்றொன்க.

மணமாகின்ற வுரிமைஎன்றது சமாவர்த்தநத்தை. (கசுo)

நான்குநூறாயிரங்குடத்துநல்லன
வான்றயிர்பாலெனயோடழகிதாநிறைத்
தூன்றிகழ்வேலினான்வேள்விக்கூர்மருள்
கோன்றொறுக்காவலன்கொண்டுமுன்னினான்.

இ - ள். கோன்தொறு காவலன்—சச்சந்தனது பசுக்காவலில்வல்லஇ டையன், ஊன் திகழ்—பகைவரூன்விளங்கும், வேலினான்வேள்விக்கு—வே லையேந்திய சீவகனது சமாவர்த்தநத்துக்கு, ஊர்மருள்—ஊரார்மருள, நான் குநூறாயிரம் குடத்து—நாலுலட்சங்குடத்தில், நல்லனவான்தயிர்பால்—நறு மணங்கமழும் பெருமையமைந்த தயிரும்பாலும், நெய்யொடு அழகிது ஆகநிறை த்துகொண்டு—நெய்யினோடு அழகாக நிறைத்துக்கொண்டு, முன்னினான்— வந்தனன்.

ந - ரை. இடையனாகியதொறுக்காவலன்வேலினனதுஊர்மருள்வேள்வி க்குக்குடத்திலே தயிரும்பாலு நிறைத்துக்கொண்டு முன்னினனென்க.

இதுமுதல் சமாவர்த்தனத்துக்குப் பச்சைபுருந்த வகைகூறுகின்றார். ()

வளைநிறவார்செநெலரிசிப்பண்டியோ
டளவறுசருக்கரைப்பண்டியார்ந்தன
பிளவியல்பயறுபெய்பண்டியுப்புநீர்
விளைவமைபண்டியின்வெறுத்ததாங்கோர்பால்.

இ - ள். வளைநிறம் வாரசெந்நெல் அரிசிபண்டியோடு — சங்குபோல வெண்ணிறம்வாய்ந்தசெந்நெலினரிசி நிறைத்தபண்டியும், அளவுஅறுசருக்கரைபண்டி—அளவில்லாதசருக்கரைப்பண்டியும், ஆர்ந்தன-நிறைந்தன; பிளவுஇயல்பயறு பெய்பண்டி—பிளவமைந்த பருப்புப்பெய்த பண்டியும், நீர்விளைவு அமை உப்புபண்டியின்—நீர்விளைவாலமைந்த உப்புப்பண்டியோடு, ஆங்கு ஓர்பால்வெறுத்தது—அந்தமனையிலொரு பக்கமெல்லா நெருங்கியது.

ந - ரை. சங்குநிறத்தையுடைய அரிசிப்பண்டியும், சருக்கரைப்பண்டியும்நிறைந்தன, பருப்புப்பெய்தபண்டியும் உப்பமைந்தபண்டியோடே செறிந்தது; அம்மனையி லொருபக்கமெல்லா மென்க. (௩௩௨)

சினைத்துணர்முழவன்னபலவின்றீங்கனி
கனைத்துவண்டுழல்வனவாழைமாஙகனி
எனைத்துளகிழஙகுகாய்குருகொடேந்திய
சனத்தினூற்றகைத்திடம்பெறாதுதானோர்பால்,

இ - ள். பலவின்சினை—பலவின்கொம்பிற்றூங்கும், துணர்முழவுஅன்ன தீம்கனி—கொத்தினையுடையமுழவையொத்தபலவின்இனியகனியும், கனைத்துவண்டுஉழல்வன—நெருங்கிவண்டுகள்சுழலும், வாழைமாகனி-வாழைக்கனியுமாங்கனியும், கிழங்குகாய்குருகுஒடு—கிழங்குங்காயுங்குருகும், எனைத்துஉள்ளஏந்திய சனத்தின்ஆல்—எவ்வளவுள்ளனவோ வவ்வளவும்ஏந்திய சனங்களால், தகைத்துஓர்பால் இடம்பெறாது — நெருங்கியொரு பக்கந்தானிடம்பெறாது.

ந - ரை. பலவின்சினையிற் கொத்தினையுடைய முழவன்னகனியுஞ் செறிந்துவண்டுழல்வனவாகியவாழைக்கனியு மாங்கனியுங்கிழங்குங்காயுங்குருகும் எவ்வளவுள, அவ்வளவெல்லாமேந்திய சனங்களாலே நெருங்கியொருபக்கந்தான் இடம்பெறாதென்க.

உழல்வனமுற்றுப் பெயரெச்சமாயிற்று. குருகு முளை. (௩௩௩)

மரகதமணிப்பசுங்கால்கொள்வான்குலை
கவர்பழுககாய்க்குலைகனியககாவுநீஇ
இவர்தருமெல்லிலைக்காவுமேந்திய
உவரியாய்ச்சொரிந்திடம்பெறாதுதானோபால்.

இ - ள். மரகமணி பசுங்காய்கொள்வான் குலை—மரகதம்போலும் பசுமைவாய்ந்த காய்நெருஙகின பெரிய குலைகளும், கவர்பழுக்காய்குலை—சுவைகவர்ந்த பாக்கின்குலையும், இவர்தருமெல்லிலைகாஉம்—பரவுதலமைந்த வெற்றிலைப்படலிகையும், கனியகாஉறிசொரிந்து—மிகவுங் காவடிவந்து சொரிதலால், ஏந்தியஉவரிஆய்—உயர்ந்தவெள்ளமாய், ஓர்பால்—ஒருபக்கம், இடம் பெறாது—இடம்பெறாமல்நெருங்கியது

ந - ரை. பசுங்காய்க் குலையையும், பழுக்காய்க்குலையையும் பரத்தலைத்தரும் வெற்றிலைப்படலிகையையும் முற்றக்காவிவந்துசொரிதலால் வெள்ளமாயொருபக்கந்தானிடம் பெறுமென்க.

உறி இறந்தகாலவினையெச்சம் உறுபகுதி, உகரக்கேடுசந்தி, இ எச்சவிகுதி. வேண்டியனவும் பாடம். (கூகச)

சண்பகந்தமநகந்தமாலமல்லிகை
தண்கழுநீரொடுகுவளைதாமரை
வண்டினமிசைகொளவாசப்பூச்சுமை
கொண்டவர்குழாம்பொலிவுறறதாஙகொர்பால்.

இ - ள். சண்பகம் தமநகம்—சண்பகமும் மருக்கொழுந்தும், தமாலம் மல்லிகை—பச்சிலையுமல்லிகையும, தண்கழுநீரொடுகுவளைதாமரை-தண்ணிய கழுநீரோடு குவளையுந்தாமரையும்,வண்டுஇனம்மிசைகொள்ள—வண்டினமேலேமொய்க்க, வாசம்பூசுமைகொண்டவர் குழாம்—வாசமலமைந்த பூச்சுமையைக் கொண்டவர்கூட்டம், ஆங்குஓர்பால் பொலிவுற்றது—அவ்விடத்திலொருபக்கத்தில் விளங்கியது.

ந - ரை. சண்பகமுந்த மநகக்கொழுந்தும்பச்சிலையும் மல்லிகையும்கழுநீருங்குவளையும் தாமரையுமாகிய வாசப்பூசசுமையை வண்டினமேலேமொய்க்கக்கொண்டவர்திரள் அவ்விடத்தொருபககம் பொலிவுற்றதென்க

ஒடு எண்ணொடு. (கூகரு)

ஆர்கெழுகுறடுசூட்டாழிபோன்றவன்
சீர்கெழுவளமனைநிளைத்துமாசனங
கார்கெழுகடலெனக்கலந்தவல்லதூஉம
பாரகெழுபழுமரப்பறவையொத்தவே.

இ - ள். அவன்ஆர்கெழுகுறடு சூட்டுஆழி போன்று—அச்சீவகனுடைய ஆரமைந்த அச்சுக்கோக்குங குறட்டின்சூட்டியுள்ள வுருளையையொத்து, சீர்கெழுவளம்மனை—சிறப்புமிக்கவளமமைந்த மனையில், மாசனம்நிளைத்து-மகாசனங்கள்நெருங்கி, கார்கெழுகடல் என்னகலந்த—(ஒலியால்) கருமைமிக்க கடலைப்போலக் கலந்தன; அல்லதுஉம் — அதுவொழிந்தும், பாரகெழு—பயன்கொடுக்குமுறைமைபால் உலகில்மிக்க, பழுமரம்பறவை— ஆலமரத்தினெருங்கிய பறவையையும், ஒத்த—ஒத்திருந்தன.

ந - ரை. அவனுடையஉருளைபோன்று சீாகெழுமினவள மனையிலேமாசனநெருங்கி யொலியாற்கடலைக் கலந்தன; அஃதொழிந்தும் அம்மாசலம்பயன்கொள்ளு முறைமையாற் பழுமரத்திறபறவையும் ஒத்தவென்க.

மனையைச்சூழப் பச்சைநிரைததலால் உருளைபோன்று எனப்பொருள் கொள்ளலும்ஒன்று. தெருக்கள்-நடுவிறபோக்கிய ஆருக்கும், குறடுமாளிகைக்கும், அதின்விளிம்பின் சூட்டுமதிலுககும் உபமேயந்தை உபமானத்தால் இலக்கணமாகக்கூறுதலின் உயாவுநவிற்சியணி. இதனைவடநூலார் அதிசயோக்தி அலங்காரம என்பார். கலந்தது, ஒத்தது எனவும் பாடம் (கூகசு)

> கையுறைநயெழுதினர்கைந்நொந்தேடறுத்
> தையெனவிருப்பமற்றன்னதாதலான்
> வையகமருங்கினில்வாழ்நர்மற்றிவன்
> செய்தவநமக்கிசைகென்னச்சென்றதே.

இ - ள். கையுறை எழுதினர்-வந்தபச்சைகளையெழுதுவோர், கைநொந்து—கைவருந்தி, ஏடு அறுத்து—பட்டோலைகளைக்கிழித்து, ஐயென இருப்ப—விரைந்துஇளைப்பாறி யிருப்பார்கள், அன்னது ஆதலான்—பச்சை அவ்வாறுமிகுந்திருத்தலால், வையகம்மருங்கினில்வாழ்நர்-நிலவுலகில்வாழ்வோர், இவன் செய்தவம்—இவன்செய்கின்றசமாவர்த்தனம், நமக்கு இசைக என்ன—நமக்கும்இது கூடுவதாக வென்று மகிழ்கூர, சென்றது—நடந்தது.

ந - ரை. வந்தபச்சை யெழுதி முதலிட்டவர்கள் கைந்நொந்து பட்டோலைகளைக் கிழித்து ஐயெனவிளைபபாறி யிருப்பாாகள், பச்சை அங்ஙனமிகுதலின் இவன் செய்கின்ற சமாவாத்தனம் உலகில் வாழ்வோரெல்லாம் நமக்கும் இது கூடுவதாதவென்று கருதும்படி நடந்ததென்க.

மற்று அசைநிலை. வாழ்நர் எதிர்கால வினைமுற்றுப்பெயர். நகரமெய் எதிர்காலநதின்மேல்நின்றது இதுமுதல் நான்குசெய்யுளும் ஒருதொடர். (கூகஎ)

> வாலரிகழுவியவண்ணசெம்புனல்
> காலியலிவுளியுங்களிறுமாழுந்தவட்
> கோலநீர்க்குவளையும்மரையுமபூதது வண்
> டாலிவணகுருகுபாய்தடங்களானவே.

இ - ள் வால் அரிகழுவிய—(அதற்கேறபச்சோறு சமைத்தற்கு) வெள்ளியஅரிசிகழுவிய, வண்ணமசெம்புனல்—நிறமமைந்த அழகியகழுநீர், கால் இயல் இவுளிஉம் களிறுஉம ஆழந்து—காற்றைப்போலவிரைந்துசெல்லும் குதிரையும யானையும் அழுந்தும்படி, அவண்—அவ்விடத்தில், கோலம்நீர்குவளையும்மரைஉம்பூத்து—அழகியதன்மையையுடைய குவளையும்தாமரை மலரும்பூத்து, வண்டு ஆலி—வணடொலிக்கப்பட்டு, வணகுருகுபாய்தடங்கள் ஆன—வளமைமிக்க பறவைகள் பரந்ததடங்களாயின.

ந - ரை. அதற்கேற்பசோறு சமைத்தற்கு அரிசிகழுவியகழுநீா, இவுளியுங்களிறும் அழுந்தும்படி குவளையுந்தாமரையும் பூத்துவணடொலிக்கப்பட்டுக்குருகுபாயுந்தடஙகளாயின.

ஆழ்ந்து "சொற்றிரியினும் பொருடிரியாவினைக்குறை" என்றசூ—ஆல் ஆழஎன்பது ஆழ்ந்துஎன்னும் வினையெச்சத்திரிபு. (கூகஅ)

> கலங்கழுமரவமுங்கருனையாக்குவோர்
> சிலம்பொலியரவமுமிச்சில்சீப்பவர்
> இலங்குபொற்கிண்கிணியிரங்குமோசையும்
> உலம்புமாலுவர்ககட லொலியின்மிக்கவே

இ - ள் கருனை ஆக்குவோா—(இங்ஙனம்சோறுசமைத்தபின்பு) பொரிக்கறியைச்சமைப்போர், சிலம்புஒலி அரவம்உம்—காலிலணிந்த சிலம்பொலி

யினோசையும், கலம்கழும் அரவமும்—கலங்கழுவுகின்றவர் முழக்கமும், மிச்சில்சீப்பவர்—எச்சில்களைவோரது, இலங்கு பொன்கிண்கிணி—விளங்காநின்றபொன்னாலமைந்த காற்சதங்கைகள், இரங்கும்ஓசையும்—ஒலிக்கும்ஓசையும், உலம்பும்மால் உவர்க்கடல்—ஒலிக்கும்பெரிய உவர்க்கடலினது, ஒலியின் மிக்க — ஒலியினும் மேம்பட்டன.

ந - ரை. இங்ஙனம்சோறுசமைத்தபின்பு கருணையாக்குவோர் சிலம்பொலியினரவமும், உண்டற்குக் கலங்கழுவுகின்ற அரவமும்; எச்சில்சீப்பார் கிண்கிணியிரங்குமோசையுங் கடலொலியினு மிக்கன.

இன்னுருபு உயர்வுகுறித்தவில்வந்த எல்லைப்பொருட்டு உறழ்ச்சிப்பொருளெனினும் அமையும். சீப்பவர்எதிர்கால வினைமுற்றுப்பெயர் சீபகுதி. ()

உடுப்பனதுகில்களுருமுரைசகுநானமும்
தொடுத்தனமாலையுங்குழையுஞ்சாந்தமுங்
கொடுப்பவர்கொள்பவாவீழ்ந்தபல்கலம
அடுத்து விண்பூத்ததோரழகின்மிக்கதே

இ - ள். உடுப்பனதுகில்களும்—(உண்டபின்பு) உடுக்கும்ஆடைகளும், உரைக்கும்நானமும் — அரைத்தசந்தனத்திலுரைத்த கஸ்தூரியும், தொடுத்தனமாலையும்—மலரால்தொடுத்த மாலையும், குழையும சாந்தமும்—வாசத்தளிரும் சந்தனக்குழம்பும், அடுத்துகொடுப்பவர் கொள்பவர்—(ஆகியஇவைகளையடுத்துக் கொடுப்பவரும்வாங்குவோரும், வீழ்த்தபல்கலம்—சிந்தியபல ஆபரணங்களும், விண்பூத்ததுஓர் அழகின்மிக்கது—ஆகாயம் நட்சத்திரங்களைப்பூத்ததாகிய ஒருபொலிவினு மேம்பட்டது.

ந - ரை. இங்ஙனம் உண்டபின்புதுகிலு நானமுமாலையுங் குழையும்சந்தனமும்அடுத்துக்கொடுப்பார் வாங்குவார்வீழ்த்தகலம் விண்மீனைப்பூத்த தோரழகினு மிக்கது.

வையகமருங்கினில் வாழ்நர்மறிவன்—செயதவநமக்கிசை கென்னச்சென்றதே என்பதைஇச்செய்யுளின் முன்னர்க்கூட்டி ஒருதொடராக்கினர். இன்உருபு உறழ்ச்சிபபொருட்டு (கூசா)

அறுசீரான்வந்தநாலடித்தரவுகோச்சகம்.

மூழிவாய்முல்லைமாலைமுருகுலாங்குழலினாளும்
ஊழிவாய்த்தீயோடொக்குமொளிறுவாட்டடக்கையானும்
ஆழிவாய்விரலிற்காமனம்பொடுசிலைகையேந்தத்
தாழிவாய்க்குவளைவாட்கட்டையலாாபரவச்சார்ந்தார்.

இ - ள் மூழிவாய்—பூவிடுபெட்டியிலுள்ள, முல்லைமாலை—முல்லைமலரால்தொடுத்த மாலையின், முருகுஉலாம் குழலினாளும்—வாசமிக்க கூந்தலையுடைய தத்தையும். ஊழிவாய்தீயோடு ஒக்கும் — ஊழிகாலத்திற் றோன்றிய தீயோடொத்துத் தோன்றும், ஒளிறுவாள் தடக்கையானும்—விளங்கும் வாளையேந்திய நீண்டகையையுடைய சீவகனும், காமன்—மன் மதனானவன், அம்பொடுசிலை — அம்பினோடு வில்லினை, ஆழி வாய்கைவிரலின்வ

ந்த—மோதிரம்வாய்ந்த கைவிரலாலேந்த, தாழிவாய் குவளைவாள்கண் மைதய லார்பரவ—தாழியிற்பூத்த குவளை மலரையும் வாளையுமொத்த கண்களையுடை யபெண்கள்வாழ்த்த, சார்ந்தார்—ஒராசனத்தில் சேரவிருந்தனா.

ஈ - ரை. குழலினளுந் தடக்கையானுங்காமன் அம்போடுசிலையைக் கை விரலாலேந்தாநிற்க, மைதயலாா பரவாநிற்க, ஒராசனத்தேசேரவிருந்தாரென்க. தீயோடொக்கும் ஒடுருபு ஒபபுப்பொருட்டு. (ஙஊக)

இன்னியமுழங்கியார்ப்பவீண்டெரிதிகழவேதந்
துன்னினாபலாசிறசெய்ததுடுப்பினெய்சொரிந்துவேட்ப
மின்னியல்கலசநன்னீர்சொரிந்தனன்வீரனேற்றான்
முன்னுபுவிளங்குவெள்ளிமுளைத்தெழமுருகனன்னான்.

இ - ள். முருகன்அன்னான்—முருகக்கடவுளையொத்த சீவகன், இன்இ யம்முழங்கிஆர்ப்ப-இனியவாத்தியஙக ளொலிக்க, துன்னினார்—வேள்வியோ (பப) நெருங்கிய அந்தணர்கள், பலாசில்செய்த—முருக்காறசெய்த, துடுப்பின் நெய்ஈண்டுஎரிதிகழ—துடுப்பினுல் நெய்யினைநெருங்கிய வேள்வித்தீவிளஙகும் படி, வேதம்சொரிந்துவேட்ப—வேதமந்திரத்தால்வார்த்து ஓமம்பண்ணாநிற் க, விளங்குவெள்ளிமுளைத்துஎழ—விளங்குமவெள்ளிமுளைத்தவளவிலே, மி ன்இயல்கலசநல்நீா சொரிந்தனன்—விளங்குமநல்லகலசநீரால் தாரைவார் த்தான், வீரன் முன்னுபுஏற்றான்—சீவகன்கருதியேற்றனன்.

ஈ - ரை. முருகனன்னானின்னியம் ஆரா நிற்க, துன்னினர் பலாசாற் செயத துடுப்பின்நெய்யை மிகநெருகின்ற தீவளரும்படி வேதமந்திரத்தாற் றான்சொரிந்து ஓமம் பண்ணாநிறக, வெள்ளி முளைதத வளவிலேபூரீ தத்தன் நீரைச்சொரிந்தான், அபபொழுது இவனும் அதனை யேற்றானென்க.

அரசர்க்கும் வணிகாககும் மந்திரத்திலுந தந்திரத்திலுஞ்சிறிது வேறுபா டுளதேனுந் தான்இரண்டு குலத்திறகுமுரிய சடஙகுநிகழ்த்துதறகு உரியனுத லிற் பிறர்க்குத்தெரியாமற றன்குலத்திறகு ஏற்றசடங்குதானே நிகழத்தின னென்பதூஉம், பிறர்க்குத்தெரியு மவாறறிறகுப் பிராயச்சித்தத்தைக் கருதின னென்பதுந்தோன்ற முன்னுபுஎன்றார். இதுசெய்புஎன்னும் வாய்பாட் டிற ந்தகாலவினையெச்சம். (ஙஊஉ)

இட்டவுத்தரியமின்னுமெரிமணிப்பருமுத்தாரம்
மட்டவிழ்கோதைவெய்யவருமுலைதாங்கலாற்றா
நெட்டிருங்குழலினுடனேர்வளைமுன்கைபற்றிக்
கட்டழல்வலங்கொண்டாய்பொறகட்டிலேறினனே.

இ - ள். இட்டஉத்தரியம்—இட்டவுத் தரியத்தையும், மின்னும் எரிம ணிபருமுத்து ஆரம்—விளங்குந்தீயையொத்த மாணிக்கவடத்தையும் பருத் தமுத்து வடத்தையும், மட்டுஅவிழ்கோதை-வாசனையொடுமலர்ந்த மாலையை யும், வெய்யவருமுலை-விருப்பஞ்செய்யஎழுந்ததனத்தையும், தாங்கல் ஆற்றாத- சுமக்கஇயலாத, நெட்டிருங்குழலினாள்தன்—நீண்டநெருங்கிய கூந்தலையுடை

யதத்தையினது, வளைநேர்முன்கைபற்றி-வளையலையணிந்த முன்கையைப்பிடித்து, கட்டு அழல்வலங்கொண்டு-வேள்வித்தீயை வலங்கொண்டு, ஆய்பொன்கட்டில்தான் ஏறினன்-மாற்றுயர்ந்தபொன்னாற்சமைந்த கட்டிலிலேறினன்.

ந - ரை. உத்தரீய முதலியவற்றைச் சுமத்தலாற்றாத தத்தையதுமுன்கையைத்தான்பற்றி, அழலைவலங்கொண்டு கட்டிலிலேயேறினனென்க.

பணைபுததொகையாயின் நெடுங்குழல்எனல்வேண்டும், உரிச்சொற்றொகைநிலைத்தொடர் ஆதலாலநெட்டிருங்குழலெனப் புணர்க்கப்பட்டது, "தன்னொற்றிரட்டல்" என்றவிதியால். (கூசுகூ)

மந்திரத்தரசன்காதன் மாதரம்பாவைதன்னைக்
கந்துகன் சிறுவன்வேட்டகடிவினைநொடியின்மற்றோர்
அந்தரவிசும்பிற்றேவர்க்கதிபதியாயகோமான்
இந்திரன்றனக்குமாகாதெனபதுநடந்ததன்றே.

இ - ள். மந்திரத்துஅரசன—விச்சாதரலோகத்தரசனது, காதல்மாதர் அம்பாவைதன்னை—விருப்பந்தரும அழகியபுத்திரியாகிய தத்தையை, கந்துகன்சிறுவன் வேட்டகடிவினை—கந்துகடன்புத்திரனாகிய சீவகன் கல்லியாணஞ்செய்த மணச்செயலை, நொடியின்—சொன்னால, அந்தரம்விசும்புஇல் தேவர்க்கு அதிபதி ஆய கோமான்இந்திரன் தனக்குஉம்—நடுவாகியவிண்ணுலகிலுள்ள தேவர்களுக்குஅரசனாகிய இந்திரனுக்கும், ஆகாது என்பதுநடந்தது—கூடாதென்னுஞ்சொல்நடந்தது.

ந - ரை. கலுழவேகன் மகளைககந்துகன் மகன்வேட்டமணவினையைக் கூறின், இந்திரனுக்குங்கூடாதென்று கூறுகின்ற கூற்றுநடந்ததென்க.

அந்தரவிசும்பு அந்தரமாகிய விசும்புஎனப் பொருள்கூறுதலும் ஒன்று. பாவை உவமையாகுபெயர். (கூசச)

அடிமணை பவளமாகவரும்பொனாலலகுசேர்த்தி
முடிமணியழுத்திச்செய்தமூரிகாழ்நெற்றிமூழ்கக்
கடிமலர்மாலைநாற்றிக்கம்பலவிதானங்கோலி
இடுபுகைமஞ்சிற்சூழமணவறையியற்றினாரே.

இ - ள். அடிமணைபவளம்ஆக—சுற்றுச்சுவர் பவளப்பலகையால்நிறைத்து, முடிமணிஅழுத்திசெய்த-தலையிலேமாணிக்கத்தை யழுத்திச்செய்த, மூரிகாழ்நெற்றி—பெரியதூணினைநாட்டி அதன்மேலே, அரும்பொன் ஆல்அலகு சேர்த்தி—அரியபொன்னாற்செய்தகையலகைச் சேர்த்தி, மூழ்க—அத்தூணினெற்றிமறையும்படி, கம்பலவிதானம்கோலி—ஆடையாகிய மேற்கட்டியைக்கட்டி, கடிமலர்மாலைநாற்றி—வாசமமைந்தமலராற்றொடுத்த மாலையைத் தொங்கவிட்டு, இடுபுகைமஞ்சில்சூழ—இட்டபுகை மஞ்சுபோலச்சூழ, மணவறைஇயற்றினார்—மணவறையைச்செய்தார்கள்.

ந - ரை. சுற்றுச்சுவர் பவளப்பலகையால் நிறைத்துத் தலையிலேமணியழுத்திப் பண்ணினதூணைநாட்டி அதன்மேலேபொன்னாற்செய்தகை யலகைச்சேர்த்தி அத்தூணினெற்றிமறையும்படி படாமாகிய மேற்கட்டியைக்கட்டி மாலையைநாற்றிப் புகைமஞ்சுபோலே சூழமணவறையை யியற்றினாரென்க. ()

ஐந்துமூன்றடுத்தசெல்வத்தமளிமூன்றியற்றிப்பூம்பட்
டெந்திரவெழினிவாங்கியின்முகவாசச்செப்பும்
சந்தனச்சாந்தச்செப்புந்தண்மலர்மாலைபெய்த
இந்திரநீலச்செப்புமிளையவரேந்தினரே.

இ - ள். இளையவராஐந்து மூன்றுஅடுத்த—இளையவர்கள் ஐந்தாயவொன்று மும்மூன்றாகஅடுத்த, செல்வத்து அமளிமூன்று இயற்றி—செல்வம்வாய்ந்த மூன்றுமெத்தைகளை யமைத்து, பூம்பட்டெந்திர எழினிவாங்கி — அழகியபட்டாலியன்ற எந்திரத்தோடமைந்த திரையையவளைத்து, இன்முகவாசச்செப்பும்—இனியவாசப்புகையமைந்த செப்பையும், சந்தனச்சாந்தம்செப்பும்—சந்தனக்குழம்புவைத்த செப்பையும், தண்மலர் மாலைபெய்த—தண்ணியமலராற்றொடுத்த மாலையைவைத்த, இந்திர நீலம்செப்பும — நீலமணியாலமைந்த செப்பினையும், ஏந்தினர்-ஏந்தினார்கள்.

ந - ரை. இளையவர் இயற்றிமஞ்சகவரியை வளைத்துச்செப்புகளை யேந்தினாரென்க.

ஐந்தாவன "சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேணமுறு தூவிசையையோடைந்து" இருவருந்துயில் கூருதற்குமொண்டும், போகநுதர்தற்கு ஒன்றும் ஆதலால் ஐந்துவகையாலமைந்த ஐந்து அமளிகள் ஒவ்வொன்றாக எண்ணியமூன்றாதலால் ஐந்துமூன்றடுத்த செல்வத்தமளிமூன்றுஎன்றார். சையை ஒருவகை மெல்லியமயிர். (௩௬௬)

கடைந்துபெய்மணிக்கைச்செம்பொற்காசறுதட்டிற்சூழ்ந்து
மிடைந்துபெய்மணிக்கட்பீலிமின்னுசாந்தாற்றிபொன்னார்
அடைந்துவீசாலவட்டமரிவையரேந்தியாற்றத்
தடங்கண்கள்குவளைபூப்பதத்தையலோடாடுமன்றே.

இ - ள். கடைந்து பெய்மணிகைை—கடைந்திட்ட மணிக்கையினையும், காசுஅறுசெமபொன் தட்டின்—குற்றமற்ற செம்பொன்னாலாகிய தட்டினையும், சூழ்ந்து மிடைந்துபெய்—தன்னைச் சூழ்ந்து நெருங்கப்பெய்த, மணிகண்பீலி — மரகதமணிபோலுங் கண்களையுடைய, பீலியையும் வாய்ந்து, மின்னுசாந்தாற்றி—விளங்குஞ் சிறுாலவட்டத்தையும், பொன்ஆர்-பொன்னாலமைந்த,வீசு—வீசாநின்ற, ஆலவட்டம்—ஆலவட்டத்தையும், அரிவையர் ஏந்திஅடைந்து ஆற்ற—பெண்களேந்தி அடைந்துவீச, தடகண்கள் குவளைபூப்ப—பரந்தகண்கள் குவளைபோல்மலர, தையலோடுஆடும் - தத்தையோடுகலந்தான்.

இதுமுதல் மூன்றுசெய்யுளும் ஒருதொடர். (௩௬௭)

பஞ்சுசூழ்பரவையல்குற்பசுங்கதிர்க்கலாபம்வீங்கச்
செந்தளிர்க்கோதைசோரக்கிண்கிணிசிலம்பேங்க
மைந்தருட்காமனன்னான்மகளிருட்டிருவனாளை
அந்தரத்தமரர்பெற்றவமிர்தெனப்பருகினனே.

இ - ள். பஞ்சுசூழ்பாவை அல்குல்—மெல்லிய ஆடைசூழ்ந்த பரந்த அல்குலில், பசுங்கதிர் கலாபம்வீங்க—பசிய கிரணத்தையுடைய கலாபம்

உடல்பூரித்தலாலிறுகவும், செந்தளிர் கோதைசோர—செவந்த தளிர்நெருங் கியமாலைசோரவும், கிண்கிணிசிலம்புஒடுஏங்க—சதங்கைசிலம்பிறேடொலிக் கவும், மைந்தர்உள்காமன் அன்னான்—புருடருள் மன்மதனையொத்த சீவகன், மகளிர்உள்திரு அன்னாளை—பெண்களுள் இலட்சுமியையொத்த தத்தையை, அந்தரத்து அமரர்பெற்ற அமிர்துஎன்ன பருகினான்—விண்ணுலகிலுள்ளதேவர்கள்பெற்ற அமிர்தத்தைப்போல இன்பம்பருகினான். (௬௬௮)

இளமுலைமணிக்கண்சேப்பவெழுதவிற்புருவமேறக்
கிளைநரம்பனையதீஞ்சொற்பவளவாய்திகழத்தேன்சோர்
வளமலர்க்கோதைதன்னைவாய்விடான்குழையப்புல்லி
அளமரலிலாதவின்பக்கடலகத்தழுந்தினானே.

இ-ள். இளமுலைமணிகண் சேப்ப—இளமைதங்கிய நீலமணிபோன்ற சூசகஞ்செவக்கவும், எழுதவிலபுருவம் ஏற—எழுதிய வில்லையொத்த புருவம் நெறறியிலேறவும், கிளைநரம்பு அனையதீஞ்சொல்—கிளையென்னும் நரம்பினையொத்த இனிய சொறகள்பொதிநத, பவளம்வாய்திகழ—பவளம்போன்றவாய்விளங்கவும், வளம்மலர்கோதை தன்னை—அன்றலர்ந்தமலராற் றொடுத்தமாலையையணிந்த தத்தையை, வாய்விடான்—அவ்விரண்டனையும்வாய்விடானாகி, குழையபுல்லி—குழையத்தழுவி, அளமரல்இல்லாத—சுழற்சியில்லாத, இன்பம்கடல்அகத்து அழுந்தினான்—இன்பமாகியகடலி லழுந்தினான். (௬௬௯)

இன்னணமொழுகுநாளுளிளமரககாவுகாண்பான்
பொன்னணிமார்பன்சென்றுபுகுதலுமொருவன்றோன்றித்
துன்னியோரோலைநீட்டித்தொழுதனன்பெயர்ந்துநிற்ப
மன்னியகுரிசில்கொணடுமரபினால்நோக்குகின்றான்.

இ-ள். இன்னணம் ஒழுகு நாள்உள்—இவ்வாறு நடக்குநாளில், பொன்அணிமார்பன்சென்று—இலக்குமி வசிக்கு மார்பையுடையசீவகன், இளமரக்காவு காண்பான்சென்றுபுகுதலும்—இளஞ்சோலையைக காணவேண்டிச்சென்றுபுக, ஒருவன்தோனறி—ஒருவிச்சாதரன்றோன்றி, துன்னி ஓர் ஓலைநீட்டி—அணுகியொருஓலையைநீட்டி, தொழுதனன் பெயர்ந்துநிற்ப—வணங்கிமீண்டுநிற்க, மன்னியகுரிசில்—அஙகுள்ளஅச்சீவகன், கொண்டு—அதனைவாங்கிக்கொண்டு, மரபினால் நோக்குகின்றான்—வழிபாட்டோடு வாசியாநின்றான்.

க-ரை. இவ்வாறுநடக்கின்ற நாளிலே திருத்தங்கியமாாபன் பொழிலைக்காண வேண்டிச்சென்று புகுந்தானாக, ஒருவிச்சாதரன் றோன்றியணுகியோலையைநீட்டித் தொழுதனனாய் மீண்டுபோய்நிற்க, அவன்அதனைவாங்கிக்கொண்டு வழிபாட்டோடே வாசியாநின்றானென்க.

தொழுதனன் முற்றெச்சம். (௬௭௦)

நாற்சீர்நாலடியால்வந்தஒருபோதுகோச்சகம்.

உருமுக்கதிர்வேற்கலுழனோலையுலகென்னும்
பருமைகருப்பளிங்கிற்புகழ்ப்பஞ்சிமுழுதடுத்த
திருமிக்குடைச்செல்வன்றிறற்சாமிநனிகாண்க
அருமையறனின்பம்பொருளாகெனவிடுத்தேன்.

இ - ள். உருமுகதிர்வேல் கலுழன்ஓலை — பகைவர்க்கு இடிபோன்ற ஒளிவாய்ந்த வேலையுடைய கலுழவேகனோலை, உலகுஎன்னும் பருமைகுரு பளிங்குஇல் — உலகென்னும்பரியசிறந்தங்கிய பளிங்கினில், புகழ்பஞ்சி-புகழாகியபஞ்சி, முழுதுஅடுத்த — ஓரிடமுமொழியாமற் பரந்த, திருமிக்கு உடைய செல்வன் — செல்வத்தை முற்பிறப்பின் தவமிகுதியினாலுடைய செல்வனாகிய, திறல்சாமிநனிகாண்க — வெற்றியையுடையசீவகன் மிகவுங்காண்பானாக, அருமைஅறன் இன்பமபொருள்ஆகஎன — அரியதருமமுமின்பமும பொருளும் மிகவுமுண்டாக வேண்டுமென்றுகருதி, விடுத்தேன் — இது வரவிட்டேன்.

க - ரை. கலுழனோலை செல்வனாகிய சாமிகாண்பானாக, இதுவரவிட்டேன், அறமும் இன்பமும் பொருளுந்தனக்கு இன்னுமிகவுண்டாக வேண்டுமென்றுகருதி.

தேவனாதலால் அறனின்பம்பொருளாகென இதுகூறினான். விட்டேன் என்றது விடுத்தேனெனவந்தது விகாரம். (௬௫௨)

தத்தையொடுவீணைமன்னர்தாம்பொருதுதோற்ப
மொய்த்தகலைநம்பிமுகிழ்முலையையிசைவெல்ல
வைத்தகதிர்வேலின்வலியார்க்குரியளென்னச்
சித்தங்கரிந்தாங்குக்கொடியான்செருவிளைத்தான்.

இ - ள். மன்னர்தாம் — அரசர்கள், தத்தையொடு வீணை பொருது தோற்ப — தத்தையோடு வீணையால் போர்செய்துதாங்கள்தோற்க, மொய்த்த கலைநம்பி-மிக்கநூற்கேள்வியையுடையசீவகன், முகிழ்முலையைஇசைவெல்ல- தாமரையரும்பையொத்த தனத்தையுடைய அத்தத்தையைஇசையால்வெல்ல, கொடியான் — கொடிய கட்டியங்காரன், வைத்தகதிர்வேலின் வலியார்க்கு — கூரியகிரணம் வாய்ந்தவேலாற் போர்செய்து வென்றவர்களுக்கு, உரியள்என்ன — இவளுரியாளென்றுசொல்லி, சித்தம்கரிந்து — மனங்கரிந்து, ஆங்குசெருவிளைத்தான் — அவ்விடத்தே போரைவிளைத்தான்.

க - ரை. மன்னர்தாம் தத்தையோடே வீணையாற் பொருதுதோற்க, தான் அவளைஇசையிலே வெல்லக்கட்டியங்காரன், அதுபொறாதே சித்தங்கரிந்து வேலாற்போர்செய்து வென்றாக்கு இவளுரியளெனச்சொல்லி, அவ்விடத்தே யொருபோரை விளைந்தானென்க.

வைத்த உரிச்சொல்லடியாகப் பிறந்த இறந்தகாலவினையெச்சம் வைபகுதி, தகரமெய்சந்தி, தகரமெய்இறந்தகாலவிடைநிலை, அ விகுதி. கரிந்து இறந்தகாலவினையெச்சம் கரிபகுதி. (௬௫௩)

தேன்முழங்குதாக்குரிசில் செம்பொனெடுந்தோமேல்
வான்முழங்குசெஞ்சிலையின்வாளிமழைதூவி
ஊன்முழங்குவெங்குருதிவேழமுடன்மூழ்க
வேன்முழங்குதானைவிளையாடியதுங்கேட்டேன்.

இ - ள். தேன்முழங்கு தார்குரிசில் — வண்டுகளொலிக்குமாலையையணிந்தசீவகன், செம்பொன் நெடுந்தோமேல் — செவந்த பொன்னாலாகிய நெடிய

தேரினமேல்நின்று, வெம்சிலைமுழங்கு வானின்—கொடிய வில்லாகிய முழங்குமேகத்தால், வாளிமழைதூவி—அம்பாகிய மழையைத்தூவுதலால், ஊன் முழங்கு வெம்குருதி—பகைவருடம் பிறந்ரேன்றிய கொடியஉதிரமாகியவெள்ளத்தில், வேழம்உடன்மூழ்க—யானைகள் சேரவழுந்த, வேல்முழங்கு தானை விளையாடியதுஉம் கேட்டேன்—வேலினால் ஆரவாரிக்குஞ் சேனையோடு நின்றுபோர்விளையாடியதுந் தூதன் கூறக்கேட்டேன்.

தூவிசெயவெனச்சத்திரிபு. சிலையென்வாளியெனவும்பாடம். (௩௫௩)

வந்துதூதன்கூறியவிவ்வாய்மொழியுமன்றி
முந்துவரன்மொழிந்தபொருண்முற்றுமவகைநாடிப்
பந்துபுடைபாணியெனபபாயுங்கலிமான்றோ
எந்தைதிறமுன்னாமுணர்ந்தின்னணம்விடுத்தேன்.

இ - ள் பந்துபுடை பாணிஎன்ன—பந்தினை யடிக்குங்கையைப்போல, பாயும்கலிமான்தேர் எந்தைதிறம்—பாய்ந்துசெல்லு மிக்கமணத்தையுடைய குதிரைபூட்டிய தேரையுடையஎந்திரத்தில், தூதன்வந்துகூறிய - தூதன்வந்து சொன்ன, இவாய்மொழியும அன்றி—இச்சொல்லுமலலாமல், முந்துவரன் மொழிந்த பொருள்—முற்பட்டுஅச்சணந்தி சொன்னகாரியமும், முற்றும்வகைமுன்னம்நாடி — முடிவுபெறுமவகையை முன்னே யாராய்ந்துணர்ந்து தெரிந்து, இன்னணம்விடுத்தேன்—இனிநாஞ்செல்லுதல் தககதல்லவென்று தத்தையை ஸ்ரீ தத்தனுடனே வரவிட்டேனென்க.

௩ - ரை. எந்தைதிறததில்அத்தூதன்கூறியமொழியும், அன்றிவரன்மொழிந்த காரியமும், முடியுமகூறுபாட்டையு முன்பேகுறிப்பாலே நாடியுணர்ந்துஇனியாஞ்சேறல்கருமம் அன்றென்றுகருதித தத்தையை ஸ்ரீ தத்தனுடனே வரவிட்டேனென்க.

தானே முன்புவரில் சீவகன்சரிதம் இலலையாதலால் இன்னணம்விடுத்தேன் என்றான். அப்பாதமொழியென்பதுதோனற வாயென வேண்டாகூறினர். (௩௫௪)

எள்ளுநர்கள்சாயவெனதோளிரண்டுநோககி
வெள்ளிமலைமுழுதுமகொடியெடுத்ததிகலேத்திக்
கள்செய்மலர்மார்பனுறுகாப்பிகழ்தலின்றி
உள்ளுபொருளெம்முணாத்தியன்றியுளவேண்டா.

இ - ள். எனதோள் இரண்டும்நோக்கி—என்னுடைய தோள்களிரண்டையும் நோக்கி, எள்ளுநர்கள்சாய—இகழ்ந்திருக்கும்பகைவர்சாயுமபடி, இகல்ஏத்தி—தான்போர்செய்த போரினைவாழ்த்தி, வெள்ளிமலைமுழுதும் கொடிஎடுத்தது(தனதுவெற்றி யெனதேயாதலால்)எனதுவெள்ளிமலைமுற்றும் வெற்றிக்கொடியெடுத்தது, கள்செய்மலர்மார்பன்—தேனொழுகு மலர்மாலையணிந்தமார்பையுடைய சீவகன், உறுகாப்பு இகழ்தல்இன்றி—மிக்க காவல்வழியினின்று, உள்ளுபொருள்—தான்கருதுங் காரியத்தை, எம்உணர்த்திஅன்றி-எமக்குத் தெரிவித் தல்லாமல், உள்ளவேண்டா — இனி தானினைத்தல் வேண்டா.

ந-ரை. என்னுடைய தோளிரண்டையு நோக்கியிகழ்ந்திருக்கும் பகைவர்சாயும்படி தான்பொருத போரையேத்தி மலேமுழுதங்கொடியெடுத்த தாதலால், தனது வெற்றியுந்தோல்வியும் எனதேயாதலின், இனிமலர்மார்பன் மிக்ககாவலை யிகழ்தலின்றித் தானினைத்திருக்கின்ற காரியங்களும், எம்மை யறிவித்தல்லது மேல்நினைக்கவேண்டா வென்க.

உன்னைப்பகைவரிகழ்ந்தது என்னையாதலால் எனதோளிரண்டுநோக்கி யெள்ளுநரெனவும், அதனுல் வெற்றியுந்தோலவியும் என்னதாதலால்இகலேத்திக்கொடியெடுத்தது எனவும், என்மகளைவரிததமையால் என்காப்பினின்றுங்கடத்தல் கூடாதெனவும், தானினைக்குங்காரியம் எனக்குத்தெரிவித்தல்லாமல் தானொன்றும் இனிக்கருதுத லொழிகவெனவுங் கூறுவான் காப்பிகழ்தலின்றி—உள்ளுபொருளெம முணாத்தியன்றியுளவேண்டா வெனவுங்கூறினான். பின்வருதல் காரணமாலேயணி. (கரு௫)

ஆமபொருள்களாகுமதுயாாக்குமழிக்கொணுைப்
போம்பொருள்கள்போகுமதுபொறியின்வகைவண்ணம்
தேம்புனலைநீர்க்கடலுஞ்சென்றுதரலின்றே
வீங்குபுனல்யாறுமழைவேண்டியறியாதே.

இ-ள் ஆம்பொருள்களாகும்—ஆகும்பொருள்களாகும், போமபொருள்கள்போகும—போகும்பொருள்கள்போகும், அதுயார்க்கு உம் அழிக்கஒண்ணு—அதுஎவர்க்கும் அழிக்ககூடாததன்மை, அது பொறியின்வகைவண்ணம்-அதுஇருவினையின்பகுதியாகிய இயல்பு, நீர்கடலும்—உப்புநீரையுடைய கடலும், சென்று—உலகத்தேவந்து,-தேம்புனலை-இனியநீரை, தரல் இன்று-தருதல்எக்காலத்துமில்லை, மழை—மேகம, யாறுவீங்குபுனல் — யாற்றுமிக்க நீரை, வேண்டி அறியாது — கொடுக்கவிருமபியறியாது.

ந-ரை அழிக்கொண்ணுநு அது பொறியின் வகைவணணம், அதுவேயுமன்றிக கடலுந்தரலின்று; மழையும் வேண்டி யறியாதென்று வாசித்தானென்க

கட்டியங்காரன் ஆககத்திற்கும் சசந்தனழிவிற்கும் வருந்தாதொழிகவென்பான் ஆம்பொருள்களாகும், போம் பொருள்கள்போகும எனவும்; தீயகுணத்தையுடையோர் பிறாககு இனிமைசெய்ய அறியாராதலால் கட்டியங்காரன் நமக்குநதீஙகுசெய்வா னென்பான் தேம்புனலை நீர்க்கடலுஞ் சென்றுதரலின்றுஎனவும, மேகம் ஆற்றுக்குமிகவும் நீரைக்கொடுக்க விரும்பியறியாது என்றதனுல் உவர்த்தநீரை நன்னீராககி ஆற்றிற்குக் கொடுப்பேனென்னுங் கருத்து இல்லாமைமேகத்திற்கு இயல்பாதல்போல, நற்குணமுடையோர் எககாலத்தும்பிறர்க்கு இனிமைசெய்வாராதலால் தான்எக்காலததும்பிறர்க்கு இனியவைசெய்க வென்பான் வீங்குபுனல்யாறுமழைவேண்டி யறியாதெனவுங்கூறினன். கடலவேண்டாதிருக்க நீர்தானே போனது போம்பொருட்கு உவமைஎனவும், ஆறுமேகத்தை வேண்டாதிருககப் புனல்தானேநிறைகை ஆம்பொருட்கு உவமையெனவுங கொள்க இதுகாறுந் திருமுகவாசகம் எனக் காண்க. அழிப்புன்னுை என்வுமாட

மன்பெரியமாமனடி மகிழ்ந்து திசைவணங்கி
அன்பின்கலாதவனை விடுத்தலர்ந்தகோதைக்
கின்பநிலத்தியன்றபொருளிவையிவை நுங்கோமான்
தந்தவெனச்சொல்லிநனிசாமிகொடுத்தானே.

இ-ள். சாமி—சீவகன், மன்பெரியமாமன்அடி—மிகவும்பெரியமாமன் பாதத்தை, மகிழ்ந்துதிசைவணங்கி—மகிழ்கூர்ந்து திசையைநோக்கிவணங்கி, அன்பின்அகலாதவனை—அன்பினின்றுநீங்காததரனை, விடுத்து—போகவிட்டு, அலர்ந்தகோதைக்கு—மலர்ந்தமாலையணிந்ததத்தைக்கு, இன்பம்நிலத்து நனி இயன்றபொருள்—அனுபவிக்கும்இன்பத்துறைகளுக்குமிகவுமமைந்தபொருள் கள், இவைஇவைநும் கோமான்தந்தவென்னசொல்லி—இப்பொருள்கள்நுமது பிதா தந்தபொருள்களென்றுசொல்லி, கொடுத்தான்—கொடுத்தனன்.

ந-ரை. சாமிமிகப்பெரியமாமனடியைத் திசைநோக்கி வணங்கி, அன் பினால் நீங்காது நின்றதரனைப்போகவிட்டுத் தத்தைக்கு நுங்கோமான் தந் ததின்ப நிலத்திற்கு நனியியன்றபொருள் அவையிவையெனச் சொல்லிக் கொடுத்தான் என்க

அடிவீழ்ந்து எனவும்பாடம். அலர்ந்தகோதை-முதல் சினைக்குஒற்றுமை யுண்மையால சினைவினை முதலொடுமுடிந்தது. (௬௫௭)

குங்குமமுஞ்சந்தனமுஞ்கூட்டியிடுகொடியா
வெங்கணிளமுலையின்மிசையெழுதிவிளையாடிக்
கொங்குண்மலர்க்கோதையொடுகுரிசில்செலும்வழிநாள்
அங்கணகாப்பட்டபொருளாகியதுமொழிவாம்.

இ-ள். வெம்கண—விரும்புஞ்சுகத்தையுடைய, இளமுலையின்மி சை—இளமைதங்கிய முலையின்மேல், இடுகொடிஆக—எழுது கொடியாக, குங்குமம்உம் சந்தனமஉம் கூட்டிஎழுதி—குங்குமக்குழம்பையுஞ் சந்தனக் குழம்பையுங் கூட்டியெழுதி, கொங்குஉணமலாகோதை ஒடுவிளையாடி—வாச மிக்க மலராற் றொடுத்தமாலையையணிந்ததத்தையோடுவிளையாடி, குரிசில்செ ல்லும் வழிநாள்—சீவகனநடசகும்பினனாளில், அம்கண்நகர்பட்டபொருள்- அழகியஇடத்தையுடையநகரிலநிகழ்ந்தநீாவிளையாட்டையும,ஆகியதுஉம்(சீவ கனிடத்து)நிகழ்ந்ததன்மையையும் மொழிவாம்-இனியெடுத்துக்கூறுவாம்.

ந-ரை. குரிசில்கோதையுடைய முலைமேலே யெழுதுகொடியாகவெழு தி, அவளோடேவிளையாடிசசெல்லும் பின்னாட்களிலே, நகரியிற்பிறந்தநீர்வி ளையாட்டும, பிள்ளையாரிடத்தாகிய தன்மையும்இனிக்கூறுவோம்என்றார்என்க.

ஆகியது என்றதுநீாவிளையாட்டாற பிள்ளையாரிடத்துப்பிறந்த செய்திக ளை. பொருள்என்பதனிறுதியில் எணணும்மைதொகுத்தல். எழுதிவிளையாடி என்னும இறந்தகாலவினையெசசங்கள ஒன்றனை யொன்றுகொண்டு செல் லும்என்னும்பெயரெச்சததின் முதனிலையோடுமுடிந்தது (௬௫௮)

காந்தருவதத்தையார்இலம்பகம முற்றிறறு.